Popular Drama Series No. 2.

# DARU KHAGHASVAM

*(A Wooden Flying Horse.)*

---

BY

R. SUBRAHMANYA SASTRI.

PUBLISHED

BY

M. V. BOOK DEPOT, VEPERY,—MADRAS.

1904.

---

 [PRICE AS. 14.

# மதராஸ், வேபரி, மதுகரவேணி விலாசம் புஸ்தகசாலையிலுள்ள, சர்க்கார் சட்ட புஸ்தகங்கள்.

---

1. ஹிந்து லா.—விலை தபால் சிலவுடன் அணா 13.

இதில் ஹிந்துக்கள் செய்கிற விவாகங்கள், சட்டவிரோதமான விவாகங்கள், விவாகத்தை ரத்து செய்தல், பெண்சாதியை நீக்குவது, சுவாதினப்படுத்துவது ஜீவனும்சம் கொடுப்பது, புனர்விவாகம், ஸ்வீகார மெடுத்துக்கொள்ளலாமென்பது, ஸ்வீகார மெடுத்துக்கொண்டபிறகு பிள்ளை பிறந்தால் ஸ்வீகாரப் பிள்ளையின் பாகம், மைனர்கள், விதவைகள் ஸ்வீகார மெடுத்துக்கொள்வது, பெண்சாதிக்கு ஸ்வீகாரஞ் செய்துகொள்ள அதிகாரங் கொடுப்பது, திட்டில் செய்த ஸ்வீகாரமும் விவாகமும் சொல்லாதென்பது, மைனர்களை காப்பாற்றுவது, விபசாரியான தாயிடமிருந்து குழந்தைகளைப் பிரிப்பது, பொதுக் குடும்பம், பிதுரார்ஜித சுவயார்ஜித சொத்துக்கள், பொதுக்கடன், பொதுச்சிலவு, பொதுவரும்படி இவைகள் எல்லாரையும் சேருமென்பது, துர்வினியோகம் பொதுக் குடும்பத்தாரைக் கட்டுப்படுத்தாதென்பது, உயில்கள், வைப்பாட்டி, விதவை இவர்களின் ஜீவனும்சம், விபசாரியான விதவைக்கு ஜீவனும்சங் கிடையாதென்பது, பாகம், ஜமீன் சொத்தை பாகிக்கக் கூடாதென்பது, பிறவிக்குருடு, செவிடு, ஊமை, குஷ்டரோகி இவர்களுக்கு பாகங் கிடையாதென்பது, ஸ்திரிதனம், ஸ்திரிதன பாத்தியஸ்தர்கள், வார்சுகளின் வரிசைக்கிரமம், ஜாதிப்பிரஷ்டனான பிள்ளைக்கு வார்சு பாத்தியமில்லையென்பது, பெண்கள் வார்சாவது முதலிய விஷயங்களும், அனேக ஹைகோர்ட்டு, தீர்ப்பை யனுசரித்து எழுதப்பட்டிருக்கின்றன.

2. பெரிய விவகார சிந்தாமணி.—விலை ரூ. 2-4-0.

இதில் ஸ்டாம்பு, ரெஜிஸ்ட்ரேஷன், கோர்ட்டுக் கட்டணம், கால நிர்ணயம், இன்கம்டாக்ஸ், விவசாயத்திற்கும் கிணறு முதலியவை வெட்டுவதற்கும் சர்க்காரில் கடன் வாங்குவது. தபால், தந்தி தந்திமணியார்டர், வட்டிக்கணக்கு சம்பளக்கணக்கு, வருஷக்கணக்கு, இவைகளை சீக்கிரம் கண்டுபிடிக்கிறவிதம், பத்திரங்களின் மாதிரி, பத்திரங்கள் எழுதவேண்டிய விதமும், அதன் ஷரத்துகளும், அதற்கு ஒட்டவேண்டிய ஸ்டாம்பு இவ்வளவென்பது, கடன் பத்திரம்,அடமானப்பத்திரம், ஒத்திப்பத்திரம், ஈடு, தானசாசனம் மேபோபர் பத்திரம், வாடகைப்பத்திரம், போக்கியம், உடன்படிக்கை, ஜாமின், பாகம் பரிவர்த்தனை, ஸ்வீகார அதிகாரம், முச்சிலிக்கா, அதிகாரப் பத்திரம், வக்காலத்து, பவர் ஆவ் அட்டர்ணி, விடுதலைப்பத்திரம், குத்தகைப்பத்திரம், பொறுப்பப்பத்திரம், விற்பனை, முதலிய அனேக பத்திரங்கள் எழுதும் விதமும் சிவில் கோர்ட்டில் நடத்தவேண்டிய சகல விவகாரங்களும் அடங்கியிருக்கின்றன.

3. ரேவினியூ சட்டம்,—விலை ரூ. 1-4-0.

இதில், ரயித்துவாரி நிலங்களுக்கு தீர்வை போடுவது, சொந்த ஏரி, சர்க்கார் ஏரி, இருபோக சாகுபடி, ஒருபோக சாகுபடி, ஹக்கு சாசனம், பட்டாவை மாற்றுவது, நிலங்களை உட்பிரிவு செய்வது தர்க்காஸ்து, புரம்போக்கு நிலங்கள், கிஸ்தி வசூல், கிஸ்தி வசூலை நிறுத்துவது, வஜாசெய்வது, ஜமீன்களின் அதிகாரம், வீடு கட்ட சர்க்காரில் நிலங் கொடுப்பது, ஜப்தி, ஏலம், நிலவிருத்திக்காகவும், உழவு மாடு விதைவாங்குவதற்கும் சர்க்காரில் கடன் வாங்குவது, தண்ணீர் தீர்வை, இனம் நிலங்களுக்குத் தண்ணீர் தீர்வை, கிராமக் கணக்குகள், ரெவினியூ அதிகாரிகள் செய்த அக்கிரமங்களைத் தெரிவித்தவனுக்கு சர்க்காரில் இனம் கொடுப்பது,ரோட்டுசெஸ் முதலிய மற்ற வரிகள், கலெக்டர் ரெவினியூ போர்ட் இவர்களுக்கு அப்பில் செய்கிறவிதம், மேல்வார குடிவார பாத்தியங்களை வசூல்செய்வது 1865-ஹூ த்து 8-வது ஆக்டின்படி ஜமீன் கிராமங்களில் நடத்த

வேண்டிய நடவடிக்கைகள், முதலியரெவினியூசம்பந்தமான அனேக விஷயங்கள் சொல்லப்பட்டிருக்கின்றன.

4. சீவில் லா.—விலை ரூ. 2-4-0.

இதில் டிஸ்ட்ரிக்ட் ஜட்ஜ் கோர்ட், முனிசிப் கோர்ட்டு, சப் ஜட்ஜி, ஹைகோர்ட்டு, இவைகளில் சீவில் வியாச்சியங்கள் செய்வது, மனுக்கொடுப்பது, டிக்கிரி பெறுவது, நிறைவேற்றுவது, ஜப்தி ஏலம் முதலான சீவில் சம்பந்தமான சகல நடவடிக்கைகளும் அடங்கியிருக்கின்றன.

5. மகமதியன் லா.—விலை ரூ. 2-4-0.

இதில், மகமதியர்கள் அனுசரிக்கவேண்டிய சல்யாணம், வார்சு பாத்தியம், வார்சுகளின் பிரிவுகள், வார்சுகளின் வரிசைக்கிரமங்கள், புருஷன் பெண்சாதிக்குள்ள சம்பந்தங்கள், அவர்கள் ஒருவரை யொருவர் நீக்குவது, ஸ்திரி தனங்கள், தர்ம சொத்துக்கள், விற்பனைகள், பக்கபாத்தியங்கள், உயில்கள், தர்ம சொத்தை பரிபாலிப்பதும் அவகளை திருப்பி எடுத்துக்கொள்ளுவதும், மைனர் கார்டியன்கள், மைனர் சொத்தை காப்பாற்றுவது, அடிமைகள், அடிமைகளை சிறைநீக்குகிறவனுடைய அதிகாரங்கள், வேறு மதங்களை யனுசரிக்கிறவர்களுக்குச் சொத்துச் சேராதென்பது, கொரானில் ஏற்பட்ட சொத்து பாத்தியஸ்தர்கள் முதலிய மசமதிய சட்ட சம்பந்தமான அனேக விஷயங்கள் சேர்க்கப்பட்டிருக்கின்றன. இது மகமதிய ஹைகோர்ட்டு வக்கீல் ஒருவரால் அரேபி, பார்சி, துலுக், ஹிந்துஸ்தானி முதலிய பழையகாலத்து சாஸ்திரங்களிலிருந்தும், தற்காலத்திய இங்கிலீஷ் சட்டங்களிலிருந்தும், ஆராய்ந்தெடுத்து, எல்லா ஹைகோர்டடுத் தீர்மானங்களையும், பிரிவி கவுன்சில் திக்மானங்களையும் அனுசரித்து எழுதப்பட்டிருக்கின்றன.

6. கிரிமினல் லா.—விலை ரூ. 2-8-0.

இதில் மாஜிஸ்ட்ரேட்டுகள், டிப்டிகலெக்டர்கள், சப் அல்லது ஜில்லா கலெக்டர்கள், செஷன் ஜட்ஜிகள், ஹைகோர்ட்டார் இவர்கள் கிரிமினல் கேசுவிஷயமாய் இன்னின்ன அதிகாரங்களைச் செலுத்தலாமென்றும், போலீசார்கள் இன்ன கேசுகளைமட்டும் பிடிக்

கலாம், இன்ன கேசுகளை விசாரிக்க அதிகாரமில்லையென்பது, அப்படிப் பிடிக்கிற கேசுகளில்கூட உடனே ஜாமீன் வாங்கிக்கொண்டு விட்டுவிட வேண்டுமென்றும் ஜாமீனைப், பிடித்தவிடத்திலேயே வாங்கவேண்டுமேயொழிய ஸ்டேஷனுக்கு அழைத்துக்கொண்டு போகக்கூடாதென்பது, சோதனைபோடுவது, ஜூரி, அசெசர், இவர்களுடைய சுதந்திரங்கள், ஹைகோர்ட்டு, பிரிவிகவுன்சில் முதலான விடங்களுக்குள்ள அதிகாரங்கள், சம்மன்கேசு, வாரண்டுகேசு, ஜாமீன்கேசு, ராஜியாகிற கேசுகள், குற்றங்களின் தன்மையும், அவைகளுக்கு தண்டனையின் விபரமும் காலமும், ஒரு கோர்ட்டிலிருந்து மற்றொரு கோர்ட்டுக்கு கேசுகளை மாற்றிக்கொள்வது, அக்கிரமமாய் பிராது கொண்டுவந்தவர்கள் பேரில் மானநஷ்டத்துக்குப் போவது முதலான கிரிமினல் சம்பந்தமான சகல விஷயங்களும் இதில் அடங்கியிருக்கின்றன.

---

## வேத புஸ்தகங்கள். கிரந்த எழுத்தில்,

7. யஜுர் வேதாந்ஹிகம்.—விலை அணா. 6.

இதில். யஜுர்வேதிகளாயுள்ள பிராமணர்கள் பிரதிதினம் செய்யவேண்டிய சகல வைதிக கர்மங்களும் அடங்கியிருக்கின்றன.

| | | | | |
|---|---|---|---|---|
| 8. | யஜுர்திரிகால சந்தியாவந்தனம் | 0 | 1 | 0 |
| 9. | யஜுர் அமாவாசைத்தர்ப்பணம் (ருக்குடன்) | 0 | 1 | 0 |
| 10. | ஸாமவேதாந்ஹிகம் | 0 | 6 | 0 |
| 11. | ஸாமவேத சந்தியாவந்தனம் | 0 | 1 | 0 |
| 12. | ஸாமவேத அமாவாசைத்தர்ப்பணம். | 0 | 1 | 0 |
| 13. | ருக்வேத ஆந்ஹிகம். | 0 | 6 | 0 |
| 14. | ருக்வேத சந்தியாவந்தனம். | 0 | 1 | 0 |
| 15. | ருக்வேத அமாவாசைத்தர்ப்பணம். | 0 | 1 | 0 |
| 16. | போதாயண அமாவாசைத்தர்ப்பணம். | 0 | 1 | 0 |

## ஆச்சரியமான புதுக் கதைகள்.

| | | | | |
|---|---|---|---|---|
| 17. | இரத்ந விமானம் | 0 | 14 | 0 |
| 18. | தாரு சகாசுவம். | 0 | 14 | 0 |

19. நாகானந்தநாடகம் 0 14 0
20. சாகுந்தளம் 0 12 0

| | | | | |
|---|---|---|---|---|
| 21. வால்மீகராமாயண வசனம், | பாலகாண்டம் | 2 | 4 | 0 |
| | அயோத்தியாகாண்டம் | 3 | 6 | 0 |
| | ஷ இரண்டும் சேர்ந்து | 5 | 8 | 0 |

இராமாயணங்கள் பலவிருப்பினும் அவைகள் வால்மீகியினுடைய அபிப்பிராயத்தை ஒத்திராமல் மாறுபட்டிருக்கின்றன. இந்த புஸ்தகத்திலுள்ள ஒவ்வொரு சுலோகத்தையும் மொழிபெயர்த்து வசனரூபமாக எளிய தமிழ்நடையில் எழுதப்பட்டிருக்கின்றது. புஸ்தகம் வெகு உயர்ந்த கடிதத்தில் அச்சிட்டு அதிக மேலான பைண்டுசெய்து தங்க லிலிட்டு கொடுக்கப்பட்டிருக்கிறது மற்ற காண்டங்கள் இரண்டு மாதத்தில் வெளியாய்விடும்

22 மனுதர்ம சாஸ்திரம்,—ரூ. 2 8 0.

ஒவ்வொரு சுலோகத்திற்கு பக்கத்தில் தமிழ் மொழி பெயர்ப்பும் சேர்த்து அச்சிட்டிருக்கிற பெரிய கிரந்தம்

| | | | | |
|---|---|---|---|---|
| க்ரிமினல் ரிஜிஸ்டர் ... ... ... | 1-க்கு | 0 | 5 | 0 |
| சிவில் ரிஜிஸ்டர் ... ... ... | 1-க்கு | 0 | 5 | 0 |
| கியாலண்டர் (பாரம்) ... ... ... | 50-க்கு | 0 | 6 | 0 |
| சிவில் பிரதிவாதிசம்மன் ... ... | 100-க்கு | 0 | 5 | 0 |
| சிவில் சாட்சிசம்மன்... ... ... | 100-க்கு | 0 | 5 | 0 |
| க்ரிமினல் சாட்சி சம்மன் ... ... | 100-க்கு | 0 | 5 | 0 |
| குற்றவாளிசம்மன் ... ... ... | 100-க்கு | 0 | 5 | 0 |
| போலீஸ் ஸ்டேஷனுக்கு யாதாஸ்து புக்... | 1-க்கு | 0 | 6 | 0 |
| மாஜிஸ்ட்ரேட்டுக்கு ரிப்போர்ட்டு புக்... | 1-க்கு | 0 | 6 | 0 |
| பிரஸ்பட்டு மனுபாரம் ... ... | 50-க்கு | 0 | 6 | 0 |
| ஜப்திக்கட்டளை பாரம் ... ... | 100க்கு | 0 | 6 | 0 |
| (பிராது) பிளெயிண்டு பாரம் ... ... | 50-க்கு | 0 | 6 | 0 |
| வக்காலத்து நாமா ... ... ... | 50-க்கு | 0 | 6 | 0 |

# புது கிராமமுனிசீப் சட்டம்.

இதில் கிராமமுனிசீப்கள், கர்ணன்கள் இவர்களுக்கு சம்பந்தப் பட்ட சிவில் கிரிமினல் விஷயங்களடங்கிய சகல சட்டங்களையும், வேறு உபயோகமுள்ள பல புதுர்சட்டங்களையுஞ் சேர்த்து நாளது தேதி வரையில் சர்க்காரால் திருத்தப்பட்டபடி அச்சிட்டிருக்கிறேம்.

இதன் கிரயம் ரூ. 1-4 சோல்பகாபிகள் தான் அச்சிடுவதால் வேண்டியவர்கள் உடனே வாங்கவேண்டும். பிறகு ஏமாறவேண்டாம். ரத்தாய விட்ட பழையசட்டங்களை விற்கிறவரிடத்தில்வாங்க வேண்டாம்,

புஸ்தகங்களை ஒரேசமயத்தில் 5-ரூபாக்குவாங்கினுல் தபாற் சிலவில்லாமல் அனுப்பப்படும்.

மதுகரவேணிவிலாசம்புஸ்தகசாலை,
வேபரி, மதராஸ்.

## இந்நாடகத்தின் வியக்திகள்.

### புருஷர்கள்.

சோமசேகரன்—கலிங்கதேசத்தரசன், சுட்வாங்கனின் தந்தை.

வித்யுத்ஜிஹ்வன்—ஷை யார் மந்திரி, ஜலஜாக்ஷியின் தந்தை.

சட்வாங்கன்—இந்நாடகத் தலைவன், கலிங்கதேசத்தரசன் குமரன்.

வீரவர்மன் ஷை தேசத்து மந்திரிமகன், சுட்வாங்கனின் இன்னுயிர்த் தோழன்.

புஷ்பபாணன்—சாளுவதேசத்தரசன், லீலாவதியைக் கண்டு காதலுற்றவன்.

மதிவல்லபன்—ஷை தேசத்து மந்திரி.

சுகுணபூஷணன்—மச்சநாட்டிறைவன்? லலிதாங்கியின் தந்தை.

சுந்தரவதனன்—ஷை தேசத்து மந்திரி.

வஜ்ரதேந்தன்—மகதநாட்டிறைவன், கமலாக்ஷி மீது காதலுற்றவன், கலாவதியின் தந்தை.

சல்லாபவாக்கியன்—ஷை மந்திரி, விலாஸவதியின் தந்தை.

சுமந்தன்—விதர்ப்ப நாட்டரசன்

மதிவான்—ஷை மந்திரி.

### ஸ்திரீகள்.

லீலாவதி—கலிங்கதேசத்தரசன் மகள், மறுவேடப் பெயர் காரியதுரந்தரன்.

சுந்தரவதனை—ஷை தாஸி.

ஜலஜாக்ஷி—ஷை. மந்திரிமகள்.

குசுமவதி—ஷை தாஸி.

குணபூஷணி—தாஸி, சாளுவதேசத்தரசனிடமிருந்து லீலாவதியை காத்தவள்.

லலிதாங்கி—மச்சநாட்டரசன் புதல்வி.

இரத்தினாங்கி—ஷை யாளின்தாஸி.

கமலாக்ஷி—விதர்ப்பநாட்டரசன் மகள்.

இரத்திநாங்கி
பிரியவசனா } தாஸிகள்.

கமலாவதி—மகதநாட்டரசன்மகள்.

விலாஸவதி—ஷை. மந்திரிமகள்

இந்நாடகத்தினிடையே வருபவர்கள்.

கம்மியன், சேவகர், கள்ளர், கண்ணுவர்?
மந்திரவாதிகள்.



T. G. [illegible]



# தாரு ககாசுவம்.

## முதல் அங்கம்.

---

பிரஸ்தாவனை.

(முதலில் சூத்திரதாரன் பிரவேசிக்கிறன்.)

## மங்களம்.

---

சூத்திரதாரன். உலகத்தில் விதியென்னும் ஒருவஸ்து விருக்கின்றது. அதுமகாத்மாக்களான முமுக்ஷுக்களேயும் விடாவென்பதும், உலகின்கண்ணுள்ள மானிடர்கள் அவரவர்களது கர்மானுபவங்களே யவசியமனுபவித்தே தீரவேண்டுமென்பதும், எத்தகையோருக்கும் ஆபத்துள தென்பதும், அவ்வாபத்துக் காலத்திற்கூட தன்னைப் பஜிக்குமடியார்களுக்கு ஸாக்ஷாத் லோகேசரருள்சுரந்து காப்பாற்றுவாரென்பதையும், மானிடர்களாகிய யாவரும் திண்ணமாவெண்ணவேண்டுமெனக் கோருகின்றேன். நாம் இந்நகர்ப்போந்து பலவருடங்களாயும் அநேக நாடகங்கள் எனது பாலீசர்களால் நடிப்பிக்கப்பட்டிருப்பதை சபயோர்கள் நுண்ணிய மனத்தினராய் கண்காணித்திருப்பினும், இப்பொழுது யானின்று ஒருநவீனநாடகத்தால் இச்சபையோர் மனங்களிப்புறக்கருதினன். ஆபின், அது நிமித்தம் நமது காதலியுடன் சிறிதாலோசிப்பாம்.

(நேபத்தியத்தை நோக்கி) ஆர்யே! சிறிதிவண்வருதி?

நடிபிரவேசிக்கிறாள்.

நடி. ஆர்ய! அடியாள் அடி பணிகின்றேன். என்னை யழைத்த காரணம் யாதுளது? விக்ஞாபனம் செய்யவேண்டும்.

சூத்திரதாரன். ஆர்யே! இதோ இன்று இச்சபையையும் சபயோரையுங்கிஞ்சித்து அவலோகனஞ் செய்? ஏதோ நூதனமாகத் தோற்றவில்லையா? ஆகையால், இன்று ஒரு நவீன நாடகத்தால் அவர்கள்மனதை சந்தோஷிப்பிக்கக் கருதி நின்னுடன் ஆலோசிக்க இவண் அழைத்தேன்.

நடி. ஆர்ய! இதுவிஷயத்தைப் பற்றி தாம் ஆலோசிக்கக் காரணம் ஏதுளது? முன்னமேநாமிருவரும் சூழ்ச்சி செய்து "தாரு சகாசுவம்" என்னும் ஒருநூதன நாடகமியற்றியிருப்பது தாம் அறியிலிரோ? ஆகையால் அந்நாடகத்தால் இச்சபையோர்கள் மனதை ஆனந்திக்கச் செய்யலாகாவோ?

சூத்திரதார். ஆர்யே! நல்லசமயத்தில் ஞாபகப்படுத்தினாய். சபாஷ்! அவ்விதமே செய்வோம். நீநேபத்தியத்திற்குள் சென்று பாத்திரங்களை தயார்செய்? நான் ஹாஸ்யபுருஷனை பிரார்த்தித்து இவண் வைத்து வருகின்றேன்.

(நடிநிட்கிரமித்தல்).

(விதூஷகன் பிரவேசிர்கிறன்.)

சூத்திரதார். மித்திரா! நான் இன்று "தாரு சகாசுவம்" என்னும் ஒருநவீனநாடகத்தால் இச்சபையோர்களை ஆனந்திக்கச் செய்ய விருப்புற்றதால், தாம் இவணிருந்து ஹாஸ்யரசத்தை சம்பூரணஞ் செய்ய வேண்டும்?

விதூஷகன். பூஜ்ய! தமது ஆக்ஞாபனத்தின் வண்ணம் நடக்கமனமுவந்தேன். ஆயினும், சரித்திரத்தைசூக்ஷமமாக கிஞ்சித்துகேட்க அவாக்கொண்டிருக்கிறேன்.

சூத்திரதார். ஙேயா! அங்ஙனமாகுக! சிறிது இவண் கவனி?

## நாடகத்தின் சுருக்கம்.

### முதல் அங்கம்.

அங்கதேசத்தரசகுமாரன் கட்வாங்கன் மந்திரிகுமாரன் வீரவர்மனுடன் புறக்களை விட்டுவிளையாடுகையில், இரண்டு புறக்களும் பிரிந்து பறந்துபோக, ஒவ்வொருவரும் தன்தன் புறக்களைப் பின்தொடர்ந்து செல்லாகிற்ப, அதில் மந்திரி குமரன் புறு, அப்பொழுது அந்நகரத்து உத்தியானவனத்தி ற்குதன்னின்னுயிர்த்தோழி சுந்தரவதனளுடன் மலர் கொய்ய வந்திருந்த அந்நாட்டரசன் மகளான லீலாவதி கையிற்பிடி பட, அதையுணர்ந்தமந்திரிகுமரன் அவண் நண்ணி புறுவை க்கேட்க, இருவரும் மோகாங்கிதமான மொழிகளைப்பேசி, பின் மந்திரிகுமரன் அரசன் ஆக்ஞைக்கு அஞ்சினனாயினும், அன்னவளுடன் அன்பு மொழிபகறி சங்கேதஸ்தானத்தில் இருவருங் கூடி அந்நகர் நீங்கிமறுநகர் செல்வதெனக்கருதி மொழிபகறி, புறுவைப்பெற்றுச்சென்று அரசகுமரன் வரவுக் கெதிர்ப்பார்த்திருப்ப, அப்போழ்தரசகுமரனது புறு, தனது ஆறுயிர் சகியான சூக்ஷமவதியுடன் தனது உப்பரிகையில் விளையாடிக்கொண்டிருந்த அத்தேசத்து மந்திரிகுமரி ஜலஜாக்ஷியிடம் அகப்பட, அதையுணர்ந்த வரசகுமரன் அவண் நண்ணி, ஜலஜாக்ஷிமீது காதல் கொள்ள, அவளும் காதல டைந்தனளெனினும், தனது பிராதாவான வீரவர்மன் மனம் ஒப்பில் தனக்குச் சம்மதமெனப் புகன்று, புறுவை யளிக்க அதைப்பெற்று வீரவர்மனின் மனோபாவத்தை அறிய நாடி வருங்கால், இருவரும் சந்தித்து பிரியமொழிபகற, பின் அரசகுமரன் மந்திரிகுமரனிடம் ஜலஜாக்ஷியை தனக்கு

கொடுக்கும்படி வேண்ட, அவனும் சம்மதித்து, அதன்பின் பரசனிடம் தான் ஏதேனும் மனவருத்தமுற நடப்பின், தன்னைக்காப்பதாக அரசகுமாரனிடம் வாக்குறுதி வாங்கிகொண்டு, இருவரும் இராஜசமுகம் சென்றார்கள்.

**2-வது அங்கம்.**

அப்பொழுது அவையின்கண் சோமசேகரராஜன் தன் மந்திரி வித்யுத்ஜிஹ்வனுடனிருந்து இராச்சிய விசாரணைசெய்திருக்கையில் அவண் சிங்களதேசத்து கம்மியனொருவன் ஒரு சூத்திரப்புரவியுடன் நண்ணி, அதன் விந்தையையோதிப்பரீட்சையும் காண்பிவித்து சம்பாஷித்திருக்குமமயத்து இராஜகுமரனை கட்வாங்சனவாவுடன் ஓடிவந்து, அச்சூத்திரப் பரியேறிவிசைக் கருவியை முடுக்க, பரி ஆகாயத்திற்செல்லக்கண்ட கம்மியன் திப்பிரமையுற்று மயங்கி நிற்ப, பின் அரசன் கோபங்கொண்டு கம்மியனை சிறைவைக்கப் பணித்தனன். அன்று இரவு இராஜகுமரியும் மந்திரிகுமரனும் நகர்நீங்கி வனம் சென்று மறுநாட்டை நாடிச்செல்லும் அமையத்து, நடுவில் சோரர்கள் மறித்து அவர்கள் ஆடையாபரணங்களைப் பறித்துச்செல்ல, இருவரும் மனம் நொந்து சாளுவதேசவத்தோரம் சென்று வனத்தின் ஓர் புறத்திருந்து பசியினால் வருந்தி துயருற்று பின் தேறி, இராஜகுமரி தானணிந்திருந்ததும் திருடர்கையி லகப்படாததுமான ஓர் வைரகண்டசரத்தை மந்திரிகுமரன் பாலளித்து விற்று வரப்பணிக்க, விலைப்படுத்தச் சென்ற மந்திரிகுமரன் வியாபாரிகளது பொறாமையினால் திருடனென அரசன் பால் செப்ப, அரசன் அவனது வாய்ப்பிறப்பறிந்து லீலாவதிமீது காதலுற்று அம்மந்திரிகுமரனை சிறைப்படுத்தினன். பிறகு அரசன், ஒரு தோழியையும் இரண்டு சேவகரையும் ஒரு பல்லக்குடன் அனுப்பி, மந்திரிகுமரன் மொழிந்த குறிப்புப்படி

லீலாவதியை அழைத்துவரப்பணிக்க, அவ்விதமே தாதி சென்றழைத்துவந்துநூதனமான ஒரு அரண்மனையிலிருத்தி, காவலாகச்சில சேடியர்களை அமைத்து அரசன்பால் தெரிவித்துச்செல்ல, அரசன் அவ்வரண்மனை சென்று லீலாவதியைக் கண்ணுற்று தன்னைச் சேரவேண்டுமென்று வேண்ட, அதைக்கேட்ட லீலாவதிதனக்குள் ஒரு சூழ்ச்சிசெய்து தனக்கு 3-மாதத்துக்கு ஒரு நோன்பிருப்பதாகவும் அது முடிந்து விவாகம் செய்துகொள்வதாகவும் அரசன்பால் மொழிய, அதைக்கேட்டவரசன் சென்றவுடன், லீலாவதி மற்றதாதியர்களை அனுப்பிவிட்டு, தன் இன்னுயிர்த் தோழியான குணபூஷணியுடன் தனது வருத்தத்தையெல்லாம் மொழிய, அவளும் துயருற, பின் அவள் சகாயத்தால் ஒரு ஆணுடைவாங்கி தரித்துக்கொண்டு அன்று இரவில் ஒருவரும் அறியாது நகர் நீங்கி **மச்சதேசம்** சென்று அந்நாட்டு உத்தியான வனத்தை யடைந்து வழிநடந்த இளைப்பாலும், பசியின் கொடுமையாலும் ஒருவிருக்ஷத்தடியில் சயனிக்க, அப்போழ் தவ்விடம் நண்ணிய அந்நாட்டரசன் மகளாகிய லலிதாங்கி தனது தோழி இரத்தினங்கியுடன் அவளைக் கண்ணுற்று காதல்கொண்டு, நகரம் சென்று, சகியினல் தனது பிதாவுக்கறிவிக்க, அன்னகர்மந்திரியினல் அவளை அழைத்து வந்து, எவ்வளவோ சமாதானம் மொழிந்தும் கேளாது மணம் செய்விக்க, அன்றுஇரவு அந்தப்புரம்நண்ணிய லலிதாங்கியை தன் வயப்படுத்தி பிரமாணம் செய்வித்து தனது உண்மையையுரைத்து இருவரும் சந்தோஷத்துடன் அவணிருந்தனர்.

**3-வது அங்கம்.**

சூத்திரப்பரிமீது சென்ற சட்வாங்கன் அதன் வேகத்தினல் களைத்து, இனி நாம் பிழைப்பதில்லை யெனத்துணிபு

கொண்டு கீழிறங்கும் வழிகாணுது மயங்கி பின் அதைகண்டு பிடித்து அதன் உதவியால் கீழிறங்க, அந்தவிடம் விதர்ப்ப நாட்டிறைவனின் குமரியின் கன்னியாமாடமாயிருக்க, மதிமருண்டு, பின்தேறி, அவ்விருளில் அம்மேடைமீது சென்று, அவண் சயனித்திருந்த விதர்ப்ப நாட்டரசன் மகளாய கமலாக்ஷியைக்கண்டு காதலுற்று அன்னவளை எழுப்பி இருவருமனமொத்து காந்தர்வமாகக் கூடி, மறுநாள் அன்னவளால் அவன் ஒளித்து வைக்கப்பட்டிருந்து, அன்று இரவு பதினைந்து நாழிகைக்குமேல் அவ்விருவரும் சூத்திரப்பரியேறிகலிங்கமேதயம் நண்ணி கமலாக்ஷியை மரியாதையாக அழைத்துப் போவதாய் உறுதிகூறி, தான் தனது பிதாவின்பால்சென்று வணங்கி காரியங்களை எடுத்தோத, அன்னவர் தனதுமந்திரியையும் புத்திரனையும் அழைத்து வரும்காரியத்தை சித்தம் செய்ய அனுப்பிச் சிறையிலிருந்த கம்மியனை அழைத்து அவன் கொணர்ந்த சூத்திரப் பரியையும் சில வெகுமதிகளையும் அளித்து அனுப்ப, அன்னவன் உத்தியானவனம் சென்று கமலாக்ஷியைக் கண்ணுற்று, அன்னவளை அரசகுமரன் அழைத்துவரச் சொன்னதாகப் புகன்று, சூத்திரப்பரியிலன்னவளை யேற்றி, தானுமேறி சூத்திரத்தை முடுக்க, ககனமார்க்மாக இராஜவீதிவழியே செல்கையில், அதைக்கண்ணுற்ற அரசகுமரன் பதறிக்கதற, அரசன்தேற்றத் தெளியாமலும் அரசனல் தனது தங்கையின் வியோகத்தையுமுணர்ந்து இருவரையும்தேடி அழைத்துவராமல் இவண் திரும்புவதில்லையென வுறுதியுடன் பைராகி வேடந்தரித்து கமலாக்ஷியை முன் விட்டுவந்த விடம் குறுகி துயருற்றிருக்கையில், அதையுணர்ந்த மந்திரிகுமரி ஜலஜாக்ஷி அவண் அணுகி மன்னர் மதலையை தேற்றவும்தேருது அவனைகிரகத்திலிருக்கப் பணிக்க, அவள் சம்மதியாது, தானும் பைராகிவேட மூர்ந்து பின்

தொடர, இவ்விதமாய் இருவரும் செல்கையில், வழியில் லீலா வதியைப்பிரிந்து சன்னியாசிவேடம்தரித்த மந்திரி குமாரனைக் கண்ணுற்று சங்கதியுணர்ந்து, மூவருமாகச் செல்லாநிற்கை யில், கண்ணுவராசிரமம் அடைந்து, அவரைவணங்கி, அவ ராசிபெற்று அன்னவரால் லீலாவதி மச்சநாட்டில் ஆணுடை யுடனிருப்ப துணர்ந்து, விடைபெற்று மச்சநாட்டை அடைந் தார்கள்.

## 4-வது அங்கம்.

இவ்வாறு மூவரும் மச்சநாட்டிறைவன்பால்குறுகி, அன் னவனை அவன் புத்திரி லலிதாங்கியையும், ஆண்வேடம் பூண் ந்த லீலாவதியையும் தங்களுக்கு பணிவிடை புரிய கேட்க அவ்விதமே அவன் அமைக்க, அவர்கள் சூசனையாக தங் களது உண்மையை மொழிய, ஒவ்வொருவரும் தன் தன் சுயவுருவத்தைக் காட்டி அன்றிரவே அவணிருந்து பைராகி வேடத்துடன் ஐவரும் கண்வராசிரமம் அடைய, அவண் அன்னவர் யோகநிஷ்டையிலிருப்பதுணர்ந்து, சிச்ருஷை செய்திருந்தனர்கள். இஃதிவ்வாறாக, சூத்திரப் புரவியின் மீது கமலாக்ஷியை கொண்டு சென்ற கம்பியன் மகதநாட்டி ற்கு சமீபமாயுள்ள ஓர்வனத்து குதிரையை யிறக்கி, கமலா க்ஷியை தன்னைச் சேரும்படி பலாத்காரம் செய்ய, அவள் கதற, அப்போது அவ்வனத்து வேட்டம் செய்யுமாறு வந்தி ருந்த மகதநாட்டிறைவனுப வஜ்ரதேந்தன் அவண் குறுகி கமலாக்ஷியின் வாய்ப்பிறப்பறிந்து கம்பியனை வதைத்து, அவ னையும் சூத்திரக்குதிரையையும் நகரத்துக்கு கொண்டு சென்று, கமலாக்ஷியை ஓர் அரண்மனையிலிருத்தி, இரவில் சென்று தன்னைச்சேரும்படி அநேகவிதமாய் வேண்ட, அவள் தனக்கு ஆறுமாதத்திற்கு ஒருநோன்பிருக்கிறதென்றும், அ துமுடிந்தவுடன் விவாகம் செய்து கொண்டுகூடிக்கலப்போ

மெனமொழிய, அதைக்கேட்ட வரசன் சம்மதித்துச் செல்ல, கொஞ்சகாலத்திற்கெல்லாம் கமலாக்ஷிதான்மொழிந்தகாலம் குறுகியது கண்டு தனக்கு பேய்பிடித்துக் கொண்டதுபோல் அட்டகாசம் செய்ய, அதைக்கண்டதாதியர் அரசருக்கறிவிக்க, அரசன் தன்மந்திரியோடு சூழ்ச்சிபுரிந்து, இப்பேயையோட்டுபவர்களுக்கு தனது ஏகபுத்திரியாய கலாவதியையும், மந்திரி குமரியாய விலாஸவதியையும் விவாகம் செய்விப்பதுடன் பாதி இராஜ்ஜியமும் கொடுக்கப்படுமென்று பறைசாற்ற, மாந்திரீகர்கள் வந்துபார்த்து அவளது ஆர்ப்பாடத்திற்கும் தண்டனைக்கும் அஞ்சிப்போயினர்.

## 5-வது அங்கம்.

கண்வரசிரமத்திருந்த ஐவர்களும் சிச்ருஷை செய்திருக்க, மகான் நிஷ்டைகலைந்து ஐவரைக் கண்டானந்தித்து அரசன் மதலையைக்கண்ணுற்று, மகதநாட்டில் கமலாக்ஷியிருக்கும் இருப்பை யெடுத்தோதி, நீவிர் அவண் அணுகி, அவளது மனப்பேயை ஓட்டி எல்லோரும் சாகசத்தியத்தால் ககனமார்க்கமாகச் செல்லுங்களென்று மொழிய, வள்ளல்மதலை வணங்கி நாதா! புரவி இருவருக்கு இடம் கொக்குமல்லது அனைவரும் இதிலேற இடமிலதே; எவ்விதம் செல்வோம் எனமொழிய, மகான் அப்பனே! இந்த குளிகையை அப்பரிக்கணிவார்களாயின் நீங்கள் எல்லோருக்கும் இடம் அளிக்குமெனப் புகன்றுசிகூறி யளிக்கப் பெற்று, மகதநாட்டரசன்பால் நண்ணி, அவ்வரசனுக்காசிகூறி கமலாக்ஷியைக்கண்ணுற்று, சங்கேதமோழிபகறி, பேயையோட்ட, சூத்திரபுரவிவேண்டுமெனப்புகல, அரசன் கொணர்ந்தளிக்க அதன் மீதேறி சாகசச்சக்கியத்தால், அறுவரும் ககனமார்க்கம் நண்ணி, அரசனுக்குச் சிலபுத்திமதிகூறி, தனதுநகரமாகிய கலிங்கதேசம் நண்ணி, தன்பிதாவுக்கு அறி

எணிலேன்; ஆயினும்: நினதாக்ஞைக் கஞ்சி துரிதமாக சிச்ரூஷை புரிந்து, அவர்மனங்களிக்கச் செய்தபின் இவண் வர காலதாமதமாயிற்று. ஆகையால், என்குற்றத்தை எனது இளமைப் பருவத்தை யுணர்ந்து இன்னம் கொஞ்சகாலத்திற்கு மன்னிக்கக் கோறுகின்றேன்.

லீலா. சகி சுந்தரவதனு! நீ மொழிந்தது முற்றும் உண்மையே; நின் வசனத்தைக் கேட்கக்கேட்க என்மனம் எவ்வளவோ சந்தோஷத்தை யடைகிறது: எனது பிதாவோ என்னைப்பற்றி கனவிலும் நினைப்பதில்லை; யான்யென்செய்வேன்.

சுந்த. லீலாவதி! நீயேன் றுக்கிக்கிருய்; நின்பிதா நினக்கு நல்ல மேன்மையுள்ள ஒரு அரசகுமாரனைத்தேடி விவாகம் செய்விப்பதில் அதிதுறையுள்ளவரா யிருப்பரென்பதில் ஐயமிலது; அதற்குள் நீயேன் துன்புறுகிருய்; துயருருதே.

லீலா. சகி! நீ மொழிந்தபடி நாயகரை எங்கேயாவது போய் தேடப்போகிருரா என்ன?

சுந்த. சகி! எங்கேயாவது விசாரித்துத்தான் ஆகவேண்டும்.

லீலா. சகி! ஞானமில்லாமல்கையில் வெண்ணெயிருக்க நெய்க்கு அலைவாருண்டோ?

சுந்த. தோழி! நீ சொல்வதைப்பார்த்தால் நின்மனதில் யாரோ ஒரு புருஷனை நாடி யிருப்பதுபோல் தோன்றுகிறதே.

லீலா. சகி! நீ முன்மொழிந்த வண்ணம் இசைந்த காதலர்மீது என்மனம் சென்றுதான் இருக்குமென்பதற் கையமுளதோ?

சுந்ந. சகி ! நீ மெத்தவல்லவள் என்பதில் ஐயமிலது; அவர் யார் என்னிடம் மொழியலாகாவா ?

லீலா. சகி! இந்நகரில் எனக்கு இசைந்த நாய்கரிலரா?

சுந்ந. சிறிதுஆலோசித்து, பார்மந்திரிகுமரர் வீரவர்மனை நினைத்தனையோ?

லீலா. தோழி ! நீ சமர்த்திபடி ; நல்லது அவராஞல் என்ன ?

சுந்ந. தோழி ! அவர்நினது பிதாவின் ஆணைக்கு கீழ்ப் பட்ட மந்திரியின் மைந்தரன்றே?

லீலா. ஆயின் என்ன ?

சுந். சகி! அது நினது தகத்திற் கேற்ற திலேயே?

லீலா. தோழி ! அதென்னமோ எனக்கு விவரம்தெரிந் ததுமுதல் அவர் மீதே நாட்டம் மிகுதியாயுளது; நான் இதுவரை அதையொருவரிடமும் தெரிவியாதுமறைத்தேன்; இன்றுஏதோ வார்த்தை நேர்ந்ததாலும் நீஎன்னுயிர்ப்பாங்கியாதலாலும் நின்னுடன் மொழிந்தேன்.

சுந்ந. நினது நாட்டம் நின் பிதாவுக்கு ஒவ்வாததாயின்பின் செய்வது யாது?

லீலா. தோழி! இனி நின்னுடன் உண்மைபகருது வேறுயாருடன்மொழியப்போகிறேன். நீ மொழிந்தபடி என்விருப்பத்தின் வண்ணம் பிதாநினைப்பாரேல், யான் எவ்விதமாவது என் மனோபாவத்தை அன்னவருக் கறிவித்து, அவருடன் மருநகர் சென்றுவது சுகிப்பதென நிச்சயம் செய்திருக்கின்றேன்.

சுந்ந. சகி ! நல்ல எண்ணங்கொண்டாய்? இதுநினக்கு அழகாயோ?

லீலா. தோழி! பின்னர் செய்வது யென்? அன்பிலா ஆடவருடன் சேர்ந்து வெகுநாள் வாழ்வதிலும், அன்புள்ள ஆடவருடன் ஒரு நிமிஷம் சுகித்து இறப்பது மேலன்றோ?

சுந்த. தோழி! நன்று மொழிந்தனை? இனி இதைப்பற்றி அதிகமாக இதுசமயம் சம்பாஷிக்கலாகா; நாம்நமது உத்தியானவனம் சென்று மலர் கொய்து நீராடி வருவோம் வா!

லீலா. தோழி! நன்று மொழிந்தனை! அப்படியேசெய்வோம்.

(இருவரும் நிட்கிரமித்தல்).

௩-வது களம்.

லீலா. சகி! இதோபார்த்தனையா? இவ்வுத்தியான வனத்துள்ளவிருக்ஷங்களெல்லாம் ஆகாயத்தையளாவஉயர்ந்து, சாகோபசாகையாய்த் தழைத்துப் பூத்து காய்த்து சூரியகிரணத்தை தன்னுள் நுழையவிடாது செழித்திருக்கின்றது! அன்றியும், இவ்வனத்துள்ள மல்லிகை முல்லை, இருவாக்ஷி சண்பகம், பாடலம், குருந்தம், ஜாஜி, சம்பங்கி முதலிய மலர்கள் மலர்ந்து குமுகுமென வாசனையுடைத்தாய், அவைகளிலுள்ள மதுவைபானம்செய்து வண்டுகள் ரீங்காரம் பண்ணும் கீதமும் விருக்ஷங்களிலிருக்கும் பக்ஷிஜாலங்கள் ரமணீயமாய்ச் சப்திப்பதும் எவ்வளவு அழகாயிருக்கின்றது பார்க்தனையா?

சுந்த. தோழி! நீமொழிந்தது உண்மையே; அன்றியும், இவ்விடத்துள்ள ஹம்சங்கள் ஒய்யாரமாய் நடப்பதும், மயில்கள் தனது அழகிய கலாபத்தை விரித்தாடுவதும், குயில்கள் சப்திப்பதும், மான்குட்டிகள் துள்ளியோடுவதும் எவ்வளவு சுந்தரமாயிருக்கிறது பார்த்தனையா?

லீலா. தோழி! அதெல்லாமிருக்கட்டும்; அதோ! ஒரு

அழகியபுரு அம்மலர்ச்செடியின்மீதுட்கார்ந்தது பார்த்தனையா? அப்புருவைப் பிடிப்போம் வா?

சுந்த. தோழி! அப்புருவைப்பிடித்து அதனுடன்விளையாடக்கருத்துக்கொண்டனையன்றே! அவ்விதமேபிடிப்போம் வா.

(இருவரும் சேர்ந்து புருவைப்பிடித்தல்.)

லீலா. சகி! இப்புருவைப்பார்த்தனையா? எவ்வளவு அழகாயிருக்கிறது. இதுவெகுதூரம்பரந்து வருவதுபோல்தோற்றுகிறது; ஏனெனில், இதன் சரீரமெல்லாம் வியர்த்திருக்கின்றது; இதை நமதரண்மனைக்குக்கொண்டு சென்று அழகிய சுவர்ணபஞ்சரத்தில் வளர்க்கலாமென நினைக்கிறேன்.

(மந்திரிகுமரன் பிரவேசித்தல்).

வீரவ. யான் எனது புருவைப்பின்தொடர்ந்துவந்தனன்; ஆயினும், இப்பூங்காவில் எனது புரு இறங்கக் கண்ணுற்றதால், இது இங்கேதானிருக்க வேண்டும், சென்று பிடித்துக் கொள்கிறேன்.

சுந்த. சகி! நின்கையிலிருக்கும் புருவைப் பார்க்கில் இந்நகரத்து மந்திரி குமரனது புருப்போல் தோன்றுகிறது.

லீலா. சகி! நீ எப்படி அறிந்தாய்? அன்றியும் அப்படியே நீ மொழிந்தவாறானல் முன் தமயந்திக்கு நளன் அன்னத்தை தூதனுப்பிமணந்ததுபோல், இன்று புருவைதூதனுப்பி அவர் என்னை மணந்துகொள்வார்.

சுந்த. சகி! சம்பாஷியாதிரு? இதோ! மந்திரிகுமரர் வருகிறார்.

லீலா. லஜ்ஜையுற்று ஒரு விருக்ஷத்தினடியில் மறைதல்.

வீரவ. (மனதிற்குள்) என்புரு இந்நாட்டிறைவர்குமரிகையிலிருக்கிறதே! நன்று நான்சமீபத்தில் சென்றுவணக்க

மாகவினவி புறுவைப்பெற்றுச்செல்கிறேன். (பிரகாசமாக அரசரது அன்பு நிறைந்த லீலாவதி! வந்தனஞ் செய்கிறேன் (நமஸ்கரித்தல்.)

லீலா. சுந்தரா! ஏது இவ்வளவுதூரம் இவ்வுத்தியானவனத்தை நாடிவந்தது?

வீரவ. லீலாவதி! நான் நினதுபிராதாவானஎனதுதோழன்கட்வாங்கனுடன் இன்றுகாலே புறுவைவிட்டு விளையாடுகையில், எங்கள் இருவரது புறுவும் பிரிந்து பறந்துசெல்ல நாங்கள் இருவரும் அவரவர் புறுவைப் பின்பற்றி வருங்கால், என்புறு இவ்வுத்தியான வனத்திறங்க, அதைப்பிடிக்குமாறு இவண் குறுக, எனது புறு தமது அருமைத்திருக் கரத்திருக்கக் கண்ணுற்று புறுவைப்பெற்றுச் செல்ல இவண் குருகினேன். புறுவை கிருபை செய்தளிக்கவேண்டும்.

லீலா. ஏ அழகிய ஆடவனே! நான் நினக்குப் புறுவளிக்காது அன்னியருக்களிக்க விரும்பிலேன். ஆயினும், இப்புறு மிகவனப்புள்ளதாய் எனக்கு விவரந்தெரிந்த காலம்முதல் என்மனதைக் கவர்ந்ததால் இதையினிநான் விடமாட்டேன். தமக்கு அழகிய இரண்டு புறுக்கள் தருகிறேன். பெற்றுச் செல்லுங்கள்.

வீரவ. நங்கையே! நின்செங்கைவளர் இப்புறுவானது மிகவுயர்ந்ததும், அநேகம் பந்தயங்கள் கெலித்ததும், எந்தனை விட்டுப்பிரியாமல் என்உயிர்போல் பாவித்திருந்தமையால், இப்புறுவையே எந்தனுக்குகொடுத்தனுப்பக்கோறுகின்றேன்.

லீலா. ஏகாந்தா ! நீ மொழிந்தது உண்மையே ; இப்புறுவை தமதுயிர்போல் நீர்பாவித்து வருவது நிச்சயமாகில் எனது ஆபத்காலத்தில் நினது உயிரைக்கொடுத்தாவது எந்தனைக் காப்பாற்றுவது உம்மைப்போன்ற வீர புருஷனுடைய கடமையல்லவா?

வீரவ. ஏ சுந்தரி! வாஸ்தவம்; நினது மொழிப்படிநினக்குஏதாவது ஆபத்து நேரிடில், அப்போது என்னுயிர்போகிறதாயிருந்தாலும் உன்னைக் காப்பாற்ற வஞ்சேன். ஆனால் அப்படி யொன்றும் சம்பவிக்காது என்று எண்ணுகிறேன்.

லீலா. சுந்தரா! இனி நடக்கப்போகும் காரியத்திற்கு தமது உதவியை யான் விரும்பவில்லை; இப்பொழுது தற்செயலாய் யான் அகப்பட்டு விழிக்கிற தீங்கினின்றும் எந்தனை விடுதலை செய்துகாத்தல் தர்மமன்றோ?

வீர. நங்கையர் திலகமே! தமக்கு அப்பேர்ப்பட்ட துயரம் என்ன இப்போது நேர்ந்தது?

லீலா. நின்னைப்பார்த்ததுமுதல் மன்மதனுகிறபாவிகையில் அகப்பட்டு யான் படும்பாடு சொல்லுந்தரமன்று; ஏசுந்தரா! இச்சமயம் எந்தனை நீர் ஆளாவிடில் என்னுயிர்போம்; இப்பெண்கொலை தம்மையன்றி வேறு ஒருவரையும்அணுகா; இது சத்தியம்.

வீர. ஏ அம்புஜாக்ஷி! நீமொழிந்த வார்த்தையைக் கேட்டது முதல் நினது ஜீவன் போவதற்கு முன் என்னுயிர் தரிக்கும் வழி இலதே: ஏனெனில், நீயோ மன்னவன் குமரி, யானோ நினது பிதாவிடம் ஊழியத்திலமர்ந்த மந்திரியின் மைந்தன்; ஆனதால், நின் கருத்தின் வண்ணம் யானும் உன்னுவனேல் மற்றும் அழகிய மாதரைமணந்து இன்புறலாமென்றிருந்த எண்ணம்பாழாகி அரசனால் யான் ஆக்கினையடைவதன்றி நின் புகழுக்கும் பங்கம் வருமன்றோ?

லீலா. நேசா! நன்றுமொழிந்தனை; யான் உந்தன்மீதுகாதலாகி கலந்தணையில் எனது பிதா தம்மை வதைக்கவும் பின் யான் அன்னியரை வரிக்கவும் ஏற்குமோ? உடனே யான் என்ஜீவனைத் துறப்பேனல்லது உயிர்வைத்திருப்பேனே? அன்றியும், தமக்கு இந்நகரில் என்னோடிருப்பின் தமது நோக்க

த்தின் வண்ணம் இராஜாக்கினைக்கு தாம் அஞ்சவேண்டுவது. அதற்கொரு சூழ்ச்சியுறைக்கிறேன் கேளுங்கள்? என்ன வெனில், தாம் இன்றிரவு இந்நகரத்தின் தெக்ஷிணபாரிசத்துள்ள விநாயகரது ஆலயம் அமரின், யான் அவ்விடம் வருகிறேன்; இருவரும் எத்தேயத்தினிடமாவது சென்று சல்லாபமாயிருக்கலா மென்பதில் ஐயமேதுளது?

வீர. ஏ குரங்க நேத்திரி! அவ்விதமேசெல்லஎனக்குஞ்சம்மதமே; ஆயினும், யான் நின்மீதுபிரியமின்றிஇவ்வாறுறைத்திலன்; ஏ சுந்தராங்கி! கொஞ்சகாலத்திற்குமுன்நீபுஷ்பவதியாகிஸ்நானஞ்செய்யச்சென்ற அன்று நினது வசந்த நீரோடையின்கண் மறைந்திருந்து நின்வனப்பைக்கண்டு காதலுற்று அதுமுதல் இதுவரை (முடவன் கொம்புத்தேனுக்கிச்சித்தால் லபிக்குமா?) வெனவெண்ணி துபருற்றிருக்கிறேன் என்பதில் ஐயமிலது; ஆயினும்நினது சித்தத்தை உணராது எனதாசைப் பெருக்கை காட்டக்கூடாதெனநினைத்து இதுகாறும் பொருத்திருந்தனன்; ஏ காதலி! இனி எந்தனுல். மன்மதனடி பொருக்கும் வல்லமை இலது; ஆயினும் நீ மொழிந்தவண்ணம் இன்று இரவுநகர்ப்புறத்துள்ள விநாயகரது ஆலயத்திற்கு நீ வருவது உண்மையாயின் நினதுகாடின்னியமான ஸ்தனபாரம் எந்தனது மார்பழுந்தப்புல்லி அழகிய இதழினுல் ஒருமுத்தங்கொடுப்பாயா?

(இருவரும் கட்டி முத்தமிடல்.)

லீலா. ரமணு! நான் மொழிந்த வார்த்தையில்கொஞ்சமாவது தவுறுது யானின்று இரவு அவசியம் அவண்வருவேன்; தாம்பிரயாணத்திற்குத் தயாராக அவ்விடம் இருக்கவேண்டும்; இதோ தமது புரவை பெற்றுச்செல்லுங்கள்.

வீர. காந்தே! தன்னியனுகினேன். உத்திரவின் வண்ணம் நடக்கக் கார்த்திருக்கிறேன்.

மந்திரிகுமரன் நிட்கிரமித்தல்.

சுந். சகி லீலாவதி! காமுகற்குக் கண் கண்டவிடத்தில் என்பதுபோலும் யானிருப்பதுகூட நீ பாராது நினது ஆசை நாயகருடன் குதூஹலமாய் நிராடங்கமாய் சம்பாஷிப்பதும், கட்டி முத்தமிடுவதும், அந்தரங்கங்கள்பேசுவதும், இருவரும் குதூஹலமாயிருப்பது மிக நன்றாயிருக்கிறதா?

லீலா. தோழி! எனது ஆசைநாயகரைக்கண்டவுடன் என் மனங்கலங்கி, நீ அருகிருப்பதையும் உணராது செய்த குற்றங்களை மன்னிப்பதுடன், என் நண்பர்பால் யான் மொழிந்த வார்த்தைகளனைத்தையும் நீ கேட்டிருப்பாயன்றோ? அதற்கும் தக்கயுக்திசெய்து எந்தனை எனதாசை நாயகருடன் சேர்த்துவைக்கக் கோருகின்றனன்.

(நமஸ்கரித்தல்.)

சுந். தோழி! நீயேன் துயருறுகின்றாய்; எழுந்திரு? நின் மனோபாவப்படி நானடந்து நினக்கு இதத்தையே புரிகின்றேன்; எழுந்திரு? இப்பொழுது நாம் இவ்வுத்தியானவனத்தில் நெடுநேரம் இருந்து விட்டோம். நகரம் செல்வோம் வா?

(இருவரும் நிட்கிரமித்தல்)

4-வது களம்.

மந்திரிகுமரியான ஜலஜாட்சியும் அவளது தாஸி குசுமவதியும் பிரவேசிக்கிறார்கள்.

ஜல. சகி குசுமவதி! இன்று இவ்வுதயகாலம் எவ்வளவு மனோக்கியமாயிருக்கிறது பார்த்தனையா? இச்சூரிய உதயத்தை கண்ணுற்றதும் இதற்குவமை வேறொன்றும் மொழிவதற்கிலது; ஒரு உவமைமட்டும் என்மனதிலுதிக்கின்றது; யாதெனில், இந்நகரத் தரசகுமரன் கட்வாங்கன் வருவது போல் தோற்றுகிறது.

தசு. தோழி! (அடுத்ததுகாட்டும் பளிங்குபோல் கடுத்ததுகாட்டும் முகம்) என்றவண்ணம் நின்மனதிலுள்ள சங்கதி உள்ளங்கை நெல்லிக்கனிபோல் விளங்கியது; நினக்கு அரசகுமரர்பால் மிக நாட்டமிருப்பதாக வுணர்ந்தேன்.

ஜல. சகி! அவர் அதிக வனப்புள்ளவராதலின் அவர்மீது நாட்டமிருப்பதுடனும், மற்றொரு காரணத்தினாலும் அந்நாட்டத்தை விருத்தி செய்ய வேண்டியதாயிற்று.

தசு. தோழி ! நல்லதிருக்கட்டும், மற்றொரு காரணமென மொழிந்தனையே, அக்காரணம்யாது?

ஜல. தோழி! எனது சகோதரர் அரசகுமரிமீது காதலாகி ஏங்கி பரிதபிப்பதாகத் தெரியவந்தது; அதன் பேரில் அரசகுமரர்மீது நான் நாட்டமுள்ளவளாகினேன்.

தசு. தோழி! நினது சகோதரர் அரசகுமரிமீது காதலுறினும் நீ அரசகுமரர்மீது காதல் கொள்வானேன்.

ஜல. சகி! நன்றாய் யோஜித்துப்பார்? என் சகோதரர் இராஜகுமரிமீது காதலுற்றவர் ஒருவேளை அவளைச்சேர்ந்து வாழ்ந்திருப்பது அரசருக்காவது அரசர்புதல்வருக்காவது தெரியவரின், அன்னவரால் எனது சகோதரருக்கு தீங்கு விளையுமாதலின், நாம் அரசகுமரர்மீதில் காதலுற்று நமது சாகச்சக்கியத்தால் எவ்விதமாவது அன்னவரை நய்வயப்படுத்திக் கொளில், நமது சகோதரனை ஆபத்தினின்றும் அன்னவர் சகாயத்தால் காப்பாற்றலாமன்றோ? அதனாற்றான் நான் அவர்மீது காதலுற்றனன். ஆயினும், அம்மகானுபாவரை இதுகாறும் காணவழியிலாது ஏங்குகின்றேன்; என் செய்வேன்?

தசு. சகி! நீ மொழிந்தது உசிதமே; அன்றியும் உயர்குலநாதனையே கோரினை? நினது சவுந்தரியத்திற்கு இது ஏற்

றதே; ஆயினும், நினக்கு ஆசை அதிகமிருப்பினும் ஒருக்கால் நீ அவரைக்காண இசையில், அதிக மோடியாகவே சம்பாஷிக்கவேண்டும்.

ஜல. சகி! நன்று மொழிந்தனை. நான்உத்தேசித்த வண்ணமே கூறினை; மெத்தசந்தோஷம், இதோ! பறந்துவருகிற புருவை பார்த்தனையா? எவ்வளவு அழகாயிருக்கிறது! அதைப்பிடி பார்ப்போம்.

சுசு. தோழி! நன்று; அப்புரு தீபகப்புருவைப்போலிருக்கிறது. சரி பிடிப்போம்.

(இருவரும் புருவைப்பிடித்தல்.)

ஜல. தோழி! இப்புருவைப் பார்த்தனையா? இது இயற்கை யழகோடிருப்பதுமன்றி, அநேக சுவர்ண ஆபரணங்களால் அலங்கிருதஞ் செய்யப்பெற்று செயற்கை யழகோடுங்கூடி யிருப்பதைப்பார்த்தால் இது உயர் குலமக்கள் கையிலிருக்கும் புருவைப்போல் தோற்றப்படுகிறது.

சுசு. சகி! இப்புருவை நிதானித்து நோக்கில் நின்மனதைக்கவர்ந்த ஆடவரான அரசகுமாரதுபோல் தோற்றுகிறது.

ஜல. தோழி ! அப்படியாயின், அதுவும் எனது நற்காலந்தான்.

கட்வாங்கன் தன் தோழன் சுந்தரவதனனுடன் பிரவேசிக்கிறான்.

கட். தோழா சுந்தரவதனா ! நல்ல சமயத்தில் வந்தனை

சுந். நண்பா! என்ன விசேஷம்?

கட். நேயா! வேறொன்றுமிலது;யானும் நண்பசிகாமணி வீரவர்மன் இருவரும் புருக்களை விட்டு விளையாடுகையில் புரு பிரிந்துபோக அவரவர் புருக்களை அவரவர் துடர்ந்து

செல்ல என்து புரு மந்திரிகுமரியின் உப்பரிகை மீதிறங்கி ற்று; ஆகையால், நான் போய் அப்புருவைப் பெற்றுவர உத் தேசித்த சமயம் நீயும் வந்தனை: அது தான் நல்லசமயம் என்றேன்.

சுந். நேசா! ஆனுல் நான் ஜாக்கிருதையாகஇங்கிருக்கி றேண்.

கட். நேசா! என்ன அப்படி மொழிந்தாய்?

சுந். தோழா! மந்திரி குமரியிருக்கும் உப்பரிகைக்கு செல்லுமாயத்து யான் வந்ததால், ஒருக்கால் எந்தனை மந் திரிகுமரியென நினைத்துக் கட்டினுல் யானென்செய்வேன்? அதனுற்றுன் ஜாக்கிருதையாக இருப்பதாக மொழிந்தேன்.

கட். தோழா! நீமொழிவதைப் பார்க்கில் நான் என்ன அவ்வளவு காமுகனு?

சுந். தோழா! இதுவரை நீ மந்திரிகுமரியைப் பார்த்திரு ப்பாயென நினைத்தேன்; பார்த்திருப்பில் எந்தனை இதுகாறும் இச்சமயத்தில் இம்சித்திருப்பாய். அவை நோக்கில் இது காறும் நீபார்க்கவில்லை யெனநினைக்கிறேன்,

கட். சகே! ஆயின் அவள் அவ்வளவுவனப்புடையவளா?

சுந். தோழா! அதையான் சொல்வதில் பிரயோசனமி லது.

கட். நண்பா! ஆயின் அவளைப் பார்ப்போம் வா?

(அரசகுமரனும், சுந்தரவதனனும் ஜலஜாக்ஷியின் அந் தப்புறம் போகுதல்.)

ஜலஜாக்ஷி அரசகுமரனைக்கண்டு சிறிது லஜ்ஜையுற்று ஒருபுரமாய் ஒதுங்க)

கட். தோழா! இதென்னவிந்தை; இப்பெண் மகளிரை யுற்று நோக்கில் இதுவரை இவ்வளவு லட்சணவதியை யான் பார்த்திலேன். உலகத்தில் சாதாரணமாக ஒருஸ்திரீயை

யாவது மற்ற எந்த ஜீவஜந்துக்களையாவது பிர்மதேவர் படைப்பதெனில் (பிரதிவி - அப்பு - தேயு - வாயு - ஆகாசம்) என்று சொல்லப்பட்ட பஞ்சபூதங்களால் சிருஷ்டித்திருக்கவேண்டும்; அப்படிப்பட்ட பஞ்ச பூதங்களைக்கொண்டு பிர்மதேவனால் சிருஷ்டிக்கப்பட்ட பிராணிகளை அனேகம் பார்த்திருக்கிறேன். அதுகளெல்லாம் இவ்வளவு சுந்தரமிலது. ஆயினும் இவ்வளவு மனோக்ஞமான சுந்தரியைப்படைக்க பிரமதேவனுக்குச் சக்தியிலது; ஏனெனில், அப்பிரமனோ வேதாத்யானஞ் செய்து புத்தி ஜடத்துவத்தையடைந்திருப்பதால், இவ்வளவு நாகரீகரூபத்தைப்படைக்க இயலாது. இதையார் படைத்திருக்கலாம்; ! உணர்ந்தேன்; தோழா! இதையார் எப்பஞ்ச பூதங்களால் படைத்திருக்கலா மெனில்,

சங்காந்தர் நபஸா, நவோ நவஸுதாபாரேணபாதஸ்ததா
ஸ்ரீகண்டாசலமாருதேந மருதம்ஜ்யோதி ஸ்தடித் ஜ்யோதிஷா
கர்பூரொத்கர கர்தமெந ம்ருதமத் உத்பாத்ய புஷ்பெஷுநா
சேம்தாவஞ்சயிதும்மதியம்ஆஹா: ஸ்வெயஸமுத்பாதிதா
என்றபடி.

குசுமபாணனுகிய மன்மதன், என்மனதைவஞ்சிக்கவெண்ணியே இவ்வழகியைப் படைத்திருக்கிறான். ஆகையால், அவள் பக்கல் நண்ணி எவ்விதயாவது அவளை நான் வசப்படுத்திக்கொள்கிறேன்.

சுந். சகே! சாதாரணமாக வாயினல்கேட்பதில் பயனிலது; சாஷ்டாங்கமாய் நமஸ்காரஞ்செய்தால் நீர்கொண்ட எண்ணம் நிறைவேறும்.

கட். சகே ! நமஸ்கரித்தாலென்ன?

சுந். தோழா! நமஸ்கரித்தாலும் சரி, அல்லது, அம்மா பரமேசுவரி! ஜகதம்பா! லோகஜநநி! காப்பாற்றென்று துதிப்பினும் சரி.

கட். தோழா! நீ அவ்விதந்தான் செய்வதோ?

சுந். சகே! நான் தப்பினேன்.

கட். எதற்காக?

சுந். இந்தமந்திரிமகளைக்கண்டு இவ்வளவு பாடுபடுகின்றவர் என்மனைவியைப் பார்த்தால் உயிரையேவிட்டு விடுவீர்; அதனாற்றான் தப்பினேனென மொழிந்தேன்.

கட். அவ்வளவு லட்சணமா?

சுந். மகராஜ்! அவளது லட்சணம்போல் இனிமன் மதனாலும் படைக்க வியலாது. அவளழகை நானெடுத் துரைத்தால், சொன்னவுடன் மதிமயக்கங்கொண்டு என் கிரகம் நண்ணி அவளை யிழுத்துக்கொண்டு போனால் பின்னர் என்பாடு திண்டாட்டமாகுமென வஞ்சுகிறேன்.

கட். அடே தோழா! குலஸ்திரிகளைக் கண்ணெடுத்து பார்ப்பேனா? கடவுளின் சிருஷ்டியின் வல்லமையைக்கண்டு அதிசயிக்கக்கேட்டதே யொழிய வேறில்லை. மேலும் உன் தோழி எனக்கு சகோதரி பாவமல்லவா? என்மனதைச் சோதியாதே. நாமிருவரும் அவள் சமீபஞ்செல்வோம் வா.

(இருவரும் சமீபஞ் செல்லுதல்.)

ஜல. பிரபோ! நமஸ்கரிக்கின்றேன்; வீற்றிருங்கள்.

கட். சுகுணசல்லாப விலாஸ மதிமுகரஞ்சனி! நின்மனதின்படி வீற்றிருக்கின்றேன்.

ஜல. பிரபோ! தாம் தீனையான அடியாளது அரண்மனை நாடி வந்தகாரணம் இன்னதென தமது அடிமை தெரிந்து கொள்ள விரும்புகிறேன்.

கட். ஏவனித ரத்னமே! நீ மொழிந்தபடியே நின்னை யெந்தனுக்கு அடிமையாக்கிக்கொண்டு யான் உந்தனுக்கு அடிமையாகி? நின் சகாயத்தால் எனது சத்துருவை ஜயிக்க க்கருதியிவண் போந்தனன்; காரிழையாளே! நின்மனமியாது?

ஜல. பிரபோ! தாம் மொழிவது மிக ஆச்சரியமாயிருக்கிறது. ஆயினும், தாம் உத்தமகுல வள்ளலாகையால் எந்தனை அடிமைகொள்வது உண்மைதான்; ஆனால் தாம் எந்தனுக்கு அடிமையாவதாயும் என் சகாயத்தால் தமது சத்துருவை வெற்றிபெற எண்ணங்கொண்டதாக மொழிந்ததைக் கேட்க மிக்க ஆச்சரியமாயிருக்கிறது: யானோ வீரதீர சிகாமணிகளைக் கண்டவுடன் அஞ்சி நடுங்கும் அபலை; எனது சகாயத்தால் வெற்றிபெற நினைப்பது யாதோ? மெய்ந்தனுக்கொன்றுந் தெரியவில்லை; தெரியும்படி யறிவிக்கக் கோருகின்றேன்.

கட். ஆயிழையாளே! என் தோழனும் நினது சகோதரனுமான வீரவர்மனும் புறுக்களைவிட்டு விளையாடுகையில் இருவர் புறுவும் ஒன்றைவிட்டொன்று பிரிந்து வெவ்வேறு திசைகளில் பறந்துபோக, உடனே என்புறுவைக் கைப்பற்ற வேண்டிய நோக்கத்துடன் பின்பற்றினேன். அப்புறு நினது மாடத்திறங்கக் கண்ணுற்று இவண் வந்து நினது ஹஸ்தத்திடம் எனது புறுவும், நின்பார்பிடத்து அப்புறுவைப் பரிகசிக்குமிரண்டு புறுக்களிருக்கப்பார்த்து ஆனந்தித்த காலையில், பாவிமன்மதன் எந்தனை யெதிர்த்து கரும்புவில்லை வளைத்து வண்டுநாணி பிகிந்து பஞ்சமலர்ப் பகழியால் என் சரீரம் நைய அடிப்பதால், அன்னவனை வெல்ல எந்தனிடம் தக்க ஆயுதங்களில்லாமையாலும், நின்னிடத்துள்ள புருவமாகிற வில்லுடனும், நேத்திரமாகிற அம்புடனும், நின் ஸ்தனமாகிற மதக்குஞ்சரமத்தகமீதேறி, போர்புரிவேனாகிற், அப்பாவியை எளிதில் வெற்றிபெறலாகுமென வெண்ணி நின்பாலடைந்தனன். ஆகையால், கண்மணி நிகர் பெண்மணியே! நின் மனத்திலிட்ட வேறுகநினையாது எனக்கு உதவிசெய்யவேண்டும்.

ஜல. அதிக லஜ்ஜையுற்று. பிரபோ! தாம் அடுக்காமொழியுரைப்பது தகுதியன்று; யானோ தமது சேவகனை மந்திரியின் குமாரி; என்மீது இவ்விதமாக கவலைங் கொள்வது சரியன்று; மேலும், அசேதனமான இச்சுவல்ப இன்பத்திற் கிச்சையாகிறதைக்காட்டிலும் அரியதேசாடனஞ் சென்று ஸ்தல உபவாசஞ் செய்து, தெய்வதரிசனம் பண்ணில் உத்தமமான லோகத்தை அடையலாகும். அதையிழந்து இவ்வல்ப சுகத்திற்காசைவைக்கலாமோ?

கட். சுகேசி! நீமொழிந்தது வாஸ்தவமே; இப்பஞ்சாசத்கோடி விஸ்திரணபூமண்டலத்தின் கண்ணுள்ளபுண்ணிய க்ஷேத்திரங்களுக்குப்போய் பகவானை சேவைசெய்ய அல்லற்படுவதைவிட, இருந்தவிடத்திலேயே அப்புண்ணியபலன்களை யான் அனுபவித்துவிட்டேன். எவ்வாறெனில், நினது நகசிக பரியந்தமுள்ள சகல தேவதாசுவரூபங்களை அவலோகனஞ்செய்தஎந்தனுக்கு வேறு ஸ்தலயாத்திரையுஞ் செய்யவேண்டுமோ? ஏ சுததி! நின்னைக் கண்டதுமுதல் பாவிமதனன் எந்தனை வாட்டாநிற்கின்றான். ஐயோ! அநியாயமாக யான் மாண்டுபோகுங்காலங் குறுகிற்றே! மணங்கமழ் மலர்ச்சோலை வாழ்குயிலே! மதனனம்பினால் உள், புறம் இரண்டும் புண்ணாகிய வெந்தனுக்கு நினது ஸ்தனபாரத்தினால் மேற்புண்ணுக்கு ஒத்தடமும், நினது அதரத்தினிடத்தில் குமிழியிடும் அமிர்தத்தை உள்ளுக்கும் மருந்தாக அளிக்கில், யான் உய்வேன். ஆகையால் நின்மனமுவந்து ஆதரிப்பாய். ஆயிழையே! அழகுமலிகாரிழையே!

ஜல. (தனக்குள்) மன்னர்மைந்தர் மிகத்தாபமுறுகிறார்: இனிநாம் அவரைச் சோதிக்கலாகாது: நம்மனமோ பதருகிறது; நமதுசகோதரர் இவரதுசகோதரிமீதுகொண்டிருக்குச்

காதல் இவருக்குத் தெரியின் என்ன ஆபத்துவிளையுமோ? ஆகையால் இவருக்கு ஆசைமொழி பகரி நமது சகோதாருடைய நேசம் விர்த்தியாகும்படி செய்து, நாம் இவரைச்சேர்ந்து நம்பால் கூடியவரையில் நம்சகோதரருக்கு உதவிசெய்யவேண்டும். பிரகாசமாக, ஏ சுந்தராங்கா! அடியாள்மீது தாம் எவ்வளவு ஆசை கொண்டிருக்கிறீரோ அதைவிட தமதுமீது யான்முன்னமே காதலடைந்தேனெனினும், எனது சகோதரர் என்மீது அதிக அன்புடையவராதலால், தாமென்மீது கருணைகூர்ந்து எனது சகோதாருடைய சமாதானத்தைத்தாம் யேற்கில், தம்மனயிச்சையின்படி நடக்க அடியாள் காத்திருக்கிறேன். இதற்கு வருத்தமுறவேண்டாம்.

சுட். ஏசுராங்கநேத்திரி! நீமொழிந்த அமிர்தத்தினுமினியமொழியால் என்னகங் குளிர்ந்தேன், தன்னிபனுகினேன். நின்சோருதல்வண்ணம் எனது தோழனை வீரவர்மனது சம்மதத்தைப்பெற்று வருகிறேன். என்மீது கருணைசெய்து எனது புருவையளிப்பாயாக.

ஜல. ரமணு! தமது திருக்கருணை என்மீதுண்டாக யானியற்றிய நோன்பேதோ? காந்தா! தமது சித்தத்தின்வண்ணம் புருவை யிதோ அளித்தேன்; ஆயினும், யான் புருவையளித்ததாக தமது சித்தத்தில்நாடலாகா; எனதுமனமாகிற புருவைத்தமது திவ்யாஸ்தத்தினிட மளித்ததாக நினைக்கவேண்டும். வந்தனஞ்செய்கிறேன் சென்றுவாருங்கள்; தமது திவ்விய வுருவத்தைமனதிடம் நிறுத்தி மதனவாதையடையுமடியாளை மறக்கலாகா.

சுட். ஆயிழையாளே! நன்றுமொழிந்தனை ? என்னுயிரை மறப்பினும் நின்னைமறக்க வறிபேன்; சென்றுவருகிறேன்.

(கட்வாங்கன் நிட்கிரமித்தல்.)

5-வது களம்.

வீர. இதென்ன விந்தை ! என்னருமைத் தோழனை கட்வாங்கன் புருவின் பின்சென்றவன் இதுகாறும் இவணவரக்காண்கிலேன்; அவனைக்காணுதவொரு நிமிடமொருயுகமாக விருக்கிறதே!

(கட்வாங்கன் பிரவேசித்தல்)

கட். தோழா ! நீ நின்புருவைப் பின்றுடர்ந்து பிடித்து வந்தனையா?

வீர. பிடித்துவந்தேன்; ஏன் தாங்கள் இவ்வளவு தாமதம்?

கட். தோழா ! உந்தனுக்கு அதைத் தெரிவிக்கிறேன். நான் கேட்பதற்கெல்லாம் நீ மறுமொழி சொல்லவேண்டும்.

வீர. அதற்கென்ன தடை? நீ கேட்பதற்கெல்லாம் அவசியம் பதிலுரைக்கின்றேன்.

கட். நீ எனது ஆருயிர் நேசன்றானே ?

வீர. அதற்கேதேனுந் தடையுளதே ?

கட். என் சுக துக்கங்களுக்கெல்லாம் நீ பாத்தியப் பட்டவன்றானே ?

வீர. ஆம்.

கட். நின் உயிர்க்குச் சமானமான பொருள்மீது யான் நாட்டங்கொளில் அதையளிப்பதற்குடன்படுவாயா ?

வீரவ. நண்பசிகாமணி! நீர் என்னவார்த்தை மொழிகின்றீர்; நீரும் யானும் பிரியா நண்பராயிருக்க நீரிச்சிக்கும் பொருள் என் வயத்துள்தாயின் அது என்னுயிரினும், அரிதேயாயினும், அது யெதுவாயிருப்பினும் எந்தனைக்கேட்காமலே நீர் சுவிகரித்துக்கொள்ள சுதந்தரமிருக்க, அதைப்பற்றி எந்தனை வினவுவானேன்?

கட். தோழா! நீ சொல்வதைப்பார்த்தால் நான் கேட்கும் பொருளை நீமறுத்துரையாயென நினைக்கிறேன்.

வீரவ. அதற்குத் தடையேதுளது?

கட். நேயா! ஆயின் நின்வயத்துள்ள இவ்வுலகிலரிய ஒரு பொருளைக்கண்டு திப்பிரமையுற்று அதைபெய்விக்கத் தேனும் நின்னிடமிருந்து பெறமிக்க ஆவல்கொண்டு இவண போந்தனன்; அதனாலேயே இவண்வரக்காலதாமதமாயிற்று.

வீரவ. (தனக்குள்யோசித்தல்) ஆ! இதென்ன விந்தை! அரசகுமரன் நம்மிடத்துள்ள அருமையான ஒருபொருளைக் கண்டதாகவும், அதைத்தனக்களிக்க வேண்டுமென்றும், விரும்புகிறான். ஆலோசிக்கில் நம்மிடம் அரியபொருள் ஒன்று மில்லை; ஒருக்கால் நமது நேயன் என்மனதைச் சோதிக்கப்புகல்கின்றனோ; ஏதோ ஒன்றுந் தெரியவில்லை; ஆயினும், அது எவ்விதமிருப்பினும் நாம் சம்மதிப்போம். பிறகுபார்த்துக் கொள்வோம். (பிரகாசமாக) தோழா! நன்று, நீர் விரும்பிய பொருள் எதுவாயினும் தெரிவித்தால், அதைக்கொடுத்து வுன்மனதைச் சந்தோஷப்படுத்தக் காத்திருக்கிறேன்.

கட். தோழா! நீ அவ்விதம் உறுதிசொல்லினும் என்மனங் கலவரப்படுகிறது. பிரமாணஞ்செய்யில் தெரிவிப்பதில் ஐயமிலது.

வீரவ. நண்பா! சாக்ஷாத் பரமாத்துமாவின் நிஜசாரணாரவிந்த சாக்ஷியாக நீவிரும்பியபொருள் எதுவாயிருப்பினும் அளிப்பதில் தடையில்லை.

கட். தோழா! ஆயின்சரி, யான் புறாவைத்துடர்ந்து செல்ல, என்புறா நின்சகோதரியாய ஜலஜாக்ஷியின் அரண்மனை நண்ண, யான் அவண்சென்று ஜலஜாக்ஷியைக் கண்ணுற்றுங் காதலாகி, அநேகமாய் அவளைப் பிரார்த்தித்தும் எனது

மொழிக்கிணங்காதுகடைசியில்என்சகோதரரான வீரவர்யன் சம்மதிக்கில் தனக்குச்சம்மதமெனப் புகன்றனள். யான் அதற்கிணங்கி புருவைப்பெற்று இவண் அடைந்தனன். அன்னவளைக்கண்டது முதல் யான் படும்பாடு சொல்வதரிது. மித்திர! அது விஷயமாய் நான்படும் அவஸ்தை எவ்வாறெனில்.

யான்படும்பாடு நேயா உலகர்கவிலும் பஞ்சுதான் படுமோ, சொல்லத்தான்படுமோ, எண்ணத்தான்படுமோ, கான்படுகண்ணியில் மான்படுமாறு கலங்குகின்றேன், என்படுகின்றனை யென்றிடுங்காவிடில் என்செய்வேன்.

தோழா! நீ மனமுவந்து நான் மொழிந்த சங்கதிக்கு சிற்றங்கொளாது சந்தோஷமாய் என்மனங்களிக்க விடைபகறவேண்டும்.

வீரவ. (தனக்குள்) நமது நண்பன் நம் சகோதரியிடத்தே காதல் கொண்டு கலங்குகின்றனன். நாம் மறுத்துரையாது சம்மதித்தால் நாமும். லீலாவதியும் இன்று முடிவுசெய்த காரியத்திற்கு, பின் தோழன் நம்மீது கோபப்படாதிருக்கப்பிரயசஞ் செய்விக்கவேண்டும். (பிரகாசமாக) தோழா! நன்று, நாங்கள் பென்னபாக்கியம் செய்தோமோ? ஜலஜாக்ஷியென்ன நோன்பியற்றினளோ தாம் அவள்மீது காதலுற? ஜலஜாக்ஷியின் புத்திவிஷயத்தில் நான் கொஞ்சம் இது சமயம் வருத்தப்படுகின்றேன். ஏனெனில், தம்மை இன்று இவண்விடாது கட்டிச்சேர்ந்து சுகிக்காது விடுத்தனளே. தமதிஷ்டம்போல் அவளையடைந்து அன்னவளையும் யெங்களையும் காப்பாற்றவேண்டும்.

கட். தோழா! சந்தோஷித்தேன்; என் மனவருத்தத்தை நீக்கியநினக்குயான் என்ன கைம்மாறு செய்யப்போகிறேன். இது சமயம் என்மனங்களிக்க விடையளித்ததால் நினக்கு வேண்டுவதைக்கேள்? நான் மனப்பூர்வமாய் அளிக்கின்றேன்.

வீரவ. தோழா! தமதுகருணையினால் எந்தனுக்குச் சகல பாக்கியங்களிருந்தும் நெடுநாளாக தம்மிடம் ஒருவரப்பெற்றுக்கொள்ள அவாக்கொண்டிருந்தேன். இன்றுதாமே கேட்டுக்கொள்ளும்படி அனுக்கிரகித்ததால் அதைக் கேட்கலாமென துணிவுற்றனன். நான் கேட்கும்வரந் தருவதாக எனக்குத் தாம் பரவசம்செய்யில் உரைப்பதற்கு துணிவுகொள்ளுமே தவிர, மற்றபடி உரைக்க நாவெழாது. ஆகையால் சகே! உறுதிகொடுத்தால் தெரிவிக்கிறேன்.

கட். இதுவரை உன் மனோபீஷ்டத்தைத் தெரிவிக்காதிருந்ததைப்பார்த்தால், எந்தனை நினது இன்னுயிர்த்தோழனாக நினைக்கவில்லை யெனத்தெரிகிறது. ஆயினும், நான் இது வரை நின்மனோபாவத்தை யுணர்ந்து நீ கேட்பதற்கு முன்னமேயே அக்காரியத்தை நிறைவேற்றுப் பாதகனுகினேனெனினும், இப்பொழுது சாக்ஷாத் லோகமாதாவினது சரணாவிந்த சாக்ஷியாக நினது விருப்பத்தை நிறைவேற்றுவேன்.

வீரவ. நேசா! வேறொன்றுமிலது: எனக்கு இன்னகரில் அனேக சத்துருக்களிருப்பதால், யான் நாளையதினம் எனது தாய் மாமன் நகராகிய விதேகநாட்டிற்குச்செல்ல என்பிதாவினால் ஆக்ஞாபிக்கப் பட்டுச்செல்ல தயாராகவிருப்பதால், இப்பொழுதாவது, யான் நகர்சென்ற பின்பாவது, பின் எப்பொழுதாவது நின்மனதிற்குச் சஞ்சலமுண்டாகும் வண்ணம் ஏதாகிலுமென்தனால் குற்றஞ் செய்யப்படின், இப்போழ்திய தோழமையை நினைத்து மன்னிக்கப்பிரார்த்திக்கின்றேன்; இதொருவரந்தான் நான் நெடுநாளாக மனதிலெண்ணியது.

கட். நண்பசிகாமணி! எந்தனைப்பிரிய மற்றவனென்றும், முக நட்புத்தோழனெனவும் நினையாது எவ்வளவு குற்றஞ்

செய்யினும்மன்னிப்பதில் சந்தேகமிலது. ஜலஜாக்ஷி விஷயத்தில் மனப்பூர்வமாய் எந்தனுக்கு சம்மதிகொடுக்கவேண்டும்.

வீரவ. தோழா! நீ யென்ன அப்படி நினைக்கின்றாய்? ஜலஜாக்ஷி விஷயத்தில் இதுசமயம் என்னுடன் கூடவே நீ வரின், அவள் எதிரிலேயே தெரிவிக்கின்றேன்.

கட். நேசா! வேண்டாம்; நீ சம்மதித்ததேபோதும். பிதா நமதுவரவிற்கு எதிர்பார்த்திருப்பார்; செல்வோம் வா; இருவரும் போய்விட்டார்கள்.

## 2-வது அங்கம்.

### 1-வது க்ளம்.

(அரசன் பிரவேசித்தல்.)

சோம. சேவகா! யான் சபைக்குவந்து இவ்வளவு நேரமாகியும் ஏன் இன்னம் மந்திரி சிரேஷ்டரைக் காண்கிலேன்? சீக்கிரம் சென்றழைத்துவா?

(மந்திரி வித்யுத்ஜிஹ்வன் பிரவேசிக்கிறார்)

வித். சேவகா! அரசர் சமுகம் எவ்வாறிருக்கிறது?

சேவ. பிரபோ! தமது வரவை யெதிர்பார்த்திருக்கின்றனர்.

வித். பிரபோ மகராஜ்! அமாத்தியன் வந்தனஞ் செய்கிறேன்.

(வந்தித்தல்.)

சோம. அமாத்தியவர்யா! வீற்றிரும்? தாம் இதுவரை இவண்வரக் காலதாமதஞ் செய்தகாரணம் யாது?

வித். நவராத்திரியில் நடத்தும் வித்வத்பரீட்சையில் சம்பாவனை பெறுவதற்காக வந்திருக்கும் வித்வான்களுக்குத் தக்கபடியிடம் அமர்த்தச் சென்றதால் தாமதமாயிற்று.

சோம. அமைச்ச! மெத்தசந்தோஷம்? நாம் நவராத்திரிகொலுமண்டபஞ் சென்றுவந்திருக்கும் வித்துவத்சிரேஷ்டர்களது பெருமையைக் கண்ணுற ஆவல்கொண்டிருக்கிறேன்.

வித். மகராஜ்! தமது கருத்தின்படியே நடக்கத் தயாராக விருக்கிறேன்.

(கட்வாங்கன், வீரவர்மன் இருவரும் சபையில் பிரவேசித்தில்)

கட். பிதா! நமஸ்கரிக்கின்றேன். அரசன். செல்வப் புதல்வ! நீ நீடித்துவாழக்கடவாய்.

கட். அமாத்தியசிரேஷ்டா! வந்தனஞ்செய்கின்றேன்.

மந். நீடூழி அரசு செலுத்துவாயாக.

வீர. மகராஜ்! நமஸ்கரிக்கின்றேன்; பிதா! நமஸ்கரிக்கின்றேன்.

அர. குழந்தாய்! உனக்கு சரஸ்வதி கடாட்சமுண்டாருக.

மந். கண்மணியே! களங்கமறக்கற்று வாழ்வாயாக.

சோம. குழந்தைகாள்! உங்கள் வரவுக்குமிகச் சந்தோஷமடைந்தேன். நானும் மந்திரிவர்யரிருவரும் கொலுமண்டபஞ்சென்று நமது நகரத்தில் வந்திருக்கிற மகாவித்வான்களைப்பரீக்ஷிக்கக்கருதிபிரயாணப்படுகையில்நீங்களிருவரும் இவ்விடம் வந்தீர்கள். வாருங்கள் எல்லோருஞ்சென்று அவ்வானந்தத்தையனுபவிப்போம். எல்லோரும் நவராத்திரிகொலுமண்டபஞ்சென்று வித்வான்களது பெருமையைப்பார்த்து வானந்திக்கையில், ஈழதேசத்திலிருந்து தாருவர்மனென்னும் ஒருகம்பியன் பிரவேசிக்கிறான்.

தாரு. பிரபோ மகராஜ்! வந்தனம் தந்தனன்.

சோம. கனவானே! தாம் யார்? தமது நாமதேயம்யாது? தமக்கு எந்தவிஷயத்தில் திறமையதிகம்? இதுகளை விவரமாய்த் தெரிவிக்கவேண்டும்.

தாரு. மகராஜ்! இம்மகிதலங்காக்கும் மன்னரே! நானிருப்பது ஈழதேசம்; என்பெயர் தாருவர்மன்; இதோ என் கையில் வைத்திருக்கும் மரப்புரவி சூத்திரவலுமையினால் இப்பூமண்டலம் முழுமையும் ஒரு இமைப்பொழுதில் சுற்றிவருந் திறமுடையது; இதை யான் வெகு அருமையாகக் கற்று சூத்திரவிதந் தேர்ந்து மூன்றுவருடகாலமாக மிகப்பிரயாசையுடன் செய்து முடித்தனன். நான் ஜாதியில் கம்மியன்; இதனது வேடிக்கையைக் கண்ணுற்று என் மனோபாவத்தைத் திருப்திசெய்விக்கக் கோருகின்றனன்.

சோம. ஓய் விவேகத்திற் சிறந்த தாருவர்மா! நின் புரவியின் வேடிக்கையைக் கிஞ்சித்து அவலோகனஞ்செய்ய அவாக்கொண்டனன். ஆகையால், இந்நகரத்திற்கு முன்னூறு காதவழி தூரத்திலிருக்கும் பர்வதத்தின் மீதுள்ள தாழிப்பனைமடலொன்று அதிதுரிதமாகக் கொணர்ந்தளிப்பில், நின் வேண்டுகோளின்படி நின் இச்சையை நிறைவேற்றுவோம்.

தாரு. உடனே புரவி மீதேறி வலது செவியோரமுள்ள ஒரு சூத்திரத்தை முருக்க, பரி ககனமார்க்கமெழுந்து சென்று குறிப்பிட்டபடி தாழிப் பனைமடலுடன் ஐந்து நிமிஷத்தில் திரும்பிவந்து, அரசசமுகம்வந்து,

தாரு. ஏ இராஜ பூபாலா! தம்மிடத்தில் யான் தெரிவித்தபடி தமது உத்தரவின் பிரகாரம் தாம் குறிப்பிட்ட இடத்துள்ள தாழிமடல் ஓலையைக் கொணர்ந்தது தமது சித்தத்துக்கு விசிதமாகத் தெரிந்ததே; இனி தமது ஆக்ஞையின்படி நடக்கக் காத்திருக்கிறேன்.

சோம. ஏ தாருவர்மா! நீ நாம் மொழிந்தவண்ணஞ்செய்தனை; மிக்கச்சந்தோஷ மடைந்தோம்; இச்சூத்திரப் புரவியின் விலையாது?

தாரு. பூபாலசிகாமணி ! புரவியின் விலையைத் தாம் கேட்டதால் நான் பயந்து தெரிவிக்கிறேன், அது விஷயத்தில் தமக்கு என்மீது மிகச்சீற்றமேற்படினும் எந்தனை மன்னிப்பதாக வாக்களிக்கக் கோருகின்றனன்.

சோம. ஏ தாருவர்மா ! நீ இப்பரிக்கு விலையாக எது கேட்பினு மளிப்பேன்; என்மனதில் யாதொரு ஐயமுமிலது; அது விஷயமாய் எப்படி கேட்பினும் நின்னை மன்னிப்பதில் சந்தேகமிலது.

தாரு. இராஜசேகரா ! என்னுடன் பிறந்த ஏக சகோதரியைக் கொடுத்து யான் இப்பரியைச் செய்வித்துக் கொண்டனன்; ஆகையால் பூபாலா ! என்மீதருள்கூர்ந்து தமது அருமைத் திருக்குமரியை எந்தனுக்களிப்பில் யான் இப்பரியை யளிப்பேன்.

கட். (தனக்குள்) இப்பரியோ ஓர் தாருவினால் இயற்றப்பட்ட ஓர் சூத்திரப்புரவி; இதன்மீதா ரோகணித்து வலது செவியைத் திருகிவிடில் ககனமார்க்கஞ் செல்லுகின்றது; இதை அவன் இப்பரியின்மீது ஆரோகணஞ் செய்கையிலேயே வுணர்ந்தேன்; ஆயின், கீழிறங்கும் பொறி கவனித்திலனென்றாலும், நம்மைப்போன்ற மிக்கறிவாளருக்கு இஃதொரு பெருங்காரியமன்று; எப்படியுந் தெரிந்து கொள்ளலாம்; ஆகையால், இம்மாவின் மீதேறி இதன் வேகத்தைக் கண்டறிவோம்.

கட்வாங்கன் சூத்திரப்பரியேறி ககனமார்க்கஞ் செல்லுதல்.

தாரு. திடுக்கிட்டு, ஆஹா! யென்செய்வேன்? இவ்வரச குமரர் துடுக்காகப் பதறிச்செய்த காரியத்தை நினைக்கில் என்மனந் திடுக்கிடுகின்றதே; வள்ளலே! யான் யென் செய்வேன்?

சோம. தாருவர்மா! ஏன் துயரப்படுகின்றாய்?

தாரு. அரசசிங்கமே! தமதிளங்குமரன் நான் ஆதியில் சூத்திரப்பரியேறிச் சென்றதைக் கவனித்திருந்து நான் சமுகத்தில் சம்பாஷித்துக் கொண்டிருக்குமமையத்து, திடீரென அப்புரவியேறி மேலேறு விசைக்கருவியை முடுக்கிக் ககனமார்க்கஞ் சென்றனரே. அதைக் கீழே யிறக்கச்செயயும் வழிதெரிந்திலரே; ஐயோ; ஒருக்கால் அதன் உச்சியில் வைத்திருக்கும் சூத்திரத்தை யிறங்கச்செய்யுங் கருவியென வெண்ணி முறுக்கில், முன்னிலும் அதிவேகமாய்ச்செல்லுமே, யான் யென்செய்வேன்; அவ்விதஞ் செல்லில் ஒருக்கால் தமதிளஞ் சிறுவன் திப்பிரமையுற்று பூமியில் தவறிவிழுந்திடில் அவனது சரீரத்துள்ள ஒரு சிற்றெலும்பையுங்காண வரிதாகுமே. யான் எது செய்வேன்?

சோம. அடே பாவி! பரமசண்டாளா! நீயொரு சூத்திரப்பரியுடன் இவண்வந்து பலருமறியப் பரீக்ஷை யீந்து என்னபங்கஞ்செய்ய நினைத்தனையோ? துரோகி! என்மனம் பதறுகிறதே; உயிர்துடிக்கின்றதே, சண்டாளா! நான் என்செய்வேன். ஏ மந்திரி! இந்தத்துரோகி தாருவர்மாவைப் பிணித்து சிறைச்சாலையில் வைக்கச்செய்? எனதுசெல்வக்குமரன் ஜீவவந்தனுய்த் திரும்பி இவண்வரில், இவன் மனமகிழப் பரிசளித் தனுப்புவோம். அன்றேல், இவனது உயிரைநாய், நரி, கழுகுகளுண்ணும் வண்ணம் இவனைத் தூக்கிடுவோம்.

மந். மகாராஜ்! அவ்விதமே செய்யத்திட்டப்படுத்துகிறேன்.

(தாருவர்மாவை சிறையிலமர்த்தி எல்லோரும் நிட்கிரமித்தல்.)

**2**-வது களம்.

லீலா. தன் தாதி சுந்தரவதனையுடன் பிரவேசித்தல்.

லீலா. சகி சுந்தரவதனா! என் சகோதரன் கட்வாங்கன் சூத்திரப்பரியேறி ஆகாயகமனஞ் செய்ததால் இன்று என் பிதா மிக்க வருத்தமுற்றிருக்கின்றனர். ஆகையாலிச்சமயந் தப்பினால் நான் உத்தேசித்தபடி எனதாசைக்கண்ணாளன் வீரவர்மருடன் மறுதேயஞ் செல்லச்சமயமிலது; ஆகையால், என்னின்னுயிர்ப்பாங்கி! நீ துரிதமாக வீரவர்மரிடம் சென்று, இன்றிரவு இரண்டு குதிரையுடன் இந்நகரத்திற்குத் தென் திசையிலிருக்கும் நகர்புறச்சாவடியில் வந்திருக்கும்படி தெரிவித்து, அன்னவரதுயனுபாவத்தைத் துரிதமாயறிந்துவா? என்மனம் ஏதோ ஒரு விதமாயிருக்கிறதே; புத்திஸ்திரப்படவில்லை; நான் என் செய்வேன்? தோழி! இக்காரியத்தை எவ்விதமாகவாவது முடித்துவர வேண்டுகிறேன்?

சுந். சகி! நீயேன் துயரடைகின்றாய்? நான் நினது ஆசை நாயகரிடஞ் சென்று அவரை யெவ்விதமும் நின் எண்ணத்தின்படி நடக்கும்படி திட்டஞ்செய்து வருகிறேன்; நீ யொன்றுக்கு மஞ்சவேண்டாம். சந்தோஷமாயிரு? நான் சென்றுவருகிறேன்.

(சுந்தரவதனா நிட்கிரமித்தல்.)

3-வது களம்.

(வீரவர்மன் நண்பனுடன் பிரவேசித்தல்.)

வீர. நண்பா! என்மனம் ஒரு காரியத்திலும் பிரவேசிக்காமல்சஞ்சலப்பட்டுக்கொண்டிருக்கிறது: பின்னால் ஏதாவது ஆபத்து வருவதற்கு அறிகுறியோவென்று பயப்படுகிறேன்.

தோழ. சகே! நினதுடம்பின் பூரிப்பைப்பார்த்தால் எந்தக் குருடங்கூட நின்னை வருத்தமுற்றிருப்பதாக நினைக்கமாட்டான். துயரக்கடலி லாழ்ந்தவருக்குப் பூரிப்பேது?

வீர. உன் பரிகாசம்போதும் நிறுத்து?

தோழ. அப்படியானால் என்னுடனுரைப்பானேன்?

வீர. (தனக்குள்) சகி லீலாவதி! நின் சகோதரனுக்கு நேர்ந்தவாபத்தினால், நீ எனக்குக் கொடுத்த வாக்குறுதியை நினையாதிருப்பாயோ? உன்னைவிட்டகன்றதுமுதல் என்மனம் எதிலும் நாட்டமில்லாமல் உன்னுடன் ஒட்டம்பிடித்து அன்னிய நாட்டைக்கிட்ட வகைதேடிக்கொண்டிருக்கிறது. உனதெண்ணத்தை விசாரிக்க எந்தத் தூதரையனுப்புவேன்; ஒருவேளை அரசனிதையறிந்தால் யான் எமபுரஞ்சேருவது திண்ணம். உன் மனமெவ்விதமோ யறியேன்.

(வீரவர்மன் மதனவேதனையால் துன்பப்படுதல்)

ஏ மன்மதா! நான் நினக்கு ஏதபராதமியற்றினன். இத்துயருறுத்துகின்றாயே. ஐயோ! நான் என்செய்வேன்? எனதன்பிற்கிசைந்தலீலாவதி! நின்னைநினைத்து யான்படும்அவஸ்தை என்ஒருநாவால் உரைக்கத் தரமன்றே; அந்தோ! அச்சத்தால் ஆளில்லாப்பாவியாகி அல்லலடையு மெந்தனைத்தேற்றச்சகல விதத்திலும் மேன்பாடுடைய நீ சாமர்த்தியமான நின்அந்தரங்கமுள்ள சகி ஒருத்தியை யனுப்பலாகாதோ? ஆனால், இவன் மந்திரி குமாரனன்றோ, இருக்கட்டும் பார்ப்போம், இவன் கெட்டான், இவனைவிட மிக்கழகுள்ள மகாராஜாக்கள் மதலையர் பலருளர்; அன்னவரில் யாரையாவது மனங்கொள்ளலாமென நினைத்தனையோ? அப்படி நினைப்பதற்கு நீசொன்னவார்த்தை தவறி நடப்பவளல்லவே; ஐயோ! என் பழையவினை அப்படியும் நின்னை நினைக்கச் செய்திருக்குமோ, ஏதோ வறியேன்; ஆயினும்; இன்னம் ஒரு விமைப்பொழுதிற்கு நின் அந்தரங்க மெந்தனுக்குத் தெரியாதிருக்குமாயின், என் உயிர் உடலிற்றறிக்காது; கண்மணி! யான் யென்செய்வேன்? ஆசை யில்லாதிருந்த வெந்தனுக்கு ஆசை

காண்பிவித்து அவஸ்தை யடையத்தான் என்னை விடுத்தாயோ; அன்றேல். நின் அனிச்சமலர் நிகர்த்த காந்தட் கரத்தால் என்னைக் கட்டியணைப்பாயோ? ஆ பிரியவதனு! என் செய்வேன்.

(மூர்ச்சித்தல்)

(சுந்தரவதனு பிரவேசித்தல்.)

சுந். நாம் வந்ததைக்கூடத் தெரிந்துகொள்ளாது லீலாவதிமீது கொண்ட காதலால் பலகாதல் மொழிபகர்ந்து மன்மத தாபத்தால் மூர்ச்சித்தார். இவரது சோகத்தை நான் தீர்த்து இவரை லீலாவதியுடன் சேர்ப்பது உசிதமே; அவ்விதமே செய்கிறேன்.

(வீரவர்மன் மூர்ச்சை தெளிந்தெழுதல்)

வீர. சகி சுந்தரவதனு! வா? நான் எனது தோழனுன கட்வாங்கன் சூத்திரப்பரியேறி ககனமார்க்கஞ் சென்றவுடன் தாருவர்மா மொழிந்த வார்த்தையை நினைத்து அவனது வியோகத்தைவெண்ணி மூர்ச்சித்தேன்; நீயும் நல்லசமயத்தில் வந்தனை; லீலாவதி சந்தோஷமாயிருக்கிருளா? அன்றேல் கட்வாங்கனின் வியோகத்தால் துயருற்று வருந்துகின்றனளா? என்ன விசேஷம்? சீக்கிறம் தெரிவிப்பாய்?

சுந். (புன்னகையுடன்) மகராஜ்! வாஸ்தவந்தான்; நண்பர்களாகிய நீங்கள் இருவரும் பிரியாநேசராய் இருந்ததால் துக்கம் ஜனிக்கவேண்டியதுதான்; ஆனுல், இது சமயந் தாம் அவ்வித துக்கமடையாவிடினும், லீலாவதியின் பேரில் காமப்பெருக்கத்தால் துயரடைந்து மூர்ச்சித்ததுவுண்மையே; நான் தாம் காமப்பெருக்கத்தால் சம்பாஷிக்க ஆரம்பித்ததுமுதல்தாம்மூர்ச்சையானவரை தமதுவிரகதாபத்தின் நடத்தையைக் கூடவிருந்து பார்த்தவள்;காமுகர்களுக்கு நே

த்திரம் தெரியாதென்பது உண்மையே; இருக்கட்டும், எதுவாயின் என்ன; லீலாவதிக்கு அவள் சகோதராதுவியோக துக்கமிருப்பினும், தமது மேன்மை பொருந்திய வசனமிருதத்தை நினைத்து அன்னவள் மன்மதன் வயப்பட்டு அனுபவிக்கும் அல்லலுக்கு அளவிலது. அன்னவளது மூர்ச்சை தெளிவிக்க எவ்வளவோகஷ்டப்பட்டுத் தெளிவித்து, அன்னவளால் அனுப்பப்பட்டு இவண் வந்தேன்.

வீர. சகி ஏதோ நான் அறியாத்தன்மையால் லீலாவதியை நிந்தித்திருப்பினும் அவைகளை நின் மனதில்வையாது எனது துயரத்தைக் கண்ணுற்று மன்னித்து, அவளைப்பற்றி ஏதேனும் விசேஷமிருப்பின் தெரிவித்து என் மனோபாவத்தைத் திருப்தி செய்விக்கக் கோருகின்றேன்.

சுந். மகராஜ்! மனவருந்தவேண்டாம்; தாங்கள் எவ்வளவு சஞ்சலமடைந்தீர்களோ அதைவிட ஆயிரமடங்கு அதிகமாக அவள் துயரனுபவிக்கின்றாள். ஆகையால், தாம் இன்றிரவு இரண்டு குதிரையுடன் இந்நகரத்திற்குத் தென்புறத்திலிருக்கும் நகர்புறச் சாவடியில் வந்திருப்பின், லீலாவதி அவண் வருவாள். இருவருஞ் சேர்ந்து மறுநகர் சென்று சுகித்திருக்கலாம். இது சங்கதியைத் தமக்குத் தெரிவிக்கும்படி அவள் பணித்தனள். யான் தெரிவித்த சங்கதியில் ஜாக்கிரதையாயிருங்கள், சென்று வருகிறேன்.

வீரவ. சகி! மெத்தசந்தோஷம்; நான் தயாராக விருக்கிறேன், நீ என் கண்ணாட்டிக்குச்சொல்லு.

(சுந்தரவதனை நிட்கிரமித்தல்.)

லீலா. அடே மன்மதா! ஏன் எந்தனை இவ்வளவு துயரப்படுத்துகின்றனை? வேண்டாம்; யானோ அபலை, அதிலும் காமமென்பது இன்னவிதமென வறியாதபேதை; ஐயோ!

பாவி! எந்தனை யிலட்சியமாக்கி நீசெய்யுஞ் சித்திரவதை என்னால் சகிக்கமுடியாது; எனதாசை நாயகர் எந்தனுடன் நேசமாகி நாங்களிருவரும் உல்லாசமாக விருக்குங்கால் சண்டாளா! உனதாண்மையை அப்பொழுது காட்டுகிறேன்; துரோகி! ஏன் இந்த வண்ணம் யெந்தனை யிம்சிக்கின்றாய்?

(சுந்தரவதன பிரவேசித்தல்)

சுந். ஆ! இதென்னவிந்தை; நான் மந்திரிகுமரன்பால் செல்கையில் அன்னவன் லீலாவதியின் மீதுள்ள காதலால் எதிரில் வருபவரைக்கூட வறியாமல் சோகித்திருந்தார். இவண் நோக்கில், மந்திரிகுமரன் மீதுள்ள பாசத்தால் இவள் மூர்ச்சித்திருக்கிறாள். ஆயினும், இப்பொழுது இவளது மூர்ச்சையைத் தெளிவிக்கின்றேன்.

(லீலாவதி மூர்ச்சை தெளிந்தெழுதல்)

லீலா. சகி! சுந்தரவதன! நீ சென்றகாரியம் யாது?

சுந். சகி லீலாவதி! நீயேன் துயரப்படுகிறாய்? வருத்தமுற்றதே? நான் வீரவர்மன் பக்கல் சென்றபொழுது அவன் நின்மீதுள்ள காதலா லடைந்திருந்த துக்கம் எந்தனால் உரைக்குந் தரமன்று. அப்படிக்கிருந்தவரை யான் தேற்றி நீ மொழிந்ததை அன்னவரிடந் தெரிவித்தவுடன் அவர் மிகச்சந்தோஷமுற்று லீலாவதியின் கட்டளையை சிரசில் வகித்து நடக்கிறேனென மொழிந்தனர். அதைக்கேட்டு இவண் வர, நினது அலங்கோலத்தைப் பார்க்கச் சகிக்கவிலது; ஏ லீலாவதி! இனி நீ வருத்தப்படலாகா. இரவில் பிரயாணத்திற்கு வேண்டிய ஆயத்தத்துட னிருக்கவேண்டும். யான் எனது கிரகம் நண்ணி போஜனஞ் செய்துவருகிறேன்.

லீலா. எனதாருயிர் சகி! நினது வசனமிர்தத்தைக் கேட்டவுடன் என்மனம் ஆனந்த சாகரத்திலழுந்தியது. அம்

மணி! துரிதமாகச் சென்று போஜனஞ் செய்துவா; அதற்குள் யான் பிரயாணத்திற்கு வேண்டியதை சித்தஞ் செய்கிறேன்.

சுந்தரவதன நிட்கிரமித்தல்

**4-வது களம்.**

வீர. பிரவேசித்தல்.

வீர. நமதாருயிர் காதலியாய லீலாவதி நமக்கு மொழிந்தவண்ணம் நாம் இன்று ஜாக்கிரதையாக விருக்கவேண்டும். இப்பொழுது அஸ்தமித்து ஒரு ஜாமப்பொழுதாயிற்று; நகரத்து ஜனசங்கமமர்ந்துப்போயிற்று. ஆகையால், நாம் இது சமயம் ஒருவருமறியாது நமது குதிரைச்சாலையில் பகலிலேயே தயார்செய்து வைத்திருக்கும் பரி யிரண்டுடன் இந்நகரின் தெக்ஷிண திக்கிலுள்ள நகர்புறச்சாவடியிற் சென்று காத்திருப்போம்; இனி காலதாமதஞ்செய்யவொண்ணாது; செய்யில் காதலி அவண் வந்து நம்மைக்காணாது திகைப்பாள் என்பதில் ஐயமிலது. (இதோ செல்கிறேன்)

வீர. நகர்புறச்சாவடி நண்ணி லீலாவதியைக்காணாது மயங்கல்.

வீர. மாது நல்லாள் வருகிறேனென்றுறைத்தவள் இன்னம் வரக்காண்கிலேனே; ஒருக்கால் சமயவித்தியாசத்தால் வராதொழிந்தனளோ; அன்றேல், நாம் வருவதற்குமுன் இவண் வந்து நம்மைக்காணாது நகரத்திற்குத்திரும்பினளோ; ஒன்றுந் தெரிவதற்கில்லையே; ஆயினும், நாம் பலவாறு சந்தேகிப்பதில் பயனிலது. நாம் இன்னங் கொஞ்சகாலம் இவணிருந்து பார்ப்போம். வாராதொழியில் பிறகு நமதில்லத்தை நாடிச்செல்வோம்.

5-வது களம்.

லீலாவதி பிரவேசித்தல்.

லீலா. சகி சுந்தரவதனா! நாழிகை யென்னவாயிற்றுப் பார்?

சுந். சகி! இதுதான் நல்லசமயம்; அஸ்தமித்து ஒரு ஜாமமிருக்கும்.

லீலா. தோழி! நகரிலுள்ள ஜனங்களினது சத்தம் அடங்கிப் போயிற்றா?

சுந். தோழி! பட்டணமெல்லாம் நிச்சப்தமாயிருக்கிறது.

லீலா. சகி! ஆயின், இனி நாம் தாமதிக்கக்கூடாது. நமது ஆசைநாயகர் சங்கேதஸ்தானத்தில் காத்திருந்து நமது வரவைக்காணாது மயங்குவர்; நாம் அவ்விதத் துன்பத்திற்கிடங் கொடுக்கலாகாது. சகி! இதோ வைத்திருக்கும் மூட்டையை யெடுத்துக்கொள்; செல்வோம்.

சுந். சகி! மிக நன்று; நினது வாக்கியத்தின்படி இதோ மூட்டையை யெடுத்துக்கொண்டு நான் முன்போகிறேன் நீ என்னுடன் வா.

இருவரும் புறப்பட்டு நகர்புறச்சாவடி நண்ணி வீரவர்மனைக்கண்டு சம்பாஷித்தல்.

லீலா. காந்தா! நமஸ்கரிக்கின்றேன்.

(வந்தித்தல்)

வீர. மங்களம் பிராணப் பிரியே. ஆருயிர்க் காதலி! நாம் இனி யிங்கு தாமதிக்கலாகாது. சுந்தரவதனையைச் சீக்கிறம் நகரத்திற்கனுப்பு; பிறகு மற்றது சம்பாஷிப்போம்.

லீலா. சகி சுந்தரவதனா! நான் சென்று வரட்டுமா?

சுந். நீ கேட்பதற்குயான் என்னவிடை யளிக்கப்போகின்றேன். இனி யெப்பொழுது நினது முகாரவிந்தங்கண்டானந்திப்பேன்.

லீலா. சகி சுந்தரவதனை கலக்கமுறுவதற்கு இது சமயமன்று; கூடிய சீக்கிறமே சதிபதிகளிருவரும் நகர் வருவோம்; நினது கிரகஞ்செல்; மற்றவிஷயங்களுக்கு நான் சொல்லியுந்தனுக்குத் தெரியவேண்டு மென்பதில்லை. இதோ நின் தாள்பணிந்தேன், விடை கொடு?

சுந். சகி ! நீயும் நினது நாயகருஞ் சுகமே இருந்து திரும்ப என் மனங்களிக்க வருவாயாக.

(சுந்தரவதனை போய்விடுகிறாள்)

லீலா. காந்தா ! இனி தாமதஞ் செய்யக்கூடாது. பரியேறிக் கொள்ளுங்கள், செல்வோம்.

வீர. காதற் கிளியே! இதோ பரியேறிக் கொண்டேன்; நீயும் பரியேறிக்கொள்.

(இருவரும் நிட்கிரமிக்கிறார்கள்.)

**6-வது களம்.**

வீரவர்மனும் லீலாவதியும் பிரவேசித்தல்.

வீர. பிரிய சகி ! நாம் இருவரும் மிகுந்த விருட்டினில் நகர்நீங்கி இவ்வனத்தில் வெகுதூரம் வந்துவிட்டோம். இப்பொழுது திவாகரமூர்த்தி, என்மனதில் குடிகொண்டிருந்த வியாகூலம் நின் வரவால் எப்படி நீங்கிற்றோ, அதுபோல் இம்மாநிலத்தைச் சூழ்ந்திருந்த விருள்கூட்டங்களகல உதயாப்தியிற் பிரவேசித்து இப்பொழுதொரு ஜாமப்பொழுதாகின்றது. காரிழையாளே! நின் இருதயத்தைப்போல் தெளிந்த விந்தத்தடாகத்தில் நாமிருவரும் நீராடிப் புசித்துக் கிஞ்சித்து விடையாறலாமா? உன்னிஷ்டம் யாது?

லீலா. இரமணா! தம்மனம் வேறு, என்மனம் வேறென தாம் நினைக்கிறீர்களா? அப்படி யொருபொழுதும் நினைக்கலாகாது. தமக்கு எது விஷயத்தி லிஷ்டமோ அது விஷயத்தில் எந்தனுக்கு மிஷ்டமென்பதை நிச்சயமாய் தாங்கள் சித்தத்தில் மதிக்கவேண்டும். காந்தா! தமது நோக்கத்தின் வண்ணம் நாமிருவரும் இவண் விச்சிராந்தியடையலாம், குதிரையை நிறுத்துங்கள்.

இருவரும் ஸ்நானஞ்செய்து புசித்து ஒரு விருட்சத்தடியில் வீற்றிருத்தல்.

வீர. ஏ சுந்தராங்கி! உலகத்தில் அபூர்வமாகிய ஒரு கனி ஒருவன் கையில் ஒரு நகருக்குச் செல்லும் மத்தியிற் கிடைத்தது; அவனுக்கும் அக்கனிமீது மிக விருப்பமுளது; அப்படியாகில் அவன் அக்கனியைக் கிடைத்த விடத்திலேயே புசிப்பானா, அன்றேல் குறித்த நகரஞ்சென்று புசிப்பானா?

லீலா. (புன்னகையுடன்) காந்தா! கனியெந்தப் புமான் கையிற் கிடைத்ததோ அவனது மனோபீஷ்டப்பிரகாரங் கிடைத்த விடத்திலாவது, குறித்த நகரஞ்சென்றாவது புசிக்கிறான். அதில் என்ன விசேஷம்?

வீர. சுந்தராங்கி! (சுலோகம்)

சஞ்சத்கங்கணநிஸ்வநெ கடிலஸத் காஞ்சிமனோஞஸ்வநே
பத்மாகாரபதே மராளகடீநே பத்மாட்சிஸம்வீக்ஷணே
கிஞ்சித்ப்ரஷ்ட குசொத்தரீயவஸநெ மந்தஸ்மிதாபாஷிணே
முக்தாஹாரதரெ ப்ரியெதவகராத் தாம்பூலமானீயதாம்

லீலா. லலனா! தமது மனோபாவ மின்னதென முன்னமேயானுணர்ந்துமிதுவரை யறியாதவள் போலுபேக்ஷயாயிருந்ததை மன்னிக்கக் கோருகின்றேன்.

(லீலாவதி வீரவர்மனைக்கட்டி காடாலிங்கனஞ் செய்து திரைக்குட்சென்று சுகித்தல்) * * *

வீர. ரமணி! இன்று யானடைந்த சுகம்போல் இந்திராதி தேவர்கள்கூட அடைந்திலர். இனியரைக்ஷணமெக்தனை விட்டகலாது ஆதரிப்பாய்.

லீலா. காந்தா! கன்னல்வில்லி கலங்கும் வடிவழகுள்ள சுந்தரா! தாம் எந்தனுக்களித்த இன்பசுகமானது அடியாள் மனதை விட்டென்று மகலாது; ஆகையால் அடியாளை யினி யரைக்ஷணம் கைநழுவவிடாது ஆதரிப்பாய் சுந்தரா, மங்கையரை மயங்கச்செய்யுந் தந்திரா!

வீர. ரமணி! நன்று, இனி நாம் இவண் நெடுநேர மிருக்க வொவ்வாது; சூரியன் அபராப்தியை யடையுமுன்னம் யாம் ஒரு நகரஞ் செல்லவேண்டும். காதலி! நாம் பிரயாணப்படுவோம் வா.

லீலா. காந்தா! மெத்த சந்தோஷம்; அப்படியே செல்வோம் வாருங்கள்.

(இருவரும் பரியேறிச் செல்லுதல்)

7-வது களம்.

சோரர்கள் பிரவேசித்தல்.

முதல் திருடன். அண்ணே! யாரோ இரண்டு பேர் குதிரை மீது வாராங்கோ.

2-ம் திரு. தம்பீ! நூறு பயண்டாலும் வரட்டும், அவுகெல்லாத்துக்கும் நான் ஒருத்தன் போதுமில்லே.

3-ம் திரு. பத்து நாளாச்சு அண்ணே! ஒரு காசுமில்லே, எங்கும் அம்பிடலே.

1-ம் திரு. அண்ணே! இரண்டு பயல் அல்லோவாரான்.

2-ம் திரு. ஆனால் நல்ல வேட்டைதானின்னிக்கி.

(லீலாவதியும், வீரவர்மனும் பிரவேசித்தல்)

3-ம் திரு. யாரங்கே போறது? நில், கையிலே வச்சுக்கிட்டிருப்பதைப்போடு?

லீலா. ரமணு ! இது யென்ன காலவேற்றுமையாயிருக்கிறது. யாரோ இவண் சிலர் நம்மை நிற்கச்சொல்லி ஆயுதபாணிகளாக நிற்கிறார்களே; என்மனம் பதறுகின்றதே காந்தா ! மிகப்பயங்கரமாயிருக்கிறதே.

வீரவ. ரமணி ! என் துக்கிக்கிறாய்; அஞ்சேல், துயரமுறேல்; இவ்வதமர்கள் யாவராயினும் என்னுடைவாளுக்கிறையளிக்கின்றேன் காதலி !

2-ம் திரு. என்னாவே சும்மா நிற்கிறே; போட்ரயா இல்லாட்டி விடுவேன் குத்து.

வீரவ. நேசர்காள் :

1-ம் திரு. நாங்கள் நேசர்களல்ல ஐயா ! உங்கள் பகையாளி.

2-ம் திரு. சும்மா இரப்பேண்; அவன் சொல்ரதை கேக்கலாம்.

1-ம் திரு. அண்ணே! நேரமாகுது; எவனும் வரப்போறான். அதுக்குத்தான் அவன் நேரம்போக்கலா மெண்டு பாக்கிறான் தெரியுதில்லே.

3-ம் திரு. அண்ணே! அது நிக்கட்டும் எங்கரே, இந்தப் பயலுக்கு உதவியா நூறுபயண்டாலும் வரட்டும்பார்ப்போம்.

வீரவ. ஏ துஷ்டர்காள் ! எனது தீரத்தையும் எனது புயவலுவையும் ஆண்மையையும் நோக்காது தீபவொளியைக் கண்டு விட்டிற்பூச்சி கனியென நினைத்து விழுந்து மாளுவதுபோல், எங்களை மறித்துப் பறிக்கத் துணிந்தீர்கள். நீங்கள் இன்னஞ் சிலகாலம் இவ்வவனியில் இருக்கப் பிரியமுள்ளவர்களாகில் என்முன் நில்லாம லோடிப்போய் விடுங்கள்; அன்றேல், உங்களுயிரை இவ்வுடை வாளுக்கிறையிடுவேன்.

உடைவாளை யுருவுதல்.

1-ம் திரு. அண்ணே! பய ஏதோ வீம்புபேசி விரட்டறான் பாத்தாயா?

2-ம் திரு. சாகப்போர நாய் குலைத்துக் கொள்ளாமல் சாவுமா?

3-ம் திரு. அடேபயலே! ஏதோ சவுரியம் பேசிறு. மரியாதையாய் கையிலிருப்பதை கொடுத்திட்டுப்போ, இல்லாட்டி தெரியுமா இந்தத்தடியாலே மண்டையை உடைத்துத் தகத்திடுவோம்.

வீரவ. ஏ மூர்க்கர்காள்! உங்கள் தலைவிதி யொன்று போல் முடிந்ததாகக் காணுகிறது; சரி இதோபார் உங்களை கண்டம், துண்டம், பின்னம், சின்னஞ்செய்கிறேன்.

வீரவர்மனும் திருடர்களும் போர்புரிதல்.

லீலா. ஏ தோழர்காள்! அவர் தெரியாத சிறுவர். நீங்கள் விருதாவில் அவரைக்கொன்று விடில் யானும் பிராணனை விடுவேன்; அந்தப்பாவம் நிங்களையே சாரும்; ஆகையால், அவரது அறியாமையை மன்னித்து, நீங்கள் விருப்பியபடி எங்கள் கையிலுள்ள பொருள்களை யெல்லாங் கொடுத்து விடுகிறேன்; அவரையிம்சிபாது இவண் வாருங்கள்?

1-ம் திரு. அண்ணே! அந்தப்பயல் கிடக்கிறான். இந்தம்மா சொல்றதை கேட்டையா?

2-ம் திரு. தம்பி! இந்தப்பயல் என்னமோ முறுங்கிறுன்?

3-ம் திரு. அடே! அவன் கிடக்கிறுன், அந்தம்மா சொல்றதை கேளடா

1-ம் திரு. அம்மா உம்மேலே இருக்கிறதும் அந்தப்பயல் போட்டிருப்பதையும் கழட்டிக் கொடுத்து கையிலிருக்கும் ரொக்கம் ரோசனைகளையும் இந்த நொண்டிக்குதிரையையும் கொடுத்துவிட்டா உங்களை விட்டிடுறோம்.

லீலா. நேசர்காள்! எங்களை வருத்தவேண்டாம். எங்களிருவர்களுடைய ஆடையாபரணங்களையும் கையிலுள்ள ரொக்கங்களையும், எங்களிருவர்களுடைய பரியையுமளித் தோம்.

1-ம் திரு. அண்ணே! இவுங்க போனால்போகட்டும் விட்டிடு எங்கிறேன்.

2-ம் திரு. தம்பி! அந்த பொம்பிளை நல்லவதான்; இந்தப்பயல் ரொம்பவீசினான்.

3-ம் திரு. அண்ணே! போனாப்போகட்டு; இந்தப் பொம்பளை முகத்துக்காக இந்தப் பயலே கொன்னிடாமல் விட்டிடு?

2-ம் திரு. தம்பி! ஆனாக்க விட்டிடுறேன்: அடே பலே நீங்க எங்கே போரவுங்க.

வீர. தோழர்காள்! நாங்கள் மச்ச நாட்டிற்குப் போகிறவர்கள்.

1-ம் திரு. அடே பலே! நீங்க எங்கிருந்து வாரவுங்க.

வீர. நேசர்காள்! நாங்கள் கலிங்கதேசத்திலிருந்து வருகிறோம்.

2-ம் திரு. அடே பலே! அந்தப் பொம்பளையால் நீ பிழைச்சுக்கிட்டாய். இல்லாட்டிப்போனா கொன்னிடுவேன்; நீங்க போங்க. தம்பி நாம் போகலாம் வாடா.

(திருடர்கள் நிட்கிரமித்தல்).

லீலா. காந்தா! இதென்ன வபாயம்; பொருள் போனதுமன்றி தமது உயிருக்குக்கூட வபாயம்வர வாரம்பமாயிற்றே. அந்தோ! யான் அத்திருடர்களைப் பணிந்து வேண்டிக்கொள்ளாவிடில், மகா தீர வீர சிகாமணியாகிய தாம் அநியாயமாய் மாண்டு போயிருப்பீர்களே; பிறகு என் கெதி வென்

னும்? நாதா! நாம் எவ்வளவு பொருட் செருக்கோடு இவ ணிற்றேமோ அதுவொரு நொடியில் நீங்கி, நாம் பதாதிக ளானதுமன்றி பஞ்சைப் பரதேசிகளாகினேம். காந்தா! நான் தம்மோடு இவ்வளவு தூரம் நடந்து வந்ததால், என் கால்கள் மிக நோகின்றது. இனி ஒரு அடியெடுத்து வை க்க எந்தனால் முடியாது; ஆகையால், நாதா! பசியோ மிகு தியாக விருக்கிறது; நடக்கவும் கூடவில்லை, யான் என் செய்வேன்?

வீர. பிரியரமணி! ஏதோகாலவித்தியாசமாயிருக்கிறது; மகத்தாகிய அரசர்கள் எனதுபோர் முகத்தில் அஞ்சியோட, ஜயலக்ஷ்மிசமேத போர்முகப் புலியாகிய நான் இந்தப் பஞ் சைகளாகிய சோரர்கள் கையடங்கி, எனதுயிருக்கும் அந் தியகாலம் வரும்படியா யிருந்தது. ஆயிழையாளே! நீ கா ப்பாற்றுவிடில் என்கதி என்னும்? அப்படி நமக்கு கஷ்டகா லம் ஏற்பட்டிருக்க வினி என்னென்ன ஆபத்துகள் அணு குமோ என்னமோ வறிகிலேன். இதைப்பற்றி யாம் துய ருறலாகாது. ஏனெனில் (சுலோகம்).

கஜபுஜங்கவிஹங்கம பந்தநா சசிதிவாகரயோர் க்ரஹபீடந.
மதிமதாஞ்சநவிலொக்யதரித்ரதா விதிரஹொபலவாநிதிமேமதிঃ

என்றபடி விதியை யார் வெல்லுவார்? ஐயோ! பிரிய சகி! நீயோ மிகுந்த க்ஷுத்பாதை யுடனிருக்கிறாய்; நமது கையி லோ ஒன்று மிலது; யான் யாரைப்போய்க் கேட்பேன்? என க்குப் பிச்சையெடுக்கும் வகையுந் தெரிந்திலதே; ஒரு கூலி வேலை செய்யவுந் திறமையிலதே; அந்தோ! பிராணப்பி ரியே! என் மனம் பதைக்கின்றதே.

லீலா. ரமணா! தாம் இப்படித் துயருற அடியாள் சகி ப்பனே? காந்தா! "வரும்விதி வழியில் நிற்பதுண்டோ"? இதுவெலாம் ஈசன் செயலன்றோ? "அவனின்றி போரணு

வும் அசையுமோ" ஆதலால், பிரிய ரமணு ! தாம் கவலை யுற வேண்டாம். ஆயின், க்ஷுத்பாதைக் கேதுசெய்வோமென சஞ்சலிக்கின்றீர்கள்; திருடர்கள் திருஷ்டிக்ககப்படாதுஎன் கழுத்தில் ஒரு வைரகண்ட சரமிருக்கின்றது; அதைத்தருகிறேன்; அதை இவ்வனத்திற்குச் சமீபத்தில் ஏதாவதொரு நாடுளரேல் அதிற் சென்று விலைப்படுத்திவரின், அப்பொருளைக் கொண்டு நமது காலத்தை கொஞ்சநாள் கழிக்கலாம். பின் கடவுளின் திருவுளச் செயல்போல் நடக்கிறது; தாம் மனந்தளரவேண்டாம்.

(கண்டசரத்தை யளித்தல்)

வீர. ஏ பங்கஜாக்ஷி ! நான் மகா பாவியாகினேன். உலகத்தில் ஆடவர்கள் தங்களது நாயகிகளுக்கு உசிதாபரணம் செய்தளியாவிடினும் அன்னவள் தரித்திருக்கும் ஒரே ஆபரணத்தைக் கூட விலை செய்பார்கள்; அவ்வாறிருக்க, உத்தம குலசிகாமணியாகிய நினது ஒரு ஆபரணத்தையும் பாதகனை நான் விலை செய்யச்செல்கின்றேன். ரமணி ! நீ இவ்விடமேஇருக்கின்றாயா?

லீலா. கண்ணாளா !கவலையுறேல். நான் சாக்ஷாத்லோக நாயகரது கருணையினால் இவ்விடமே யிருக்கின்றேன். தாங்கள் துரிதமாகச்சென்று விலைப்படுத்திப்பொருளுடன் வந்து சேருங்கள்.

வீர. கண்மணி !இதோ இவ்வனத்திற்கு அருகிற் சாளுவதேசமென வோர் தேசமுளது; அதிற் சென்று விலைப்படுத்தி வருகிறேன்.

(வீரவர்மன் நிட்கிரமித்தல்)

3-வது ஸீன்.

(கோமுட்டிகளாகிய வியாபாரிகள் பிரவேசித்தல்.)

முதல் செட்டி. ஏ தம்முடு! நாம் சேனு பேரஞ் சேசி கொனி, இ ராஜிமுலனு காபரம் உண்டாமு. நேடு யா தொரு பேரமும் துரகலேது. பகவந்தடு உண்டாடு.

2-ம் செ. ஓ அண்ணு! ஏமி மாட்லாடுதாவு? ஏமுண்டா குடுகனு ஒச்சி பேரஞ்சேசினுண்டே, ஆ தொங்கவாடு கண் ணுலே மன்னுவேசி,ஒகரூபா பேரமினே அட்டகா, பரகாவு க்கு தீய வொத்சு; ஒக முட்டாள் பின்னவாடைன காணமே?

(வீரவர்மன் பிரவேசித்தல்)

வீர. (தனக்குள்) ஆஜகதீசா! இதுவும் நின்மகிமையோ? நினது மகிமையை பிரம்மேந்திராதி தேவர்களு மறியாரெ ன்றால் அசேதனுன யானறிவனோ? சகல வேதங்களால் தேடி யுங் காணக்கிடையாத சரணார விந்த மகிமையை யானறிபவ ல்லவனோ? ஏதோ நின் கருணையினால் சாளுவதேசத்துக் கடைவீதி யடைந்தேன். இவ்வாபரணத்தை யாரிடங்காண் பிப்பது? யார் என்னவிலைக்குக் கேட்பார்களோ? இவ்வாபர ணம் விலைக்கு விற்பதெனில், எவ்வளவுக்கு விற்கவேண்டிய தோ? அதன் கொள் முதலும் தெரியாது, நமக்கு மதிப்பும் தெரியாது; சகலத்திற்கும் கடவுளே துணை. ஆகையால், அதோ விபாரிகள் வீற்றிருப்பதுபோல் தோற்றுகிறது. அவண் சென்று இந்த வாபரணத்தை க்காண்பிவித்து, கொ ள்வதானால் மனதிலுதித்த விலை சொல்வோம். பின் நடப் பதைக் கண்டறிவோம். வைசியசிரேஷ்டர்காள்! வந்தனஞ் செய்கிறேன்.

முதல் செட்டி. தெண்டம் ஒத்ஸுந்தி, ராவல? இக்கட கூசுண்டி? தாம் எத்தேசமுலனுண்டி இக்கட ஒச்சினுவு? மீபேரேமி? பிட்டலு பாமலந்த சவுக்கியங்க உன்னாரா?

வீர. செட்டி சிகாமணியே! தாம் எனது பூர்வோத்திரத்தை விசாரிப்பதால் தமக்குள்ள நன்மை யொன்றுமிலது. இதோ இந்நகையை தாம் விலைக்கு வாங்க சம்மதிதானு?

முதல் சேட்டி ஓ பெத்தவாடு! ஈ சொம்முலு ஏமிவிலெ செப்புதாவு? பாகுக விலெ செப்பித்தெ ஈ வொத்ஸானு.

வீர. செட்டி சிகாமணி! இதன் விலை யெந்தனுக்குத் தெரியாது. தெய்வசாக்ஷிபாக என்னவிலை பெறுமோ அந்த விலை கொடுக்கக் கோருகிறேன்:

முதல் சே. ஏ பாபு நீ கொப்ப மஞ்சிவாடு; கதோச்சனு எட்டல வுண்டைனு, ஈ சொம்மலனே நூட்டியாப்பை வராகலுக்கு மிஞ்சி யெவரும் தீயசாலரு; நீமனசெந்தனே?

2-ம் சே. போரா தொங்கபின்னவாடா! எட்டது நானு ஈ சொம்மலு ஈ நூட்டியாப்பை வராகலுக்கு தக்குவலேது. நீவு தானினே மோசஞ்சேச ஜூசிநாவா?

முதல் சேட்டி. போரா முண்டாகொடுகா! நூவே எவரு இக்கட பிலிசினரு? நீவு ஏமி காரணமந்து மாட்லாட வொச்சிநாவு?

2-ம் சே. ஏரா லஞ்சாகொடுகா! ஏமி செப்பிநாவு? நீவு கொப்பதனிகவாடா? வொண்டிதேனி. ஈ மாட்ட செப்ப வொத்ஸானு?

விர, (தனக்குள்) ஆஹா! இரண்டாவது வைசியன் மகா யோக்கியன்போற் காணுகிறுன். ஆகையால், இவனிடமே விலைப்படுத்துவோம். ஐயா செட்டியாரே! தாம் 150. வராகனுக்கு விலைமதித்தீர்கள். அந்தமகான் 250, வராகனுக்குவிலை மதித்தார். ஆகையால், நகையைக்கொடுங்கள். அந்தச் செட்டியாரிடங் கொடுத்து திரவியத்தை வாங்கிச்செல்கிறேன்.

2-ம் செ. ஏ மகராஜ்! ஆ சொம்மனுனே இச்சி திவேனி தடைலேக. ஈ நாட்டியாப்பை வராகனு இஸ்தாமு.

1-ம் செ. (தனக்குள்) இ தொங்க பின்னவாடு நாக்கு சத்துருவுகா ஒச்சினுடு; ஈ சொம்மனுனே ஈ மனுஷி சோரஞ் சேசிகொனி ஒச்சினுரென்று நம் ராஜு¯ாதக்ர செப்பி வெஸ்தே ஈ பின்னவாடனேகையில் அடிதண்டா வேஸ்தி, ஜயில் லோபல பெட்டிவேஸ்தாரு. தானிவேக ஈ சொம்மனு, நாகும்கிட்டது, ஆ தொங்க முண்டா கொடுக்கும் துரகது. அந்தலனே சேசிவேஸ்த்தாமு. ஏ மனிதா நீவு ஈசொம்மனுனே எக்கட சோரம்செய்துவந்தாய்? இராஜு¯ாதக்ர செப்ப போதானு. ஈசொம்மனுனே நீதக்ர ஈயசாலனு.

வீர. ஐயா செட்டியாரே! தாம் அப்படிச் சொல்வதழகன்று; போனல் போகட்டும் தாங்கள் தான்விலைக்கு வைத்துக் கொண்டு பணத்தைக் கொடுங்கள்.

2-ம் செ. ஒய் நீர் மஞ்சி கெட்டிவாடு; ஏமோ சூஸ்தாம். நீவுபேரஞ்சேகினி, பேர சாமர்த்தியமந்த. ஏதொங்க முண்டா கொடகா நின்னே விடசாலனு?

இப்படி யிருவரும் மாச்சரியப்பட்டு வீரவர்மனை அரசன் முன்னிலைக்கு அழைத்துக் செல்லுதல்.

**9-வது களம்.**

சாளுவராஜனுன புஷ்பபாணனும் மந்திரி மதிவல்லபனும் பிரவேசித்தல்.

புஷ்ப. அமைச்ச! அகிலபுவனகர்த்தாவினது கருணையினல் இச்சாளுவ தேசத்திற் கிறைவனுகினேன். குசாக்ரபுத்தியுள்ள அமாத்திய சிரேஷ்டா! நமது நகரத்துள்ள நான்கு வருணுசிரமத்தார்களும் தங்கள் கர்மானுஷ்டானங்களில் தவருது நடந்து வருகிறுர்களா?

மதி. பூபால சிகாமணே! தமது நன்னீதியின் பிரபாவத்தினல் வருணுசிரமகர்மங்கள் சரிவர நடந்துவருகின்றன.

புஷ்ப. அமாத்தியா! ஆடவனென்று ஜன்மமெடுத்தவர்களுக்கு அரிவையர் சுகத்தைத் தவிற வேறு சுகமிலது. அப்படியிருக்க எனதாருயிர்க் காதலியுடன் எவ்வளவோ சல்லாபமாக விருந்தும் என்மனம் ஆறுதலடையவில்லை. இது விஷயத்தை யாலோசிக்கில்பிரம்மதேவரது மகிமையை மதிக்குந் தரமிலது. ஏனெனில், (சுலோகம்)

ஆவர்த்தஸம்சயாநாம் அபிநயபுவநம் பட்டணம்ஸாஹஸாநாம்
தோஷாணம் ஸந்நிதாநாம் கபடசதமயம் க்ஷேத்ரமப்ரத்யயாநாம்
ஸ்வர்கத்வாரஸ்யவிக்நோ நரகபுரமுகம்ஸர்வமாயாகரண்டம்
ஸ்திரியந்த்ரம்கேநஹ்ருஷ்டம் விஷமம்ருதமயம்ப்ராணிலோக
ஸ்யபாசஃ

என்னும் நீதியின்படி ஜனங்களை வாட்டுகின்றார். யானும் அவர்களி லொருவனுனதால் மயக்கந் தெளிந்திலது. செய்யும் வகையாது?

மதி. அரசசிரேஷ்டா! தாம் மொழிந்தது உண்மையே ஏனெனில் (சுலோகம்)

விசுவாமித்ர பராசரப்ரப்ருதயோ வாதாம்பு பர்ணுசநா
தேபிஸ்திரிமுக பங்கஜா ஸுலளிதம் த்ரஷ்டவ்ய மோஹம் கதஃ
சால்யாந்நம் ஸக்ருதம் பயோததிபுதம் யேபுஞ்சதே மாநவாஃ
தேஷாமிந்த்ரிய நிக்ரஹோயதிபவேத் விந்த்யப்லவ ஸாகராஃ

என்ற நியாயத்தின் வண்ணம் இந்திரிய நிக்கிரகம் செய்த முமுக்ஷாதிகளைக் கூட மன்மதன் தன் வயத்தராக்காது விடவில்லை யெனில், தம்மைப்போலொத்த இரஸிகசிகாமணிகளுக்கு கேட்பானேன்?

(வீரவர்மனும் மற்ற விரண்டு செட்டிகளும் பிரவேசித்தல்.)

வீர. மகராஜ்! நமஸ்கரிக்கின்றேன்.

செட். தேவரா தெண்டம் ஒஸ்துந்தி.

புஷ்ப. ஏ சுந்தராங்கா! நீயும் இவ்வியாபாரிகளும் இவண் வந்தகாரணம் யாது?

செட். தேவரா! இ பின்னவாடு நாகடைக்கு ஒச்சி ஈ சொம்முலுனே கிரயஞ்சேசச செப்பினடு; தானிகிரயமுலனு இ பின்னவாடுகி தெல்லேது. தானிகாபட்டி ஈ சொம்மலனு சப்சியம்ஒச்சி தேவராசமுகம் லோபலவிக்ஞாபனஞ் செய்ய ஒச்சினமு.

புஷ்ப. ஆ! ஆ!! அமைச்ச! இந்த வாபரணம் எவ்வளவு சுந்திரமாயிருக்கிறது! நன்று விசாரிப்போம். ஏ சுந்தரவதன! இந்த வாபரணம் நினக்குக் கிடைத்தது எவ்வண்ணம்? நீயார்? நின்நகரம்யாது? நின்பெயர் என்ன?.

வீர. தோன்றலே! யான் குச்சர நாட்டிறைவனின் மந்திரிகுமரன்; என்பெயர் வீரவர்மன். யானும் பெனது நாயகியுமாக தேசாடனஞ் செய்துவருகையில் வனத்திற்றிருடர்கள் மறித்துக்கொண்டு எங்களது வஸ்துக்கள் யாவையும் பறித்துக் கொண்டதன்றி, எங்கள் வாகனங்களேயும் பறித்துக்கொண்டனர். பின் என்காதலி பசியால்களேத்துப்போனதால்திருடர் கண்ணுக்குப்புலப் படாதிருந்த விந்தகண்டசரமொன்றை என்னிடமளித்து இந்நகரத்திற் விற்று புசிப்பதற்கேதாவது வாங்கிவரும்படி வேண்டினள்; யான் இவ்வாபரணத்தைக் கொண்டு விலேப்படுத்த இந்நகர் வந்ததில் இவ்விரு வியாபாரிகளும் துர் எண்ணங்கொண்டு மாச்சரியத்தினல் சோரஞ் செய்தேனென சமுகம் அழைத்து வந்தனர். இதைத்தவிர வேறொன்றுமில்லது.

புஷ்ப. (தனக்குள்) ஆ! ஹா! இவ்வாபரணம் எவ்வளவு மேன்மையுள்ளதாயிருக்கிறது; இதைத்தரிக்கும் யுவதி எப்பேர்ப்பட்டவளாக விருக்கவேண்டும்; அன்னவளை எவ்வித த்திலாவது நாம் அடையாவிடில் நம்மனம் ஆறுதலடையாது. ஆகையால் அன்னவளை வெகு தந்திரமாய் அழைத்துவர ஏற்பாடு செய்கின்றேன். ஏ வீரவர்மா! நீ மொழிந்தது உண்மையாயினும், இந்த வியாபாரிகள் இன்னகரில் பேர்பெற வாழ்ந்திருப்பவர்கள். ஆகையால், அன்னவர்கள் என் முன்னிலையில் அபத்த மொழியார்கள். தற்காலம் இதெனக்கு பெரும் சந்தேகமாயிருக்கிறது; ஆராய்ந்து இதன் உண்மையை கூடிய சீக்கிறத்தில் அறிகின்றேன். அதுவரை இராஜமுறைமைப்படி நீ சிறைச்சாலையில் இருக்க வேண்டும். ஏ சேவகா! நாம் மறு உத்திரவு கொடுக்கும் வரை இவரை யாதொரு இம்சையுஞ் செய்யாது சிறைச்சாலையில் வைத்திரு?

வீரவர்மனைக் காராக்கிரகத்துக்கு அழைத்துப்போதல்.

வீர. ஏ ஜகதீசா! இது நின்னருளோ? யான் யென் செய்வேன்? யாருக்குறைப்பேன்? ஏ ஆபத்பாந்தவா! ஏ என தன்பிற்குரிய காதலி! நின் தலையெழுத்து ஒயாக்கவலைக்கு இடங் கொடுத்ததன்றி சந்தோஷத்திற்குக் காரணமிலதே. ஆ பிராணப்பிரியே! இது யென்தனைப்பிடித்த விதியோ; ஆ லோகநாதா! ஆதிமத்தியாந்தரகிதா! வடுப்படாக்குலத்தில் ஜனித்து சிறைச்சாலை புகவே விதித்தாய்? யான் என்செய் வேன். (பாடுதல்)

குலத்திடையுங் கொடியனொரு குடித்தனத்துங் கொடியேன்
குறிகளிலுங்கொடியன் அன்றிக்குணங்களிலுங் கொடியேன்
மலத்திடையே புழுத்த புழுக்களிலுங் கடையேன்
வுன் மனத்துப் பெரும்பாவி வஞ்சக நெஞ்சப் புலையேன்

நலத்திடையோ ரணுவளவும் நண்ணுகிலேன் பொல்லா நாய்க்கு நகை தோன்ற நின்றேன் பேய்க்குமிக விழிந்தேன் [னே நிலத்திடை நானேன் பிறந்தேனின்கருத்தை யறியேனிர்குண நடராஜ நிபுணமணி விளக்கே!

ஏ ஜகதீசா! நின் கருணையிவ்வளவோ? எனக்கும் காராக்கிரகப் பிரவேசம் விதித்தனையோ ? ஆ! என் காதலி! எந்தனுக்கு நேர்ந்த விக்கட்டை நினக்குப் புகல்வர்யாரோ? போனவன் வருவானென்று எதிர்பார்த்துக் காணுததாற்றியங்கி மயங்குவையோ? ஆ பேதையே! பெண்கள் சிகாமணியே ! பெருமையாய் வாழ்ந்த பெண்ணே! நின்கதி எவ்வாருயிற்ரே? எப்பாடு படுகின்றனையோ? தூர்த்தனைத்துடர்ந்து வந்ததால் எப்பொழுதும் இக்கட்டே யடைந்தோமெனவெண்ணிபரிதவித்து உயிரைத் துறந்தனையோ? யான் என் செய்வேன்; யாரை நோவுவேன் ? என்விதி யிப்படியாயின் யான் நொந்து கொள்வதற்கும்வகையுளதோ? ஆ! ஆ!! என்னருமைக்காதலி! வளநாடாளும் மன்னவன் மகளே! அந்தோ! நின்னைத்தெருவில் விடுத்து தியங்குகின்றேன், மயங்குகின்றேன், என்செய்வேன்.

வீரவர்மனைக் காராக்கிரகப்பிரவேசம் செய்வித்தல்.

புஷ்ப. சேவகர்காள்! நீங்களொரு சிவிகை யெடுப்பித்துக் கொண்டு நமது நகர்ப்புறத்துள்ள வனத்தில் தனது நாயகனது வரவை யெதிர்பார்த்திருக்கும் வஞ்சிக் கொடியிடைப்பெண்மயிலாளைக் கண்டு, அவள்மனமகிழ வுரையாடி சிவிகையேற்றி நமது நகரில் யானனந்த மனுபவிக்குமபரஞ்சித மாளிகையில் வைத்து சேடியர்கள் பலரைக்காவலமைத்து நமக்குச்சங்கதி தெரிவிப்பில், நீங்களுக்குத் திரளான வெகுமதியளிக்கப்படும். ஜல்தி சென்று வாருங்கள்.

சேவகர், சிவிகையாட்கள் எல்லோரும் நிட்கிரமித்தல்.

10-வது ஸீன்.

லீலா. ஆ ஜகதீசா! இதென்ன விந்தை ? யான் பிறந்த பெருமையை நினைத்துத் துயருறவோ, அன்றேல், என் பிதா வென்தனது சவுந்தரியங்களைக் கண்டு விவாகஞ் செய்விக்காதிருந்த விருப்பை நோகவோ, இன்றி, எனதருமைநாயகர் நகர்சென் றாபரணத்தை விலைப்படுத்தப் போனவரின்னம் வராதிருப்பதை நினைந்தரற்றவோ ஏதை நினைந்தரற்றுவேன்? ஏதோவெனது வலதுகண்ணும் வலது தோளுந் துடிக்கின்றதே, இதென்ன கெடுதியோ ? நமது நாயகருக்கேது தீங்கு விளைந்ததோ? அறிகிலேன், எதுவரினும் அனுபவியாமல் விடுமோ? ஜகதீசா! நினது கருணையெவ்வாறோ வறிகிலேன்.

சேவகர்களும், சிவிகைதாங்குவோரும் பிரவேசித்தல்.

சேவ. அன்னையே ! சேவகர் அடி பணிகின்றோம்.

லீலா. அடே சேவகர்காள் ! நீங்கள் யார் ? என்ன விசேஷம் ?

சேவ. அம்மணி ! தமது நாதரான வீரவர்மன் ஒரு வைரகண்ட சரத்தை விற்பதற்காக விதோ சமீபத்துள்ள சாளுவத்தேசத்தின்கண் வைசியர்வீதி சென்றதாகவும், அப்படி விலைசெய்கையில் அவ்வைசியர்கள் அவரைத் திருடனெனப் பிணித்து அரசசமுகம்விட, அரசன் விசாரித்ததற்கு வீரவர்மன் தன்னுடைய வரலாறுகளைப் புகன்றதன்றி அவ்வாபரணந் தனது நாயகியாய தம்முடையதெனவும், தாங்களிவணிருப்பதாகவும் மொழிந்தனர். அதைக்கேட்டவரசன் வைசியர்கள் சொல்வதையுந்தமது நாயகர் மொழிவதையுங் கேட்டுச் சந்தேகங்கொண்டு தங்களை வினவிலுண்மை விளங்குமென நிச்சயித்துத் தங்களை யழைத்துவரப் பணித்தனர்.

லீலா, ஆ! ஜகதீசா! இதென்ன பேரிடியாயிருக்கிறது; சேவகர்காள்! எனது நாதரெவணிருக்கிறார்?

சேவ. தாயே! கவலைப்படவேண்டாம். அன்னவரது பூர்வோத்திரந் தெரிந்தவுடன், அரசர் தம்முடன் சிம்மாதனத்து அமர்த்தி யிருக்கிறார்.

லீலா. சேவகர்காள்! அப்படியாயின் அன்னவர் ஏன் எந்தனை யழைக்கவரவில்லை?

சேவ. அன்னையே! அவரையே அழைத்துவர வாசன் ஆக்ஞாபித்தனர். உடனே அவ்வைசியர்கள் அரசனை வேண்டி யிவனை யனுப்பி லோடிப்போவானென மொழிந்ததால் வரவில்லை.

லீலா. அப்படியாயின், நிங்களோடு ஏன் வரவில்லை?

சேவ. தாயே! தமது நாதரது வரலாறுகளைத்தெரிந்து கொண்டபின் சிறைக்கைதிகளைப்போல் எங்களுடன் அனுப்ப வாசருக்கிஷ்ட மில்லாமற்ருன்.

லீலா. (தனக்குள்) ஆ! ஆ! இதென்ன விந்தையாயிருக்கிறது; நமது நாதரோ விக்கட்டி லகப்பட்டுக்கொண்டனர். இவர்களுடன் நாமரசர்சபை நண்ணி உற்றதுரையாவிடில், நமது நாதர் திரும்பும் வழியிலது. இதர்க்கென் செய்யலாம்; சகலத்திற்கும் ஜகதீசர்தான் துணைசெய்யவேண்டும். நாம்செல்லவேண்டுவதுதான். சேவகர்காள்! நிங்களது உரையை நம்பியே நானரசசபை நண்ணவங்கீகரித்தேன். ஆகையால், நீங்களெந்தனை வேருக நினையாது, நிங்களது சகோதரியாகப்பாவித்து, எந்தனைக் காப்பாற்றவேண்டும். இதோ சிவிகையின் மீதாரோகணித்தேன்.

சிவிகையைமூடி, அரசராணைப்படிஅபரஞ்சித வரண்மனையி லமர்த்தித்திரும்புதல்.

சேவ. மகராஜ்! ஆக்ஞாபனத்தின்வண்ணம் அம்மாது சிரோன்மணியை அபரஞ்சிதவரண்மனையிலமர்த்திவந்தோம்.

புஷ். சபாஷ்! சேவகர்காள்! நீங்கள் இம்முத்திரைமோதிரத்தைக் காண்பிவித்து நிங்களுக்கு வேண்டிய திரவியம் பெற்றுச் செல்லுங்கள்?

சேவகரும் மற்றவரும் நிட்கிரமித்தல்.

புஷ். அமைச்ச! சிறைவைத்த மந்திரி குமரனை சிறிதில்ண் அழைப்பியுங்கள்?

மதி. ஆக்ஞா மகராஜ்!

வீரவர்மன் பிரவேசித்தல்.

புஷ். ஏ வீரவர்மா! நீமெத்த வுயர்குடியிற் பிறந்த சீமானனதாலும், இந்நகை நீசோரஞ் செய்ததாக நமக்குத் தோன்றுததாலும், நின்னை சிறை நீக்கினம். நீ யெப்படியிருப்பினுமினியரைக்ஷண மிவணிருக்கலாகாது. இந்நகரில் நின்னைக் காணில் நினக்கு சிரசாக்கினை விதிக்கப்படும்.

வீரவர்மன் நிட்கிரமித்தல்.

புஷ். அமைச்ச! அரியயுக்திபால் கொணர்ந்த அரிவையின்பாற் சென்று, அவளது சங்கதி யரிந்துவருகிறேன். மந்திரிவர்யா! தாம் இராஜகாரிய துரந்தரராக விருக்கவேண்டும்,

## 11-வது ஸீன்

லீலா. (தனக்குள்) ஆ! ஜகதீசா! இதென்னவபாயமாயிருக்கிறது. நம்மிடஞ் சேவகர் சொல்லியழைத்ததென்ன, இப்பொழுது இவ்வரண்மனையில் பலசேடியருடன் நம்மைச்சிறைவைத்த தென்? ஆலோசிக்குங்கால், ஏதோ விபரீத

மாக விருக்கிறது. ஆயினுஞ் சகலத்திர்க்கும் ஜகதீசர் துணை செய்யவேண்டும். இச்சகிமாருடன் சம்பாஷித்துப் பார்ப்போம். அம்மணி! தமது நாமதேயம் யாது?

துண். (தனக்குள்) ஆ! இம்மட நல்லாள் எக்குலத்து தித்தவளோ? யார்பெற்ற செல்வமோ? ஐயோ! பாவம், இம் மன்னவன். பெண்பழி, பெண்பாவம், ஒன்றுநோக்காது, இவளது நாயகரை சிறைவைத்து, இவளையிவண் அழைத்து வந்திருப்பதை யாலோசிக்கில், அரசனுக்குக் கேடுகாலமென் பதில், ஐயமிலது: ஆயின், இவள்வருத்தமாக மொழியில், நம் மாலியன்ற வுதவிசெய்யவேண்டும். (பிரகாசமாக) பெண் மணி! யென்பெயர் குணபூஷணி யெனமொழிவார்கள்.

லீலா. அன்னைநிகர் குணபூஷணி! உலகில் பெண்ஜன்ம மெடுத்தோர் யாவரும்மொன்றே; எல்லோருக்கும் மானுவ மானமொன்றே; அப்படிக் கிருப்பதிலும் அனுதையானவொரு பெண்ணிக்கட்டிலகப்பட்டுக்கொண்டால், மற்றப்பெண்மணி கள் அவளுக்குதவி செய்யலாகாதா? அன்னையே!

குணபூ. எனதாருயிர் சகோதரி நிகர் அன்னையே! நீ யார்? உன்பெயரென்ன? நீ இவண் வரக்காரணம்யாது? இவை களிலொன்று மொளியாது உற்றதுரைக்கில், நினக்கு வேண் டிய வுதவி செய்யக்கார்த்திருக்கிறேன்.

லீலா. அன்னையே! நானின்று தம் வயற்றிற் பிறந்த தாக நினைக்கவேண்டும். தாயே! யானோ கலிங்கதேசத்த ரசன்மகள்; என்பெயர் லீலாவதி; யான்மங்கைப் பருவம டைந்தவுடன், அம்மணி! எங்கள் நகரத்து மந்திரிகுமாரரான வீரவர்மன் என்பவர்மீது காதலுற்று, தாதியால் என்காதலை யுணர்த்தி, ஒருவரு மறியாம லிருவரும் இரவில் நகர் நீங்கி வனமார்க்கம் வரும்போது சோரர்கள் எங்களை யணுகி

எங்களது பொருள்களை யெல்லாங் கவர்ந்துபோக பிறகு வருத்தத்தால் நாங்கள் இந்நகர்ப் புறத்துள்ள வனத்தோரமடைந்து, மிக்கப் பசியால் களைத்து என் நாதரிடமென் கண்டசரத்தை விற்று வரப்பணித்தனுப்ப, அன்னவரின்னகர்வந்துநெடுநேரத்திற்குப்பிறகு எனதாபரணத்தைசோரஞ்செய்தனரென்றுஇன்னகரத்தமர்ந்தவிரண்டுசெட்டிகள் அரசசமுகத்தில் விடுத்ததாகவும், அரசன்என் நாதராதுவாய்ப்பிறப்பறிந்து, எந்தனை விசாரிப்பதற்கழைத்ததாகவுஞ் சேவகர் புகல, யான் எனது அவிவேகத்தால் அன்னவர் வார்த்தையை நம்பி அவர்கள் கொணர்ந்த சிவிகைமீது இவண்வர, எந்தனை யிம்மாளிகை யமர்த்தி, நிங்களை யெந்தனுக்குக் காவலமர்த்திச் சென்றனர். இதையோஜிக்குங்கால் எந்தன் பாதி விருத்தியத்திற்குப் பங்கம் வருமென வுன்னுகிறேன். ஆகையால், அன்னையே! அவ்விதமிலாது எந்தனை நின் வயிற்றுதித்த பெண்மணிபோற் பாவித்துக் காப்பாற்றக் கோருகின்றனன். எந்தனுக்கு நின்னையன்றி வேறு துணையிலது.

(பணிதல்)

தணபூ. அம்மணி! ஐயோ பாவம்: உயர் குடியிற் பிறந்த வுத்தமியாகிய வுனக்கிவ்வளவாபத்து விளைந்ததா? அந்தோ! பேதையே துயருறாதே? அம்மணி சற்று சம்பாஷியாதிரு? அரசர் வருவதுபோற் றோன்றுகிறது. அவர்சென்றபின் நின்மனதைச் சந்தோஷப்படுத்துகிறேன்.

(புஷ்பபாணன் பிரவேசித்தல்.)

லீலாவதி வந்தித்தல்.

புஷ். பெண்கள் சிகாமணியே! நினது பூர்வோத்திரமறிந்தயான் நீதுன்புறுவது சகியாது, நின்னையழைத்து வரப் பணித்தனன். எமோகனுங்கி! நீ யணிந்திருந்த கண்டசர

த்தைக் கண்ணுற்றவுடன் இதைத்தரிக்குஞ் சீமாட்டி மேன்மையுள்ள பெருமாட்டிதானென வூகித்து, சேவகர்களை யாக்ஞாபித்து நின்னை அழைத்துவரப் பணித்தனன். ஆகையால், ஆயிழையாளே! நான் நினைத்ததற்குத் தற்காலம் நின்னைப் பிரத்தியக்ஷமாகக் கண்டதில் மிகக்காதல் கொண்டனன். ஏ கண்ணுட்டி ! நினது மோகதாகத்தால் மிகத்துயருறும் பரமசண்டாளனாகிய வெந்தனை நின்கடைக்கண்ணுற் பார்த்து, அனங்கன் பாதையை யொழிப்பாய் ரமணி !

லீலா. மகராஜ் ! இதென்ன விந்தை ! தம்மைப்போலொத்த மேலோர்கள் அன்னிய மாதர்மீது காதல் கொள்ளப்போமா? அப்படியாயினும் யான் நாதனுடனிருக்க, இப்பேர்ப்பட்ட கெட்ட வெண்ணங்கொள்வது அரசுரிமைக் கழகாகுமா? வேண்டாம், கெட்ட நினைப்பையகற்றி, எனது நாதருடனெந்தனைச் சேர்த்தனுப்பின், தமக்கு கீர்த்தியுஞ் செல்வமும் மேன்மேலும் பெருகும். வள்ளலே ! வகை யறியாது காமமென்கிற படுகுழியில் வீழ்ந்து, இகழ்ச்சி யென்னும் பதம்பெறாது மென்மையுறுவீர் மன்னவா !

புஷ்ப. ஏ ஹம்சகமனே ! நினது வசனமிருதத்தைக் கேட்டானந்தங் கொண்டேன். ஏ பிரியதமே! நினது நாயகனை வர்த்தகர் சொன்னவுறுதியின் மேலும் நினது மேன்மையான சவுந்தரியத்தினாலும், அன்னவனை இன்னகரிலரைக்ஷணந் தங்கக்கூடாதெனக் கட்டளையிட்டனுப்பிவிட்டேன். ஏ சுந்தராங்கி! நின்னாத ரிவணிருப்பானென வச்சம் வேண்டாம். ஏசிமாட்டி ! எனதாருயிர்க்கண்ணுட்டி ! நான்மகாபாவியே ; நினது போகமொன்றலது மற்றதேவேந்திர போகமு மெனக்குவசநாபியே ; நினதகிழய அதரத்தில் குமழியிடும் அமிர்தத்தைப் பானஞ்செய்யக் கார்த்திருக்கு மெந்த

னது மனதையானந்திக்கச்செய்து, உனதழகிய கரங்களால் கட்டிச்சேராயோ, காமன்பாதையை நீக்காயோ பெண்ணே! என்னிருகண்ணே!

லீலா. (தனக்குள்) ஓ! இம்மன்னவன் நம்மீது மிகக் காதலுற்றுத் தவிக்கின்றனன். இது சமயமெதிர்த்து திக்காரஞ்செய்யில் ஒருக்கால் நம்மை பலாத்காரஞ் செய்யின் நமது பதிவிருதா தர்மத்திற்குப்பங்கம் வரும். ஆகையால் இப்பாவியை கொச்சை மொழியாலேமாற்றி நாம் இந்நகர் நீங்கும் வழியைத்தேடவேண்டும். அப்படியே செய்கின்றேன். (லீலாவதி புன்னகையுடன்) மன்னர் மன்னவா! துயரம்வேண்டாம். யானிதுவரைத் தமது மனோபாவத்தைப் பரிசோதித்ததன்றி வேறிலது. மன்னவா! ஆதியில் யான் மந்திரிமைந்தர் மகாதீரவீரனென வெண்ணி யவனைப் பின்றொடர்ந்துவர, வனத்தில் சோரர்கள் மறித்தவுடன், அஞ்சியொடுங்க, எந்தனது ஆபரணம் முழுமையும் அக்கள்ளர் வசத்தாகியது. அதுமுதலவனை எவ்விதமாவது பிரிந்து தம்மைப்போலொத்த சொகுசு நாயகரைச்சேரக் கருதியிருந்தேன். அதன்படி தெய்வங் கூட்டிவைத்தது. மன்னவா! ஆயின், எனக்கோர் நோன்பிருக்கின்றது; அது முடிவதற் கின்னமொருமாத காலஞ்செல்லும். அதுவரை தாம்பொருத்திருக்கில் தமது இஷ்டம்போல் நான் நடப்பதற்குத் தடையிலது.

புஷ்ப. காதலி! தன்னியனாகினேன். நீ மொழிந்த வண்ணமே வொருமாதங் கார்த்திருக்கிறேன். ஆயின், அதுவரை யொரு நிமிஷமொரு யுகமாகக் கழிப்பேன். யானுண்ணவும் இராஜகாரியத்திற் பிரவேசிக்கவும் என் மனமியலா. காதலி! கருணை செய்யவேண்டும். ஏழையை மறந்துவிடலாகா.

லீலா. மகராஜ் ! தாமப்படி நினைக்கலாகா; நாளொருக்காலுந் தங்களை மறவேன்.

(புஷ்பபாணன் நிட்கிரமித்தல்.)

லீலா. அன்னையே ! இவ்விதிக்குயான் யென் செய்வேன்? நீ யெந்தனைக் காப்பாற்றாவிடிலினி யென் ஜீவனை வைத்திருக்க எணிலேன் தாயே!

தூணபூ. எனதருமைக் கண்மணி நிகர் லீலாவதி ! மன வருத்தப்படாதே (பெண்ணென்றால் பேயுமிரங்குமல்லவா) அப்படிக்கிருக்க வெந்தனாலேதாவது உதவிசெய்யக் கூடுமாயின் நீ தெரிவிக்கிறபடி நினக்குயான் ஒத்தாசை புரிவேன். தெரிவிப்பாய் கண்மணி !

லீலா. அன்னையே! அரசரிவன் வந்து எந்தனுடன் சம்பாஷித்ததையெல்லாந் தாமறிந்ததே. அப்படியிருக்க யானின்னகரிலேயே இருப்பேனாகில், எனக்குப் பதிவிருதா தர்மபங்கம் வருமென்பதில் ஐயமிலதென்பது நின்மனதிற்குந் தெரிந்ததே. ஆகையால், தாயே ! என்மீதுகருணைசெய்து ஆடவர்கள்தரிக்கும்படியான வுடையொன்று யெந்தனுக்களிப்பின், யானின்றிரவு எவ்விதமேனு மிந்நகர்நீங்கி யெந்நாட்டிலாவதுசென்று, எப்படியாவது யெனது ஆருயிற்காதலரைக்கண்டு என் புரியைச்சேர்வேன். இந்தவுபகாரம் நீபுரியில் நின்னை யெனது குலதெய்வமாக வெண்ணி முப்போழ்தும் பணிகுவேன்.

தூண. மதிமுகத்தையலே ! நீமொழிந்தது வுசிதமே. ஆயினும், அப்படி செய்வதற் கென்மனம் நாடாவிடினும், ஒருகாரணத்தால் செய்து முடிக்கவேண்டு மெனத்தோன்றுகிறது. யாதெனில், நீவிரும்பியபடி நினக்களியாவிடில் நின்பதிவிருதா தர்மத்திற்குப் பங்கம் வருமென்பது நிச்சய

மாக விருக்கிறது. அப்படிச்செய்யிலோ, இதுவரைநினது வசனுமிருதத்தைக் கேட்டுக் களிப்புற்றிருந்த வுந்தனைப்பிரிந்து தவிக்க வேண்டியதாகிறது. ஆகையால், நினதுவியோகத்தால் யான் துன்புறினும் நினதுபதிவிருதா தர்மத்தைக் காப்பாற்றில் எந்தனுக்கு சுகிர்தமுண்டென்பதில் ஐயமிலது. ஆதலால், நங்கையே! நடுக்கமுறேல். நினது நாட்டத்தின் வண்ணமிதோ யானெனது கிரகஞ்சென்று, உத்தம அரசகுமரர்க ளணியுமாடைகள் ஒருவருமறியாது நினக்குக் கொணர்ந்தளிக்கின்றனன். யான் சென்றுவருகிறேன்.

லீலா. அன்னையே! நினது வாஞ்சைக்குக் கைமாறு செய்ய வியலாத யான்நினதரும் வயற்றுதிக்காவிடினும், ஆபத்தில் ரக்ஷித்தவன்னையாகிய நினது சரணாரவிந்தத்தில் சாஷ்டாங்கமாக வந்திக்கின்றனன்.

(வந்தித்தல்.)

குணபூ. கற்புடைய மடநல்லாளே! நினது நாயகருடன் கூடி, அருந்ததி கண்டதிசயிக்கும் ஆரணங்கா யிருப்பாய் நீ வருத்தப்படாதே. யான் சென்று வருகிறேன்.

(குணபூஷணி நிட்கிரமித்து மறுபடி பிரவேசித்தல்.)

லீலா. அன்னையே வாருங்கள்?

குண. மடநல்லாளே! நான் நின்னிடம் மொழிந்தவண்ணம் ஒராடை தயார்செய்து வந்தனன். இனி சந்தேகமிலாது செல்லலாம். நங்கையே! இதோ இதிலாடவர் தரிக்குமாடைகளும், வழியிலினைப்பாறக் கொஞ்சம் தின்பண்டங் களுமிருக்கின்றன. தையலே! இவைகளையெல்லா மொரு மூட்டையாகக் கட்டியிருக்கின்றனன். இப்படியே எடுத்துச் செல்லலாம்; ஆபின், எந்தனைமட்டில் மறந்துவிடாதே. ஞாபகமிருக்கட்டும்.

லீலா. அன்னையே! தங்களை மறந்து விடுவேனென வெண்ண வேண்டாம். என்னுயிரை மறந்தாலும் மறப்பனெயல்லாது, தங்களை மறவேன். இப்பொழுது நாழிகையோ அஸ்தமித்து ஜாமப்பொழுதாயிற்று; ஆகையால்இந்த வேளையில் யான் பிரயாணப்பட வேண்டியதென்றுநினைக்கிறேன். தங்களது அபிப்பிராயம் யாது?

துணபூ. மங்கையே! நீ மொழிந்ததும் உசிதமே; ஆயின் இது சமயம் நகர்ப்புறத்துள்ளோரும், நகரிலுள்ளோரும் நித்திரையிலிருக்குங் காலமாகவும், நகர்முழுவது நிச்சப்தமாயுமிருக்கிறது, ஆகையால், நீ யிவ்விடமிருந்தே ஆடவருடை தரித்துச் செல்லவேண்டும்.

லீலா. நன்று மொழிந்தீர்கள்? தமது அருமைத்திருவாக்கின்படியே நடக்கத்தயாரக விருக்கின்றன்.

(லீலாவதி ஆணுடை யணிதல்.)

துணபூ. மகராஜ் வந்தனஞ் செய்கின்றேன். தங்களது நாமதேயம் யாது?

லீலா. அன்னையே! அடிபணிகின்றனன். தாங்களே எந்தனைப்பார்த்து இவ்வாறு மொழியலாகுமோ?

துணபூ. மதிமுகத்தையலே! அப்படியன்று; சுபாங்கி! நினது பூர்வ வுருவம் பார்க்கப்பார்க்க மிக மனோகரமாயிருந்தது; இதுசமயம் நீ ஆடவராடை தரித்தவுடன் என்மனது மிகவுங் கலவரப்பட்டது; அச்சந்தோஷத்தால் ஆடவாராடைதரித்த நீ யெப்பெயர் உரைப்பாயோ வென வினவினதல்லது, வித்தியாசமாக மொழிந்ததன்று.

லீலா. எனதாருயிர் கார்த்த அன்னையே! என்பெயரை யாராவது வினவில், காரியதுரந்தரன் என மொழிவன். நமஸ்கரிக்கின்றேன்.

துண்பூ. தைய நல்லாய் ! தகும், தகும்.

லீலா. அன்னையே ! அடிபணிகின்றனன். சென்று வருகின்றேன்.

(பணிதல்)

துண்பூ. மங்கையே ! மகாதேவனருளால் வழிதனில்யாதொரு அபாயமின்றி கற்புக் கரசியாய் நின் காதலரையடைந்து சுகித்திருப்பாய். சென்றுவா, என் ஞாபகம் மட்டிலெப்பொழுது மிருக்கவேண்டும்.

(காரியதுரந்தரன் என மறுபெயர்பூண்ட லீலாவதி நகர்நீங்கிச் செல்லுதல்.)

13-வது ஸீன்.

(மாறுபெயர்கொண்ட காரியதுரந்தரன் பிரவேசித்தல்.)

காரிய. ஆ ஜகதீசா ! இதுவும் நின்னருளோ? இவ்விருளில் அபலையாகிய யான் எனதாருயிர்க் காதலரைப் பிரிந்து இவ்வடவியி லொண்டியாக மாறுவேடம் புனைந்து, காலால் வழிதடவி, இன்னவிடமெனக் குறியாது செல்லும்படி விடுத்தீரே. ஏ ஜகதீசா ! நானென் செய்வேன் (பாடுதல்)

யான்படும் பாடுசிவனே உலகர்நவிலும் பஞ்சுதான்படுமோ
சொல்லத்தான் படுமோ எண்ணத்தான் படுமோ
கான்படுகண்ணியில் மான்படுமாறு கலங்குகின்றேன்
ஏன்படுகின்றனை யென்றிரங்காவிடில் என்செய்வனே.

ஏ லோகேசா ! கேவலம் அபலையாகிய நான் ஏது குற்றஞ்செய்த நிமித்த மிவ்விதத்தண்டனை யமைத்தீர்கள்? ஆயினும், எனது கற்புக் கழிவுவராது ஒரு தாதியை வைத்துக் காத்ததுபோல், இன்னமுமென் நாதரெந்தனை வந்தடையும்படி சீக்கிரமே கொணர்ந்து சேர்ப்பிக்க வேண்டுகிறேன். ஆ நாதா ! எண்ணுசைக் கண்ணுளா ! அன்புள்ளநேயா ! என

தன்பிற்கிசைந்த ஆசை விசுவாசனேயா! தம்மை யெங்கு காண்பேன்? பாவியாகிய வெந்தனைநம்பி நீரெப்பாடு பட்டீரோ? எவ்விதத்துன்பமுறுகின்றீரோ? கண்ணாளா! பாவியான் தவிப்பதைத் தாங்கள் நோக்கில் சகிக்கீர்கள். பலவிதத்துன்பங்களுக்கு மாளாகியும், இதுவரை யெனது கற்புக் கழிவுவராதிருக்கின்றேன். என் நேசக்கிளியே! பாவியாகிய யான் என் க்ஷூத்பாதை பெரிதென்றுசண்டாளி கண்டசரத்தைக் கழற்றித் தமது திவ்வியகரத்திலளித்த பாவத்தாற்றவிக்கின்றேன். ஆ! எனதன்பே! என் கண்ணே! தமக்கென்ன வாபத்து நேர்ந்ததோ ஏதுமறியேன். சகலத்திற்குஞ் சாக்ஷாத்கறைக்கண்டனாகிய கங்காதரனே துணைசெய்யவேண்டும். ஆநாமிதுவரையில் எப்படித் துன்பப்படினும், பகவானருளில்லாதுநமது நாதர் நம்மையடையப் போவதில்லை. இச்சோலையோ மகாரமணியமாக விருக்கிறது;இரவுமுழுதும் வழிநடந்ததால்மிகுந்த சிரமமாகவுமிருக்கிறது. ஆகையால்,நானிந்தசந்தன விருக்ஷமரத்தடியிர் கிஞ்சித்து நேரம்படுத்து சிரமபரிகாரஞ்செய்துகொண்டு, பின்புசித்துச் செல்கின்றேன். ஆதலால், இவண் சயனித்துக் கொள்கின்றேன்.

(சயனித்துத் துயிலல்)

## 14-வது ஸீன்.

(மச்சநாட்டிறைவன் மகளாய லலிதாங்கி தன் சகி சித்திராங்கியுடன் பிரவேசித்தல்)

லலிதா. சகி சித்திராங்கி! என்னடி யின்று யென்மனம் ஏதோ ஒருவிதமா யிருக்கிறதே.

சித்தி. சகி லலிதாங்கி! என்னடி ஆச்சரியமாயிருக்கிறது? உனக்கென்ன மனவருத்த மடி?

லலிதா. சகி! மனவருத்தம் யாதொன்றுமிலது. யான் நேற்றிரவு துயில் செய்கையில் ஒரு சொற்பனங்கண்டு விழித்தேன்; அது முதலிதுவரை என்மனங்கலங்கி யிருக்கிறது; யான்மென் செய்வேன் சகி.

சித்தி. தோழி ! என்ன சொற்பனங் கண்டாயடி?

லலிதா. தோழி! யானிரவு சயனித்திருக்கையில், எங்கோ ஓர்வனத்திற்குள் நீயும் நானுஞ்சென்று விளையாட்டாக மலர் கொய்து வருகையில், ஒரு ரமணீயமான சுகந்தமலரைக் கண்ணுற்ற யான் அதை யெடுக்க மிக்க பிரயாசையடைந்தும் பயனில்லை. பிறகு யானேங்கி அந்தப்புரம் நண்ண எனது வருத்தத்தைக் கண்ணுற்ற நீ யென் பிதாவுக்கறிவிக்க, அவர் அம்மலரை மிகுந்த சந்தோஷ கோஷத்துடனெனக் களிக்க, யான் தரிக்கப்போகுங்கால் அம்மலர் வாட்டமடைய, அதனால் யான் துன்புற்றிருக்குமமையத்து, ஒரு சுந்தரபுருஷ தரிசனங்கிடைத்து, அன்னவருடன் நான் கூடிச்சேர்ந் துறவாடினதாகச் சொற்பனங்கண்டு விழித்தது முதல் என்மனங் கலவரப்படுகிறது.

சித்தி. தோழி ! நீ கண்ட சொற்பனம் மிக உசிதமேயாயினும் தரிக்கப்போன மலர் வாட்டங்கொள்ள, பின் ஒரு நாயகனைச்சேர்ந் துறவாடினதை நோக்குங்கால், உந்தனுக்குச் சீக்கிறமே விவாகமாகி அன்னவரை யடையப்போகும் அமையத்து, அன்னவருக்கு ஏதாவது துன்பமணுகிப்பின் தெளிந்து, இருவரும் சந்தோஷமாயிருக்க வேண்டுமெனவெனதறிவில் புலப்படுகின்றது; ஆயினும், சொற்பனங்களையெல்லாம் வாஸ்தவமாக நடக்குமென நினைக்கலாகாது(சொற்பனத்தில் கண்டபொருள் செலவுக்குதவுமா) அது போல் பலியாது. ஆகையால், அதைப்பற்றி விசனப்படாதே.

நீ கொண்ட துயரம் நீங்க, இது உதயகாலமாக விருப்பதால் நமது பூங்காவிற்குச்சென்று மலர்கொய்து வருவோம் வா?

லலிதா. ஆ என்னின்னுயிர்த்தோழி! நினது வசனமிர்தத்தைச் செவியுற்றவுடன் ஒரு விதத்தில் சந்தோஷமும் மற்றொருவிஷயத்தில் துக்கமும் ஜனிக்கின்றது. ஆயினும் "வரும்விதிவழியில் நிற்பதுண்டோ" ஆகையால் எதுவரினும் அனுபவித்தே தீரவேண்டும். ஏனெனில், (பாடல்)

வருந்தியழைத்தாலும் வாராது வாரா
பொருந்துவனபோமி னென்றால்போகாவிருந்தேங்கி
நெஞ்சம்புண்ணாக நெடுந்தூரம்தானினைந்து
துஞ்சுவதே மாந்தர்தொழில்.

என்று சொல்லப்பட்டிருப்பதால் நாம் துயரப்படுவதில் பிரயோசன மொன்றுமிலது; சகலமுந் தெய்வத்தின் செயலாதலால், பிரியசகி! நினது மனோபாவப்படியே பூங்காவிற்குச் செல்வோம் வா.

(இருவரும் நிட்கிரமித்தல்)

15-வது சீன்.

லலிதா. சகி! இதோபார்த்தனையா? இந்நந்தவனம் பலவித தருக்களாகிய சந்தனம், அரிச்சந்தனம், மந்தாரம், பாரிசாதம், கற்பகம், கொங்கு, விளா, களா, பிலா, மாதுளை, மா, கொய்யா, தெங்கு, கருங்காலி ஆல்; அரசு, அத்தி, வாகை, நாவல், நெல்லி, கர்ஜூரம், இவைகளுடன் சீதாளம், ஆச்சாபுங்கம், இலுப்பை, பனை, கமுகு, தேக்கு, வாகை, முதலிய காட்டு விருட்சங்களும், சாகோப சாகையாய் வளர்ந்து தளிர்த்து, பூத்து, காய்த்து, பழுத்து, பார்ப்போர் மனதைச் சந்தோஷப்படுத்தி தன்னுள் நுழைந்தவர் பானுவின் கிரணங்களை தங்களது நேத்திரத்தாற் காணக்கூடா வண்ணம் நெருங்கியிருக்கின்றதுடன், ஜில்லென்று குளிர்ந்து மிருக்கின்றது,

தோழி ! இதோ பார் இவ்விடத்தில் மல்லிகை, முல்லை,இருவாக்ஷி, சண்பகம், ஜாஜி, பாடலம், ஜவந்தி, நந்தியாவர்த்தம், பாரிஜாதம், அலரி, மரு, மருக்கொழுந்து, வெட்டிவேர், முதலான மலர்கள் நன்றாய் மலர்ந்து குமுகுமென்று வாசனை வீசுவதுடன்,அம்மலர்களிலிருக்கும் மதுவைப்பானஞ்செய்த வண்டுகள் மிக மனோகரமாய் மந்தகிதஞ்செய்கின்றன. சகி ! இதோ ! பார் இவ்விடத்தில், மயில், குயில், அன்னம், சக்கரவாகம், புரா, சிம்புள், காக்கை, கருடன், முதலாகிய பக்ஷிஜாலங்கள் இவ்விருக்ஷங்களிலிருக்கும் கனிகளைப் புசித்து கல கல வென்று சப்திக்கின்றன. தோழி ! இதோபார் மான், முயல், நரி, யானை, பன்றி, காட்டெருமை, புலி, கரடி, சிங்கம் முதலிய மிருகங்கள் நிர்வைரமாய்ச் சேர்ந்து விளையாடிக் கொண்டிருக்கின்றன. ஏ பிரியவசனு சித்திராங்கி! இதோ பார் இத்தடாகம் நான்கு புறமும் சுவர்ணப் படிக்கட்டுகளுடையதாயும், பதுமராகத்தாற் கைபிடிச்சுவர் வைக்கப்பட்டும், அதிலுள்ள தண்ணீர் நிர்மலமாய் தெளிந்து தன்னுள், மச்சம், முதலை, ஆமை, முதலிய ஜலசர ஜந்துக்களால் வசிக்கப்பெற்றதாய் ஆழ்ந்து அலைகள் படிப்படியாய் உயர்ந்து கரையில் மோதுதலினுல் மிருதங்க சப்தத்தையொத்திருக்கின்றது. ஆ ! ஆ ! ! சகி ! இதோபார் இச்சந்தன விருக்ஷத்தடியில் ஒரு பாலமன்மதர் சயனித்திருக்கிறார். இவர் லக்ஷணந்தானென்ன ? பிர்ம்மதேவர் எவ்விதமாகத்தான் படைத்தனரோ அறிகிலேன் ? இவர் யார் பெற்ற செல்வமோ ? எந்நாட்டிறைவனே? இவ்விடத்தில் என்னகாரணத்தினுல் வந்து சயனித்தனரோ? அறிகிலேன். அன்றேல், சாக்ஷாத் லோகேசன் என் மனதைக் கவரக்கருதற்று இவ்வித ஆடவரைப்படைத்து இங்ஙனம் அனுப்பினரோ ஏதோ அறிகிலேன், இம்மகானைக்கண்ட நிமிஷ

மூதல் என் மனம் ஏதோ ஒரு விதமாயிருக்கிறது. யான் யென் செய்வேன் சகி. ஆ! ஆ! ஆ! சகி!

(மூர்ச்சித்தல்.)

சித். அடடா இதென்ன விந்தை! லலிதாங்கி இச்சுந்தராங்கனைக்கண்டு மூர்ச்சித்தனள். யான் மூர்ச்சியாது நிற்கின்றேன். ஆனால் யான் மகாதிடச் சித்தமுள்ளவள்தான். அந்தோ! இச்சுந்தராங்கன் இச்சுந்தராங்கியின் மனதைக் கவருவதற்கு எங்கிருந்து வந்தனனோ? அந்தோ! லலிதாங்கி மூர்ச்சித்தனளே; இனி அவளது மூர்ச்சையைத் தெளிய வைக்காது நாம் மயங்கித் தியங்குவது நன்றல்ல. இதோ மூர்ச்சையைத் தெளிவிக்கின்றேன்.

(தெளிந்தெழுதல்.)

லலி. சகி! இதோ பார் இம்மன்மதன் என்னுவியைக் கொள்ளையிட வந்த சந்திரனோ? சந்திரனுயின் களங்கமுண்டு, இவருக்குக் கொஞ்ச மேனுங்களங்கமிலது; இந்திரனெனச் சொல்வோமெனிலோ, அவரது சரீரம் முழுவதும் நேத்திரமன்றோ? இம்மகானுக்கு அவ்விதமிலது; ஆகையால் ஏ சகி! இவர் யாவராயினும் சரி, எனது பிதாவிடந் தெரிவித்து இவரை யெனக்கு விவாகஞ் செய்வித்தாலாயிற்று, இன்றேல், என்ஜீவன் நிற்காது. செல்வோம் வா.

(இருவரும் நிட்கிரமித்தல்.)

(மச்சநாட்டிறைவனை சுகுணபூஷணன் பிரவேசித்தல்.)

சுகு. அமைச்ச! யானிப்பூமண்டலத்திற் கரசனுகியதற்காகப் பெருமைப்படவில்லை; ஆனல் யான் தம்மை யொத்த நீதிமந்திரியுடன் அரசியற்றும்படி நேர்ந்தமேன்மையை யளித்த கடவுளை வந்திக்கிறேன். அரசன் குடிகளை குழந்தைபோல் பரிபாலிக்க வேண்டும். சத்பத்தினியையடைந்த புரு

ஷன் குழந்தைகளை நன்னடக்கையில் பயிற்றுவதில்கவலை யற்றிருப்பதுபோல, இராச்சியபாரமாகிற சம்சாரத்தில் யான் சத்பத்தினியாகிய உம்மை யடைந்திருப்பதால் நிர்வி ஜாரமாகவிருக்கிறேன். குடிகள் குறைவின்றி வாழ்கிறார் களா ?.

சுந். அண்ணலே ! தமது செங்கோலின் பிரபாவத்தி னல் நமது இராச்சியத்துள்ள நான்கு வருணாசிரமத்தார் களும் தங்கள் கடமைகளில் கிஞ்சித்தும் தவறாது நடந்துவ ருகின்றதுடன், சுகமாக வாழ்கிறார்கள்.

(சகி சித்திராங்கி பிரவேசித்தல்.)

சித். மகராஜ் ! நமஸ்கரிக்கின்றேன்.

சுந். சகி ! சுபமுண்டாகட்டும். என்ன விசேஷம் ?

சித். அண்ணலே ! அடியாள் என்ன வுரைக்கப்போகின் றேன் ?

சுந். சகி ! என்னவிசேஷம் ? ஏன் துயரப்படுகிறாய் ?

சித். மகராஜ் ! இன்றுகாலையானும், தமது செல்வக் குமரியாகிய லலிதாங்கியும் நமது உத்தியான வனத்துக்குச் சென்றோம்; அவ்விடத்தில் நமது நீரோடைக்கருகிலுள்ள சந்தன விருக்ஷத்தடியில் ஒரு சுந்தர புருஷன் நித்திரைசெ ய்திருந்தனன். அவனை நமது லலிதாங்கி கண்ணுற்றவுடன் மூர்ச்சையாக அன்னவளை மிகுந்த சிரமத்துடன் மூர்ச்சை தெளிவித்தேன். தெளிந்தெழுந்தவுடன் மிக மோகப்பட்டு அச்சுந்தராங்கனைத் தனக்கு விவாகஞ்செய்விக்காவிடில் ஜீவ னைத் துறப்பேனென மொழிந்து மறுபடியும் மூர்ச்சித்தனள். அவளைத்தகுந்த சைத்தியோபசாரத்தால் தேற்றி அரண்ம னைக்கழைத்துவந்து அதை மறக்கும்படி எவ்வளவோ இத மொழி பகர்ந்தும் அவள் செவிக்கேற்காது, உண்ணாள், உற

ங்காள், ஆபரணம் பூணுள், கிள்ளையுடன் பேசாள், எங்களை யும்சீறுகிருள், அடிக்கடி மூர்ச்சிக்கிருள். ஆகையால், அண்ணலே ! தாம் கருணைசெய்து அம்மகாபுருடனை விவாகஞ் செய்வியாவிடில் நாம் லலிதாங்கியை யுயிருடன் காண்பதெ ன்பதில்லை. ஆகையாலிதுசங்கதி தமது சமுகமறிவிக்க ஒடிவந்தனன். தமது சித்தம். யான் லலிதாங்கியின் பக்கல் செல்லவேண்டும். அவ்விதமே செல்கிறேன்.

சுதண. ஆ சகி ! அப்படியா, இதென்ன விந்தையாயிருக்கிறது. நீ ஜல்தியில் லலிதாங்கி பக்கல் சென்று அன்னவளை சந்தோஷப்படுத்து ? நான் துரிதமாக உத்தியானவனஞ்சென்று அவ்வாடவனைக் கண்டழைத்து வருகின்றனன்.

(சித்திராங்கி நிட்கிரமித்தல்.)

சுதண். அமைச்ச ! இவ்வதிசயத்தைக் கேட்டீர்களன்றோ? இதற்கேது செய்யலாம். நாம் இவ்விடமின்னம் கிஞ்சித்துக் காலம் தாமதிக்கில், ஒருக்கால் அவ்வாடவன் எங்காவது சென்று விடுவனேல், பின்னர் யாமும் லலிதாங்கியும் துன்புறநேரும். ஆகையால், நாம் இருவரும் உத்தியானவனஞ்சென்றவரை அழைத்துவரலாமென நினைக்கிறேன் ; தமது அபிப்பிராயம் யாதோ? அறிகிலேன்.

சந். அண்ணலே ! இது விஷயத்தில் யாம் ஆலோசிப்பதில் யாதொரு பயனுமிலது; ஏனெனில், மகா உத்தமலக்ஷணத்தையும் அறிவையும் படைத்த ஆரணங்கான லலிதாங்கியே கண்டு மோகித்திருப்பதால் அவ்வாடவன் உயர்குடியிற் பிறந்த உத்தம இராஜகுமாரனாக விருக்கவேண்டுமென்

பதில் ஐயமிலது. ஆகையால், தமது நாட்டத்தின் வண்ணமே அங்ஙனஞ்சென்று சகலவைபவங்களையுஞ் சாங்கோபாங்கமாகத் தெரிந்து அழைத்து வர நாம் செல்வோம் வாருங்கள்.

(இருவரும் நிட்கிரமித்தல்)

17-வது ஸீன்.

லீலாவதி துயில்நீங்கி விழித்தல்

லீலா. ஆ ஜகதீசா ! யான் எவ்வளவு நிர்ப்பாக்கியவதியாகினேன். எனது ஆசைக்கண்ணாளரைப் பிரிந்ததுமன்றி மகாபாவியான வரசனால் கேட்கத்தகாத வசனங்களைக் கேட்டு அவன் வார்த்தைக்கிணங்கியதுபோல் அபிநயித்து ஓர் தாதியின் உதவியால் வெளிக்கிளம்பி இவ்வுத்தியான வனமடைந்து, இரவில் வழிநடந்த இளைப்பால் கிஞ்சித்து இவ்விடஞ்சயனிக்க வமர்ந்து நித்திரைபோய் விட்டேனே. இப்பொழுது நாழிகையோ 10-12 இருக்கும்போலிருக்கிறது. க்ஷுத்பாதையோ சகிக்கலாற்றவில்லை; நாதர் எவ்வாறாயினரோ ? எப்பாடுபடுகின்றனரோ ஏதுமறிந்திலேன். ஏதாவதொரு நகருக்குச் செல்வமென்றால் பாதையுந்தெரிகிலேன். ஆ ! கௌவுரிமனோகரா ! இதுவும் நின் திருவிளையாட்டோ ?

(அரசனும் மந்திரியும் பிரவேசித்தல்)

லீலா. ஆ! இதென்னவிந்தை? நம்மைப்பிடித்த சனீசுவரர் இன்னமுங் கிருபைவைக்க வில்லைபோல் தோற்றுகிறது. யாரோ இவ்விடமிரண்டு ஆடவர்வருகிறார்கள். அவர்களைப் பார்த்தால் அரசனும் மந்திரியும் போலிருக்கிறார்கள். இனியெத்தீங்கு விளையுமோ வறிகிலேன். ஆயினும், யாம் ஆணு

டையாயிருப்பதால் ஆடவனைப் போலவே சம்பாஷிப்போம் பிறகு பார்த்துக்கொள்வோம். பிரபோ மகராஜ்! நமஸ்கரிக்கின்றேன். மந்திரிவர்யா! வந்தனஞ்செய்கின்றேன்.

சுதண. சுபம் உண்டாகுக. அண்ணலே! வீற்றிரும்? தாம் யார்? தமது நாமதேயம்யாது? இவண்வந்தகாரணம் யாது? இதுகளையெல்லாம் சவிஸ்தாரமாய்த் தெரிவிக்கக் கோருகின்றனன்.

லீலா. (தனக்குள்) ஜகதீசர் நம்மிடங் கிருபைவைத்திருக்கிறார் போலும். இவர் நமது உண்மையைத் தெரிந்துகொள்ளாது ஆடவரெனவே நினைத்திருக்கின்றனர் போலும். ஆகையால், இவர் கேட்டதற்கு நாம் தக்கவிடையளிக்க வேண்டும். பிரகாசமாக இம்மகிதலந்தாங்கும் மன்னர் மன்னவா! தீனனாகிய எந்தனை யிலட்சியமாக வெண்ணி வினவியதால் தெரிவிக்கின்றேன். தெரிவிப்பில் தம்மனதுக்கே வொருக்கால் துன்பம் ஜனிக்கும். இருந்தபோதிலும் வெளியிடுகிறேன். யானோ குந்தலநாட்டையாளும் வீரதுரந்தரனின் தவக்குமரன். என்பெயர் சந்திரவதனன்; யான் சகலசாஸ்திரங்களும் பயின்று அஸ்திர சஸ்திரவித்தைகளுங் கற்று மகாதீரனாகவிருக்கையில், இவ்வுலகெலாம் மதிக்குந் திறனுடையதும் மகா சுபலக்ஷணமுள்ளவோர் வாபரணத்தை யான் கண்ணுற, அதையென் பிதாவுக்கறிவியாது யென் மனோராஜியாய் வாங்கியணிந்துகொள்ள, உடனே தேசாடனஞ்செய்ய அவாக்கொண்டு என் மாதாபிதாக்ளுக் கறிவியாது யான் பிரயாணப்பட்டு உல்லாசமாக வருகையில், வழியில் எப்படியோ என் புத்தி கலவரப்பட்டு மதிமயங்கி நித்திரைசெய்ய யாரோ சோரன் அது சமயம் அவ்வாபரணத்தைக் கவர்ந்து செல்ல, யான் விழித்தவுடன் ஒரு பெண் பூதத்தின் குகை

யிலிருக்கக் கண்டு பதரி, பின் என்மனதைத் தேற்றி யிருக்கு ந்தருவாயில் அப்பூதம் என்னிடமணுகி தன்னைச்சேரவே ண்டுமென பலாத்காரஞ்செய்ய வெத்தனிக்க யானுணர்ந்து ஓர் சூழ்ச்சிசெய்து இன்று வழிநடந்து வந்ததால் இளைப்பு ஜாஸ்தியாக விருக்கிறது; நாளை யிரவு நின்மனதின்படி நடக்கி றேனென நயவார்த்தையாக மொழிய, அப்பூதம் வந்தவ ழியே செல்ல, யான் அன்றிரவே அக்குகையை நீங்கிவரு கையில் விடியவொரு ஜாமத்திற்கு இவண் வந்தடைந்தேன். நடந்தசிரமந்தீர இவ்விருக்ஷத்தடியில் கிஞ்சித்து சயனித்த னன். இது சமய மெழுந்தவுடன் தங்களைக்கண்ணுற்று வானந்தமடைந்தனன். பிரபோ! இதுதானெனது விருத் தாந்தம். தாம்யார்? தங்களைக்காணுது வருந்தும் நாடேது? இவைகளை என்மனக்கலக்கந்தீர வுரைசெய்ய மனமுவக் கப் பிரார்த்திக்கின்றனன்.

(வந்தித்தல்)

சுகுண. அமைச்ச! இவர் மகா உத்தமராயும் உயர் கு டியிற் பிறந்த இலட்சணசம்பன்னராயு மிருப்பதுடன், இவர் மகாதுன்பத்தை யிச்சிறு பருவத்திலேயே அடைந்தவருமாக விருக்கின்றார். ஆகையால், நாம் நமது விருத்தாந்தத்தை த்தெரிவித்து நமது கோரிக்கையை முடித்துக் கொள்வோம். ஏ இராஜகுமாரா! யானே இவ்வுத்தியானவனத்திற் கருகிலு ள்ள மச்சநாட்டிறைவன். என் பெயர் சுகுணபூஷணன். இதோ நிற்பவரெனது மந்திரி. தமது நாமதேயம் ஒப்ப சந்திரவதன னென்னும் பெயரினர். நாங்கள் தெய்வகடா க்ஷத்தை முன்னிட்டு இராஜரீகஞ் செய்துவருகையில், நேற் றிரவு யானொரு சொற்பனங்கண்டு விழித்து இவண் வந்த னன். இங்கு தங்களைக் கண்ணுற்றதும் மிக்க வானந்தம

டைந்தனன். இதுதானெனது விருத்தாந்தம். தாமெந்தனை விட மிகச்சிறியவரேயாயினும் என் மனோபாவத்தைத் திருப்திசெய்விக்க தாமெந்தனுக் கொரு வரமளிக்கப் பிரார்த்திக்கின்றனன்.

லீலா. (தனக்குள்) ஆ! இதென்ன சங்கடம். ஒருக்கால் இவ்வரசர் நமதுண்மை யறிந்தனரோ? அறிந்திருப்பாராயின் நம்மைச் சிறிய இராஜகுமரனென மொழியார்; ஆயின், ஒருவரம்வேண்டுமெனப் புகன்றதையாலோசிக்கில்என்மனங் கலவரப்படுகிறது. ஏதோ இன்னமும் பார்ப்போம். ஏ ஜகதீசா! என்னைகாப்பதுன்கடனே. (பிரகாசமாக) அண்ணலே! நன்று மொழிந்தீர்கள்; பாலியனனவெந்தனைப்பார்த்து ஓர்வரம் வேண்டுமெனப்புகன்றது ஆச்சரியத்தினு மாச்சரியமே. அதுநிற்க தாம் கனவு கண்டதாக மொழிந்தீர்கள். அக்கனவு யாது? எந்தனை வேண்டும் வரம்யாது? இவைகளையெல்லா மடியேன்மனஞ் சந்தோஷிக்கத் தெரியப்படுத்தக் கோருகின்றனன்.

சுதண. ஏ மங்கையர் மனமயங்கத்தக்க சுந்தரமமைந்த வள்ளலே!யானருந்தவமியற்றி உத்தம லக்ஷணமமைந்தவோர் பெண்மகளைக் கர்த்தன் கருணையாலடைந்து அன்னவளுக்கு லலிதாங்கியென்னும் நாமமியற்றி வளர்த்துச் சகல கலாநிபுணியாகச்செய்து பாதுகாத்து வருகையில், அன்னவள் மங்கைப்பருவத்தை யடைந்தனள். இதுநிற்க, அன்னவளுக்கோர் சுந்தர ஆடவரை விவாகஞ்செய்விக்கக் கருதுகையில் ஜகதீசர் அசரீரியாக ராஜன்! இன்னங்கொஞ்ச காலத்தினுந்தனுக்கோர் சொற்பனஞ் சாதிப்போம்; அதன் வண்ணம் மணம்முடிப்பாயாக, வென ஓர் வாக்கியம் பிறந்தது. அதன்பின் லோகநாதன் கருணையை யெதிர்பார்த்தி

ருக்கையில் நேற்றிரவு அரியதுயில் கொள்கையில் ஓர் பெரியவர் என்முன்றோன்றி " நின்மனத்துயரகற்றுவாயென " மொழிந்தது மன்றி "நீ உதயத்திலெழுந்துநினது உத்தியானவனஞ்செல்வையேல் அவ்விடம் நினது குமரிக்கிசைந்த வள்ளலொருவன் பிராப்தமாவன் ; அன்னவனுக்கு நினது கன்னிகையை மணஞ்செய்விப்பாயென" மொழிந்துமறைந்தனர். உடனே யான் விழித்து மந்திரியை யழைத்து அவருடன் அதை மொழிந்து இருவருமாக இவ்வுத்தியானவனம் வரத் தம்மைக்கண்டனன். ஆகையால் ஏ சுந்தரா ! தாம் என்மீது கருணைசெய்து பகவத் அனுக்கிரகத்தின் வண்ணமெனது ஏகபுத்திரியை மணந்துஎன்னையாதரிக்கவேண்டும். ஈதலது வேறிலது.

லிலா. (தனக்குள்) ஆ ! இதென்ன விபரீதம். முன்னுத்தேசித்த வண்ணமின்றிப் பகவதனுக்கிரகத்தா லிட்டவரென வெண்ணி யிருப்பினும் தனது குமரியை வதுவை செய்யவேண்டுமெனப் புகன்றனர். அந்தோ யான் யென் செய்வேன்; இதை மறுப்பதற்கு மிடையிலது போல் தோன்றுகிறது; அன்னவரிஷ்டப்படி சம்மதிக்கிலா வீணேஸ்திரீ ஹத்திதோஷம் வருகிறது. இதற்கென்செய்வது ? ஏதோ அன்னவர் மனவிச்சையின் வண்ணம் நாமொத்துக்கொள்ளில் நமது ஆசைக்கண்ணாளரைத்தேடுவதற்கு மநுகூலமாயிருக்கும். ஆயின், அப்பெண்மணியை எவ்விதந் தேற்றப் போகிறேன் ? சகலமும் கறைக்கண்டனருளே. (பிரகாசமாக) ஏ மன்னவர்சிகாமணியே ! தாம் வினவியதற்கு யான் மறுத்துமொழியவேணிலேன். ஆயினும், என் மனரம்மியமாயிருந்த வாபரணங்கிடைக்கும் வரை யான் சிங்காராதிசேஷ்டிதங்கள் செய்துகொள்ளுவதில்லையென வோருறுதிசெய்துகொண்டிருக்கிறேன். ஆகையால், என்மீதருள்சுரந்தவ்

விதவரமெனக்களிக்கும் விஷயத்தில் தமது சித்தப்போல் நடக்கத்தயாராகவிருக்கிறேன்.

சுகுண. ஏ சுந்தராங்கா! தம்மனவிஷ்டம் போலிருக்கலாமென்பதிற்றடையிலது. அப்படியே யளித்தேன். செல்வோம்வாருங்கள்?

லீலா. இராஜசிகாமணியே! யான் தன்னியனுகினேன். ஆயினுந் தமது இளங்குமரியானவள், எந்தனைக்கண்டு இச்சைகொள்ளாளாகில், பின்தாமென்செய்வீர்?

சுகுண. ஏ சுகுணரஞ்சிதமதன! அவ்வாறு நினையேல். நீ யிவ்விடந்துயில்கையி லின்றுதயத்திற்றன் சகியுடனிவ்வுத்தியானவனம் வந்தவெனதன்புள்ள குமரியானவள் தம்மைக்கண்டு காதலுற்று மதனவாதைக்குள்ளாகி மிகத்தளர்ச்சியடைந்தனளென சகிமார்களாலுரைக்கக்கேட்டு, எங்கே தாமெழுந்து வேறெங்கேனுஞ் சென்று விடுவீர்களோவெனச் சங்கையுற்று அதிதுரிதமாக இவணடைந்தனன். மன்னர் மதலாய்! எனது நற்காலவிசேஷத்தால் தாம் என்கண்ணிற் குப்புலப்பட்டதால் மெத்தசந்தோஷங் கொண்டேன். செல்வோம் வாருங்கள்.

லீலா. அண்ணலே! அதுவுமென் நற்காலசூசனையே. இதோ வருகிறேன்.

(மூவரும் நிட்கிரமித்தல்.)

லலி. அடி சகிகாள்! எந்தனையேன் வருத்துகிறீர்கள்? ஐயோ! யான் பென்செய்வேன்? பாவிமதனன் எந்தனை மங்கையென மதியாது வருந்துதற்கழுவனோ? பாவிதென்றல் புலிபோற்சீறி வருத்துவதற்கழுவனோ? அன்றேல், பாவிகளாகிய நீங்கள் சந்தனபானிதகளப கஸ்தூரிகளென மொழிந்து அக்கினித்தழற்களைவாரி யென்மீது போடுவதற்கழுவ

ளே? எந்தனருமை பிதாவென்மனதைக்கவர்ந்த சுந்தராங்க னையின்னமுமழைத்து வந்து எந்தனையாதரியாததைநினைந்த ழுவனே? ஏதென்று யான் வருத்தப்படுவேன்? ஐயோ! சகிகாள்! எனதாசைக்கண்ணாளர் வந்தனரா, இல்லையா? இல்லையேல், நீங்கள் துரிதமாக அவ்வுத்தியானவனஞ்சென்று அம்மகானைக்கண்டு தம்மாலொருகாரிகையாள் உயிரிழக்கி ன்ருள்; பெண்பழி தம்மைத்தானேற்கும், அவ்விதமணு காது தாம்வந்து காப்பாற்றுமென மொழிந்து அழைத்து வாருங்களடி?

ஆ! ஆ! ஆ! சகி (மூர்ச்சித்தல்)

(லீலாவதி, அரசன், மந்திரிஇவர்மூவரும் பிரவேசித்தல்)

லீலா. (தனக்குள்) இப்பெண்மணி நம்மைவிடச் சுப லட்சணவதியா யிருக்கிருள். நம்மை நினைத்து மிகத்தாப த்தை யனுபவிக்கின்ருள். இவள்படும் மதனதாபத்தை யாலோசிக்கில் நம்மை மணந்து அந்தப்புறம் வந்தவுடன் நமது மொழியை வினவி நம்மையனுசரித்து நடப்பவளாகத் தோற்றவில்லையே, இதற்கென் செய்வது? சகலத்திற்குங் கருணமூர்த்தியாகிய கறைக்கண்டனே கருணைபுரியவேண் டும். மேல் நடப்பதையும் பார்ப்போம்.

சித். சகி லலிதாங்கி! நீ துயரப்படாதே; இதோ நினது ஆசைமணவாளரும், நின்பிதாவும் மந்திரியும் வருகின்றனர்.

லலி. சகி எங்கேயடி? (பரபரப்புட னெழுந்து பிதாமுத லானவர்களை வந்தித்து ஓர் புறமாய் ஒதுங்கி நிற்றல்)

சுதண. கண்மணி லலிதாங்கி! நீ யுத்தியானவனத்திற் கண்ட நாயகரை யிதோ அழைத்து வந்தனன். இனி விவா கஞ்செய்து கொண்டு யாதொரு கவலையின்றி சவுக்கியமாயி ருக்கலாமன்ருே?

லலி. பிதா! தமது கெர்ப்பவாசத்தில் ஜனித்த பிரபாவத்தினால் சுபலட்சணமான பர்த்தாவைஅடையும்படி அனுக்கிரகித்தீர்கள். உலகத்தில் "கைநிறைந்த பொன்னிலும் கண்ணிறைந்த கணவனே மேல்" என்பார்கள். எந்தனுக்கு தமது ஆசீர்வாதத்தினு லிரண்டுங்கிடைத்தது.

லீலா. மதனன் மயங்கும் வடிவழகுடையாளே! இலட்சணத்திலும் அறிவிலும் நீமிகுத்தவளென நன்கு விளங்குகின்றது. ஆயினும், நீ யெந்தனைக் கண்டாவல்கொண்டது உண்மையேல் நீ கொண்ட ஆவல் தணியும்படி செய்ய யான் கொண்டவிருதங் குறுக்கிடுகின்றதே,என், செய்வாய்ப்பெண் மணியே!

லலி. காந்தா! தாமெந்தன் மனதைச் சோதிக்க இவ்வண்ணமுரைப்பது தகுதியன்று. தாம் மொழிந்தபடி தமக்கு நோன்பிருப்பினும் அது தீரும்வரை அடியாள் கூடவே இருந்து தமது அமிர்தத்தினு மினிய வசனத்தைக் கேட்டானந்தித்துக் கொண்டிருப்பேன். பிதா! இன்னமுந் தாமதஞ்செய்வது யெந்தனுக்கதிக வருத்தத்தைக்கொடுக்கின்றதே.

சுதண. கண்மணி! அவசரப்படாதே, இதோ ஏற்பாடு செய்கின்றேன். அமைச்ச! அதி துரிதமாக விவாகத்திற் கெத்தனஞ் செய்யுங்கள்?

(விவாகம் முடிந்து சதிபதிகள் அந்தப்புரஞ் சென்றனர்.)

லீலா. கண்மணி! வா, சமீபத்தில் வீற்றிரு?

லலி. ரமணா! இம்மதுரமான வாக்கைக் கேட்பதற்காகவே யான் காத்திருந்தனன்; இதோ விற்றிருக்கிறேன்.

லீலா. சுந்தரி ! வீற்றிருப்பினும் நீ கொண்ட ஆவல் தணியும்படி நின்னைச்சேர்ந்து சுகிக்க சமயமியலவில்லையே வென மிகத் துயருறுகின்றனன்.

லலி. பிராணேசா ! சபாஷ் ! நன்று மொழிந்தீர்கள். தாமிவ்விதமாக வெந்தனை யின்னமு மேமாற்றிவிடலாமென நினைக்கிறீர்களா ? ஒருக்கா லு மினிவிடமாட்டேன் காந்தா ! (கட்டித்தழுவல்)

லீலா. (தனக்குள்) ஆ ! இதென்ன கஷ்டம். இப்பெண் மணி மிகக்காதலுற்றவளாய் நம்மைக்கட்டித் தழுவுகிறாள். இனி நாம் சும்மா விருந்தாலாகாது. இவளிடம நயமொழி யால் பிரமாணஞ் செய்வித்துக் கொண்டு நமதுண்மையைத் தெரிவித்து அன்னவளைச் சந்தோஷிக்கச் செய்யவேண்டும். (பிரகாசமாக) ஆரணங்கே ! நீ யடங்காக்காதல்கொண்டனை; நன்று, நீ இது சமயம் யான் தெரிவிக்குங் காரியத்தை வெளி யிடுவதில்லை யெனப் பிரமாணஞ்செய்யில் உனக்கந்தரங்க மான வொரு காரியந் தெரிவிக்கின்றேன். பின் நாம் கூட லாம்.

லலிதா. அன்புள்ள நாதா ! எந்தனை யருமையாக வென் மாதா பிதாக்கள் பெற்றுவளர்த்தாலும், இளமைப்பருவம் நீங்கி மங்கைப்பருவத் தாயினவுடனே அடியாள் தமது ஆதீ னமன்றோ? ஆகையால், தாம்மொழியுமந்தரங்கத்தைசாக்ஷா த்ஜகதம்பிகையின் நிஜசரணாரவிந்த சாக்ஷியாகவெளியிடுவதி ல்லை; இது சத்தியம் மகராஜ் !

லீலா. காரிகையாளே லலிதாங்கி ! நான் எவ்வளவு லட் சணமுள்ளவனென மதித்தாயோ அதுபோல் எனது சகோ தரரொருவ ரிருக்கிறார். நீ யெந்தனைக்கண்டு மையலாகித்

திரும்பி நகரடைந்தது போல அன்னவரைக் கண்டிரு ந்தால், நீ திரும்பி நகருக்கே வந்திருக்கமாட்டாய். அவர் அவ்வளவு லட்சணமுள்ளவர். அப்பேர்ப்பட்ட நாயகரை நினக்கு யான் மணஞ்செய்து வைக்கிறேன்; அதுவரை யான் நினக்குத் தெரிவிக்குஞ்சங்கதியை வெளியிடாது காற் கவேண்டும். ரமணி! யான் நின்னைப்போலுத்தம க்ஷத்திரிய குலத்திலுதித்த நங்கையே; என்பெயர் லீலாவதி; நான் காரணவசத்தினல் மந்திரிகுமரர்மீது காதலாகி அன்னவரு டன் வரும் மார்க்கத்தில் சனீசுவரர் மாய்கையால் அன்னவ ரைப்பிரிந்து இவ்வாணுடைதரித்து இவண் போந்தனன். எனது பிராதாவோ மதனன் வெல்லும் வடிவழகுள்ளவர். அவரே கலிங்கதேசம் முழுவதும் ஆள இளவரசு பட்டங்கட் டிக் கொண்டிருக்கிருர். ஆகையால், ஆரணங்கே! அன்ன வரை நினக்கு நாதராகச் செய்விக்கிறேன். நீ மயங்காது இன்னம் கிஞ்சித்துக் காலமிச்சங்கதியை வெளியிடாது என் னுடன் சந்தோஷமாய் விளையாடியிருக்கில் நின் மனோபா வந் திருப்தியடையும். அன்றேல், நீ வெளியிடுவையேல்? யான் நின் பிதாவின் வாளுக்கிறையாக, நீ பெண்ணைக்கண்டி ச்சித்த பெரும்பாவையென யாவரும் நின்னை நிந்திக்கநேரி டும். இதற்கென்ன சொல்கிருய்?

லலிநா. ரமணு! தாம் மொழிவது ஆச்சரியத்தினு மாச் சரியமே. தாம் மொழிந்ததற்கும் யான் முன் கண்ட சொற் பனத்திற்கு மொத்திருக்கிறது. ஆயின், ஆசைப்பட்ட யான் சுகத்தையடையாவண்ணம் தடைப்பட்டதே. தாம்மொழிந்த இவ்வந்தரங்கத்தை யான் தமது ஆக்ஞையன்றிவேறெருவரு டனும் மொழியேன். தமது நிஜவுருவத்தை மட்டில் பார் க்க அவாக்கொண்டிருப்பதால், அவ்வுருவத்தைக் காட்டவே ண்டுமாய் பிரார்த்திக்கிறேன்.

(லீலாவதி திரைக்குள் தனது சுயவுருவத்தைக் காட்டல்.)

லலிதா. பிரிய சகோதரி! சாக்ஷாத் லட்சுமியைப்போலொத்த உருவமைந்த தங்களுடைய சகோதரர் மிக வனப்புள்ளவரா யிருப்பரென்பதிற் சற்றும் ஐயமிலது. மகாசுந்தரவதியாகிய தமக்கும் இப்பேர்ப்பட்ட கஷ்டம் ஜனித்ததேவென மிகுந்த துக்கமடைகின்றேன். ஆயினும், விதிவலிது. எனதன்பிற் கிசைந்த பிரிய சகோதரி! தாமினி துன்புறாது ஆணுடையுடனிருந்து சதாசார்வகாலமு மெந்தனுடன் விளையாடிக் கொண்டிருக்கக் கோருகின்றனன்.

லீலா. சகோதரி! வருத்தப்படாதே; ஜகதீசன் கருணையினால் என் மனோரதமும் நின்மனோரதமும் சீக்கிறமே நிறைவேறும். அதுவரை நின் மனோபாவத்தின் படிமே நாமிருவரும் விளையாடிக்கொண்டிருப்போம்.

18-வது களம்.

வீர. ஹா! தப்பினேன். நகையைப்பிடுங்கிக் கொண்டாலுங் காவலிலிருந்து விட்டதே பேருதவி. இனியரைட்சண மிங்கு தங்கக்கூடாது. என்னுசை நாயகியிடஞ் சென்று அவளையழைத்துக் கொண்டு வேறிடஞ்செல்கிறேன். இந்தவிடத்திற்றானே உட்கார்ந்திருந்தாள். வேடிக்கைபார்க்க வேறெங்கேயாவது போயிருப்பாளோ? அந்தத்தடாகத்துக்குச் சமீபத்தில் போய் பார்க்கிறேன். இங்கும் காணோமே. எங்கும் காணோமே. அழைத்துப்பார்க்கிறேன்; காந்தே! ரமணி! சுலோசனா! எதிரில்வா? போரும் பரிகாசம்; நீ பரிகாசம் பண்ணும்படியான ஸ்திதியில் யான் திரும்பி வரவில்லை. சரியெங்குங்காணோம்; ஐயோ! ஜகதீசா! என் சஞ்சிதகர்மாவினியக்கமோ வனத்தில்துஷ்டக்கள்வர் கையிலகப்பட்டு உயிரிழக்க நேரவும், அப்போது எனதாருயிர் காதலியி

னல் மீளவும், பின் அன்னவள் அளித்த கண்டசரத்தை விற்கச்சென்ற காலையில் சோரனெனப் பெயர் வகித்து சிறையிருக்கவும் விதித்தனையே, இன்னம் ஏது துன்பம் அணுகுமோ? அண்ணலே! எவ்விதத்துன்பம் நேரினும் நீயே பாதுகாத்தல் வேண்டும். ஜகதீசா! என்னுசைக்கண்ணாட்டி யெனது வரவை யெதிர்நோக்கி கார்த்திருந்துங் காணாது வருத்தமுற்றுப் பதரிக்கதறினளோ? அந்தோ! பாவியாகிய எந்தனைக்காணு தேங்கிப்பாதவித்துத் தேடச்சென்றிருப்பாளோ? அன்றேல், இவ்வனத்துள்ள துஷ்டஜந்துக்கள் ஏதாவது ஜீவலயஞ் செய்திருக்குமோ? அன்றேல் யாராவது மதிமயக்கஞ் செய்தழைத்துப் போயிருப்பார்களோ? அந்தோ! ஒன்றுந்தெரியேனே. ஆ பிரியசகி! என்னுசைக்கண்ணாட்டி! எங்குற்றாய்? யான் நெடுந்தூரத்தில் வருவதைக் கண்ணுற்று யெந்தனைப் பரீட்சிக்க நினைத்து ஒளிந்திருக்கின்றாயோ? ஆ நாயகி! நீ எந்தனைப் பரிகசித்தது போதும்? சீக்கிறம் என்மனமாருதலடையும் வண்ணம் வந்தாதரிப்பாய் ஆ பிரியரமணி!

(மறுபடியும் பலபுறமும் தேடல்.)

ஓ ஜகதீசா! எனது ஆசைநேச மயிலாள் இன்னகெதியாயினளென வறியாது வாடுகின்றேன். என் செய்வேன்? இது சமயம் தீனன்மீதருள் சுரந்து, காரிழையாள் சென்ற காரணத்தைத் தெரிவிக்கலாகாவா? ஆ பரமேசா! (பாடுதல்)

அரசரெலா மதித்திடப்பேராசையிலே,
யரசோடாலெனவே மிகக்கிளைத்தேனருளறியாக் கடையேன்,
புரசமரம் போற்படுத்தே னெட்டியெனத் தழைத்தேன்
புங்கெனவும் புளியெனவு மங்கியுதிர்க்கின்றேன்,
பரவும் வகைதெரிந்து கொளேன் தெரிந்தாரைப் பணியேன்
பசையறியாக் கருங்கன்மனப் பாரைச் சுமந்துழல்வேன்
விரசுநிலத் தேன்பிறந்தே னின்கருத்தை யறியேன்
விளங்குமணி மன்றோங்கி விளங்கும் பரம்பொருளே.

ஆ லோகநாதா ! யானென் செய்வேன்? யெங்குசெல்வேன்? யெப்போ காண்பேன்? நின்கருணை யெவ்வாறே வறிவேன்? ஐயோ ! பாவியாகிய யான் உயர்குடியிற்பிறந்த வுத்தமியான என்னன்பிற்கிசைந்த லீலாவதியை மகா நீதிதுரந்தர ரான அவளது பிதாவின் மனம் நோகவும், எந்தனையாதரவு டன் பெற்றுவளர்த்த தந்தையின் மனம் நையவும் ஒருவரு மறியாது அழைத்து வந்தபாவத்தினாலே பிரித்தீர்களோ? அரனே ! சிவசங்கரனே ! கங்காதரனே ! மங்கையின் பாக த்தமர்ந்த கங்காளனே ! இனியான் திரும்பி என்மனோரஞ் சித மயிலாளைப்பிரிந்து நகரஞ்செல்ல மனவருமோ ? இனி அன்னவளைப் பிரிந்தபின் சுகந்தாதி அலங்காரங்களையும் அணிந்து பூமியில் நடைப்பிணமாயுழல்வேனோ ? கண்ணு தலே ! ஒருக்கால் எந்தனைத்தேடி, இப்பாழும் நகரத்திற்கு ச்சென்றிருப்பாளோ? அந்நகரத்துள்ளோர் மாதைக்கண்டு அரசனிடம் எம்மாயம்புகன்று ஏதேனும் அன்னவளுக்க விவேகனான அவ்வரசனாலாபத்து விளைந்ததோ ? ஒருக்கால் நாம்சென்று நோக்கிவருவோமெனில், பாவிநம்மைக் காராக் கிரகத்தினின்றும் விடுமைமயத்து இனிநகருக்குள் உன்னைக் காணில் சிரச்சேதஞ் செய்யப்படுமென பணித்திருக்கின்ற னனே. ஏதுசெய்வேன் ? அரிவையே ! என்மனந்தெளிவுற திரும்பிவருவையோ ? அன்றேல், இனியுந்தனைக்காண வழியி லையோ ? என்மனஞ் சகிக்கவில்லையே. ஆ பிராணப்பிரியே! என்மனம்பதறுகிறதே, எங்கு தேடுவேன் ? எவ்விடமென நாடுவேன் ? ஐயோ ! கன்மனப் பாவியாகிய என்ஜீவன் நீஎன் னைப்பிரிந்து மென்னுடலைவிட்டுப் பிரியாது நிற்கின்றதே. ஆ லோகநாதா! ஆபத்பாந்தவா ! அநாதரக்ஷகா ! தீனசரண்யா! பரம்பொருளே ! இன்பமுள்ள காரிகையாளைப் பிரிந்தபின் சுகாதிபோகத்தை விச்சித்த விக்கிரகஸ்தாசிரம தர்மத்தை

வகித்திருப்பதில் யாதும் பயனிலது. யானும்வேண்டிலேன் இனிப்பெரியோர்களாயும் நினதடியார்களாயுமுள்ள மகாத்துமாக்களைப்போற் காஷாயம்பூண்டு இவவுலகெலாஞ்சென்று தேடுவேன். அன்னநடை பெண்மயிலாள் அகப்படாவிடில், நினது சாரணாரவிந்தத்தியானத்துடனுயிர்துறப்பேன் இதுவே சத்தியம், இதுவே உண்மை.

(வீரவர்மன் கஷாயம்பூண்டு செல்லுதல்)

## 3. வது அங்கம்.

### 1-வது களம்

(கட்வாங்கன் ருத்திரப்பரிமீது ஆகாயத்தில் சஞ்சரித்தல்.)

சட். அடடா! யான் பாலியாவஸ்தையாலறியாது விளையாட்டாக வெனது பிதாவினுக்ஞையைப் பெறுமலும், பரமசண்டாளனை கம்மியனிடத்து விபரந்தெரிந்து கொள்ளாமலு மிப்பரியின்மீது ஆகாயகமனஞ் செய்தேனே; அந்தோ! கீழிறங்கும் வழிதெரிந்திலேனே; ஐயோ! என்சரீரம் நடுங்குகின்றதே; மனமோ திடுக்கிடுகின்றதே; பூமியை அவலோகித்தால் அதிலிருக்கும் பர்வதாதிகளெல்லாம் மசகமாணமாய்த்தோற்றுவதை நோக்கில், புரவி ஆகாயத்தில் பூமியினின்றும் வெகுதூரத்திற் செல்வதுபோல் தோற்றுகிறது. பரிசெல்லும் வேகத்தினல் என் உடல் பதறுகிறது. இனிஸ்தாவரித்திருக்க வியலாது. ஆகையால், இப்பரியின் மீதேகுப்புறசயனித்துக் கொள்கிறேன். ஜகதீசரது கருணையிருந்தால் உயிர்பெறுவேன். அன்றேல் பூபதனமாகிமாள்வேன்; இதோ சயனித்துக்கொள்கிறேன். (சயனித்தல்) இதோதலைப்பக்கம்ஒருசுத்திரந்தெரிகிறது. அதைமுறுக்கினல்பரி கீழேயிரங்குமோ? திருப்பிப்பார்க்கிறேன். 'திருப்புதல்'

ஐயோ !இது இன்னம் வேகமாகச் செல்லும் சூத்திரம்போற் காணுகிறதே; ஆ!பக்தவத்ஸலா, இதென்னமாயம்; இப்பரியி னது நடுச்சிரசிலகப்பட்ட ஓர்சூத்திரத்தைத்திருப்ப அதுவே கமாய் முன்சென்றதைவிட இலட்சமடங்கதிகமான வேக த்தோடு செல்லுகிறதே; அந்தோ! கண்பொறிதட்டுகிறது; இனியெந்தனது நேத்திரத்தைத்திறக்கக்கூடப்பயமாயிருக்கி றதே ; இனியென்செய்வேன்? ஏ ஜகதீசா !அனுதரக்ஷகா ! ஆர்த்தத்திராணபரனே ! ஏ காளகண்டா ! கலாத ரா ! இனி எந்தனால் சகிக்கவும் இப்பரிமீதிருக்க வும் ஏணிலேன். ஆகையால், எந்தனைக்காப்பதுன்கட மையே. இதோ இப்பரியின்மீது குப்புறப்படுக்கின் றேன்.

(குப்புறப்படுக்க இடது செவியோரமுள்ள வொரு சூத்திரத்தைக் காணுதல்)

ஆ ஜகதீசா ! ஏதோ ஈதொரு சூத்திரமென் கண்ணிற் குப் புலப்படுகிறது; இதை முறுக்கில் இப்பொழுது செல் லும் வேகத்தைவிட அதிகவேகமாய்ச் செல்லுமோ ? அன் றேல், என்னவாபத்து நேருமோ ? எதுவரினுமினி யனுப வித்தே தீரவேண்டுமென்றோ! இதோ இதை முறுக்குகிறேன்

(முறுக்குதல்)

அப்பா! தெய்வகடாட்சத்தால் பரியின் வேகமடக்குங் கருவியைக் கண்டுபிடித்தேன்.

ஏ கவுரி மனோகரா ! நினது கருணையை என்னென்றிய ம்புவேன்? இப்பரியினது வேகமடங்கி மெதுவாக கீழிறங்கு கின்றது. ஆனால், இப்பொழுது சூரியன் அபராப்தியில் மறைந்து 15-நாழிகையிருக்கும்போற் றோற்றுகிறது. மிகு

ந்த விருளாகவு மிருக்கிறது; இது எவ்விடமிறங்குமோ? மனமோ பதறுகின்றது; யான் துயரப்படுவதில் என்ன பிரயோஜனம்? சகலத்திற்குஞ் சந்திரசேகரரிருக்கிருர்.

(குதிரை மகதநாட்டரசன் மகளாய கமலாக்ஷியிருக்கிற வரண்மனையின் உப்பரிகையி லிறங்கிற்று)

கட். அப்பா! பூமியை வந்தடைந்தோம். இனி யெப்படியாவது உயிருடன் என் பெற்றோரைக் காண்பேன். அண்ணலே! ஆதியே! பரஞ்சோதியே! நினது கருணைப்பிரபாவத்தை என்னென்றியம்புவேன்? ஜகதீசா! சூத்திரப்பரியின்மீது ஆகாயவீதியிற் செல்லுமெந்தனுக்கு ஓர் விதத்தீங்கு மணுகாது இவ்வுப்பரிகையிற் பரியிறங்கச்செய்த தமது கருணைக்குயான் ஆயிரந்தடவை வந்தனஞ்செய்கின்றேன். யானே தற்காலமிறங்கியிருக்குமிடம் உப்பரிகையென்பது மட்டிற்றோன்றுகிறதே யன்றி, இது இன்னநகரமென்றும், இன்னருடைய உப்பரிகை யென்றுந் தெரியவில்லை. அன்றியும், க்ஷுத்பாதையோ மிகஜாஸ்தியாயிருக்கிறது. ஆகையால், யானிப்பரியை யிங்ஙனமோர்பக்கத் தொளித்துவைத்துச் செல்கின்றேன். யாராவது என்விழிக்குப் புலப்படுவார்களாயின் அன்னவர்களுக்குஎனது பூர்வோத்திரத்தைமொழிந்து என்க்ஷுத்பாதையை நிவர்த்தித்துக்கொண்டு பிராதக்காலத்திலெனது பரியேறி என்பிதா அகமகிழவென்னகரஞ் செல்கின்றேன். இதோ! இப்பொழுது பரியையொளித்துவைத்தனன். செல்கின்றேன் இந்தமார்க்கத்தில்.

(உப்பரிகையிற் செல்லுதல்)

ஆ! ஆ! இது எம்மகாராஜாதுவரண்மனையோ? இவ்விடத்தில்நேகசேவகர் உருவின வாளினராய் நித்திரைசெய்கின்றார்கள்; ஆகையால், நாம் மெதுவாக உட்சென்று பார்க்கிறேன்

இவ்வரண்மனை யெவ்வளவு ரமணீயமாயிருக்கின்றது. இந்திர லோகத்துள்ள வரண்மனையு மிதற்கீடன்று. இதைப்போல் நாமெங்குங் கண்டதில்லை. ஆகையால், இதனுட்சென்றுபார்க்கிறேன். "அகோ மதுராமாஸாந்தரிசனம்" இவ்வமளியிற்றுயிலும் ஆரணங்கின் வனப்பை யென்னென்றுரைப்பது? இம்மாது நல்லாள் கந்தர்வமாதோ? கின்னரர் நங்கையோ? இச்சுந்தரப் பெண்மயிலாள் இன்றெனவோர்வதற்கில்லை. ஆயினும், இதுசமயம் யாம் அவளைக்கண்டு மோகித்தல் தகுதியன்று. ஆகையால், இப்பெண்மணியை யெழுப்புகிறேன்.

(எழுப்புதல்)

2-வது களம்.

கமலாட்சி. சகி!ஏன் எழுப்புகிறாய்? இன்னமருணோதயமாகவில்லையே, சற்றுமுன்தான் பார்த்துவந்து படுத்தேன்.

சுட். மாதே! யான் சகியல்ல; ஒரு ஏழைப்பரதேசி.

கம. (பரபரப்புடன்) இதென்ன! மோசமாயிருக்கிறதே; கண்ணைவிழித்துப் பார்க்கிறேன்; என்னவாச்சரியம்! ஒரு மன்மதாகிருதி என்முன் நிற்கிறது; நிஜமாகவே விழித்துக்கொண்டிருக்கிறேனா, அல்லது ஸ்வப்னவஸ்தையிலிருக்கிறேனா? இல்லையே, விழித்துக்கொண்டுதானே யிருக்கிறேன். இவரை தனியிடத்திலழைத்துப்போய் விசாரிப்போம்.

(தனிமையானவிடத்திற் கழைத்துப்போதல்)

கம. பிரபோ! தாம்யார்? தமதுநாமதேயம்யாது? தம்மைக்காணாது வருந்தும்நாடெது? தாமிவண்வந்தகாரணம்யாது? இவைகளை யெல்லாமெந்தனுக்குச் சவிஸ்தாரமாகத் தெரிவிவேண்டுகின்றனன்.

கட். அற்புத சுந்தரி! யான் இதுசமயம் சம்பாஷிப்பதற்குச் சக்தியற்றவனுகவிருக்கிறேன். எந்தனதுபசிதீரக்கருணைசெய்வையேல், பின்னர் எந்தனது விருத்தாந்தங்களெல்லாம் சவிஸ்தாரமாகத் தெரிவிக்கின்றனன். கருணைசெய்ய வேண்டும் காரணி! அன்புநிறைந்த பூரணி!

கம. (தனக்குள்) இம்மகானைப் பார்த்தால் பால சுந்தரராகவிருக்கிறர். என் மனமோ இவரைக் கண்ணுற்றது முதல் மிக்கக்காதலடைகின்றது. ஆயினும் பசிக்களையோடிருப்பதாகத் தெரிவிப்பதால்,இவர்பசியையகற்றிப்பின் இவரது பூர்வோத்திரத்தை வினவுவோம். ஏ சுந்தரா! இதோ இவண் இது சமயத்தில் கிஞ்சித்து பண்டபலாதிகள் வைத்திருக்கின்றனன்; அதைப் புசித்து தமது க்ஷுத்பாதையை நிவர்த்தித்துக் கொள்ளுங்கள்.

(கட்வாங்கன் உண்டு இளைப்பாறல்)

கட். சுந்தரி! எந்தனை யின்னுனென்று கேட்க மிக்க அவாவுற்றதாகத் தெரிவித்தனையன்றே? நன்று, நீயார்? நின் பெயர்யாது? நின் பிதாவின் பெயரும், இந்நகரத்தின் பெபரும், ஒருவாறெந்தனுக்குத் தெரிவிக்கில், பின் என் விருத்தாந்தத்தை யானுரைக்கின்றேன்.

கம. பிரபோ! தாமெந்தனை வினவியதால் தெரிவிக்கின்றேன், கேளுங்கள். இந்நாட்டிற்கு மகதநாடெனப் பெயர்; எனது பிதாவின் பெயர் வீரதுரந்தரனென மொழிவார்கள்;எந்தன் பெயர் கமலாக்ஷி; என் பிதாவுக்குப்யான் ஏக புத்திரிதான். யான் யௌவன வயதை யடைந்ததால் எனக்கு விவாகமாகும்வரை இவ்வந்தப்புரத்தில் எந்தனை யிருக்கும்படி யமைத்து அனேக சேவகர்களையும் சேடியர்

களையும் காவல் அமைத்திருக்கின்றனர். இது தான் என் விருத்தாந்தம். பிரபோ! தமது விருத்தாந்தத்தை மொழிய வேண்டும்,

கட். காரிழையாளே! யானே கலிங்கதேசத்தரசனின் குமரன்; என் பெயர் கட்வாங்கன்: யான் இன்று உதயத்தில் என் பிதாவின் கொலுமுகஞ்செல்ல, அது சமயம் அவண் வந்தஈழதேசத்துகம்மியனொருவன் ஒரு சூத்திரப் புரவியைக் கொணர்ந்து நெடுந்தூரத்தையும் ஒரு நொடியில் சுற்றி வருவேனென மொழிய, அதைப்பரீக்ஷிக்க என் பிதா ஓரிடத்தைக் குறிப்பிட்டு அதிலுள்ள வோரடையாளங் கொண்டு வரப்பணிக்க, அக்கம்மியன் அச்சூத்திரப் பரியேறி அதன் வலது காதை முறுக்க, அப்பரி ஆகாய கமனஞ் செய்து ஐந்து நிமிஷத்திற்கெல்லாம் குறிப்பிட்ட அடையாளத்துடன் என் பிதாவின் சமுகம் நண்ணி சம்பாஷித்துக் கொண்டிருக்கையில், முதலிலவனரோகணஞ் செய்கையில் பார்த்திருந்தேனாதலால்உடனே யான்அப்புரவி மீதேறி அவன்முறுக்கியவண்ணம் சூத்திரத்தைமுறுக்கவேஅதுககனமார்க்கஞ் செல்ல,யான் பயந்து அப்புரவியைகீழிறக்குவதற்குப்பல பிரயத்தனங்கள்செய்தும் முடியாமல், முடிவில்அதன் சிரசினுச்சியிலிருந்த மற்றொரு சூத்திரத்தைக் கண்ணுற்று முறுக்க, முன்னிலும் அதிவேகமாய்ப் புரவி செல்ல, யான் கலவரப்பட்டு நடுங்கி இன்றுதயமுதல் ஏதக்ஷண பரியந்தம் புரவிமீதல்லாடி மதிமருண்டு அப்புரவிமீது குப்புறக்கவிழ்ந்து படுக்க, எதிர்ச்சையாய் என்கரம் அப்புரவியின் இடது செவியோரஞ்செல்ல, அங்கோர் சூத்திரந்தென்பட அதைமுறுக்கவும் பரியின் வேகமடங்கி மெதுவாகக் கீழிறங்க வாரம்பித்து இவ்வுப்பரிகையிலிறங்க, யான்கிஞ்சித்து விச்ராந்தியடைந்துந்

க்ஷாத்பாதையினு லென்னவந்தாலும் வரட்டுமென துணிவு கொண்டு இவண்வர, நீ துயில்வதறிந்து நின்னை யெழுப்பி னேன். இதுதானெது வரலாறு.

சம. பிரபோ ! நன்றாயிற்று; தாம் சூத்திரப்பரியேறி ஆகாயகமனஞ் செய்தபொழுது கடவுளது கருணையினால் தப்பிப்பிழைத்தவர் இவண்வந்து யுவதியாய வெந்தனைத்தட் டியெழுப்பக் காரணம் யாது?

சுட். காரிழையாளே ! யானின்று காலையில் போஜனஞ் செய்தவனாகையாலும், சூத்திரப்பரிமீது வேகமாய்ச்சென்ற சிரமத்தினாலும், பரிஇவ்வரண்மனை யிறங்குங்காலை யிரவு 15-நாழிகை யாகிவிட்டதாலும், பசிக்களையின் மிகுதியா லும், நின்னையெழுப்பினேனேயன்றி வேறன்று. ரமணி! கோபியாதே.

சம. சுந்தரா ! நன்று, தமக்குப் பசிமிகுதியாயினும் யௌவன ஸ்திரியாய வெந்தனை யெழுப்புவது தகுதியா?

சுட். சுந்தரி ! இதுவரை மர்மம் வெளிவிடாது நின்னு, டன் சம்பாஷித்தேன்; இனியவ்விதம் சம்பாஷிக்கலாகாது. கண்மணி ! சுந்தர தருணியாகிய நினது வனப்பைக்கண் ணுற்று மிக்கக்காதலாகி எழுப்பினதாகவே வைத்துக் கொள்; அப்படி நினது நித்திரையை பங்கஞ்செய்த எந்த னது குற்றத்தை மன்னித்து மன்மதனது பாதையைத் தவி ர்க்க மனமுவப்பாய்.

சம. ஏ அண்ணலே ! தாமதிக வனப்புடையவராயி னும் எந்தனை யாவனுடன் எழுப்பிய தம்மை நான் கண்டது மென் மனந்தம்மீது நாட்டமிலாதபக்ஷத்தில்தாமெழுப்பியது குற்றமன்றோ?

கட். சுந்தரி ! அப்படியாயின், நான் நின்னை நோவதில் பயனிலது. ஏனெனில், (சுலோகம்)

இந்தீவரேணநயநம் முகமம்புஜேநகுந்தேநதந்தமதரம்நவபல்லவேந.
அங்காநிசம்பகதளை ச்சவிதாயவேதாः காந்தே! கதம்ரசிதவாநுப
லேநசேதः

என்ற நியாயத்தின் வண்ணம் நினது அங்கங்களை மலர்களாற் படைத்த பிரமன் நின் மனதை மட்டில் கல்லால் அமைத்ததற்கு பிரமனையே நோகவேண்டுமன்றோ? சுந்தரி அவ்விதம் நோகாது நினது அருமைத்திருமேனி எனது சரீரத்தில் அழுந்தப்புல்லும்படி ஒருவாறு காடாலிங்கனஞ்செய்து நினது அதராமிர்தத்தை யளிப்பாய். எனவ்விதம் பகன்றேனெனிலோ, "காமாதுராணும் நபயம் நலஜ்ஜா" என்ற நியாயத்தினல் பயலஜ்ஜை யன்னியில் நின்னுடன் சம்பாஷிக்கலானேன். சுந்தரி ! யினித்தாளேன். மதுரமாகிய அதராமிர்தத்தைப் பானஞ்செய்ய மிக்க அவாக்கொண்டனன். ஆரிழையாளே ! கருணை செய்வாய்.

கம. கண்ணாளா ! யான் இன்று நித்திரைசெய்கையில் ககனமார்க்கத்திலிருந்து ஒரு சுந்தராங்க ரிவண்வந்து எந்தனுடன்கூடிக்கலந்தணைவதாகச்சொர்ப்பனங்கண்டுகளித்திருக்கையில், இரதிலோலா!தாம்வந்துஎந்தனையெழுப்பினீர்கள். விழித்து தங்களைப்பார்த்தமாத்திரத்தில் தங்கள்மீது எந்தனுக்கு விருப்பமில்லாவிடில் நான் தங்களைத் தனிமையாக இவ்விடத்திற் கழைத்துவருவேனு? அடியாள் படும் மதனதாபத்தையிது சமயந்தீர்க்காவிடில் என்னுற்சகிக்கமுடியாது. சுந்தரா ! இதுவரையில் தமது மனதைச் சோதிக்கக் கருதி சம்பாஷித்ததல்லது வேறன்று. கண்ணாளா ! எந்தனைக் கட்டிச் சேர்வாய் மணவாளா !

(இருவருங்கட்டி யாலிங்கனஞ்செய்து களித்தல்.)

கம. எனதாசை நாயகா! உலகில் சொற்பனம் பலியாவென ஆன்ருேர் உறைத்திருக்கின்றனர். அன்றியும் "சொற்பனத்திற் கண்டபொருள் செலவுக்குதவுமா" எனப்பழமொழியு மேற்பட்டிருக்கிறது; அப்படிக்கிருக்க, நான் சொற்பனங்கண்டு விழித்தவுடன் எனதாசை மதனு! கனவில் தோன்றிய உந்தனை நினைவிலுங்கூடிச் சுகிக்கக்கிடைத்தது. ஆயினுமிதுசமயம் என்மனதில் ஓர் வியாகூலஞ் சனிக்கின்றது யென்செய்வேன் நாதா!

கட். காதலி! நினக்கு என்ன வியாகூல மிதுசமயமேற்பட்டது? ஒருவாறு அதைக்கதனஞ்செய்?

கம. ரமணு! தாம் எந்தனைச் சேர்ந்த சுகத்திற்கீடாக தேவேந்திர போகத்தையுஞ் சொல்லலாகாது. அப்படிக்கிருக்க எனது பிதாவறியாது நாமிருவருங் கூடிக்கலந்தோமே; பிதா வறியிலேதாவது வருத்தஞ் செனிக்குமெனத் தோற்றுகிறது. அதனுல் வியாகூலமன்றி வேருென்றுமிலது; இதற்கென் செய்யலாம்?

கட். ரமணி! யோஜிக்கவேண்டாம்; நாமிப்பொழுதே சென்று சூத்திரப்பரியேறி ஆகாய கமனஞ்செய்து எனது நகரமாகிய கலிங்கதேசஞ் செல்லலாம். ஆனுலின்றுதய முதலிதுவரை அப்பரியின்மீது கமனஞ்செய்த விளைப்பு இன்னந் தீரவில்லை. ஆனுல் நாளை பகற்பொழுதை யெப்படியாவது கழித்து விடுவாயானுல் நாளையிரவு அவசியமிருவரும் கலிங்கதேசஞ் சென்று விடலாம். பின் நின் பிதா வுந்தனைத் தேடி கலிங்கதேசம் நண்ணில் அதுசமய மன்னவருக்கு விசேஷ மரியாதைகள் செய்து, எனது சாகச்சக்கியத்தால் என் வயப்படுத்திக்கொண்டு நாமிருவரும் அன்னவரது ஆசீர்

வாதம் பெறலாம். ஆகையால் நாளை பகல் முழுவது மென் தனை யொருவருங் காணாதபடி காப்பாற்றவேண்டும். அதற்குத் தகுந்த தந்திரஞ் செய்வாய் ரமணி !

கம. காந்தா ! தாம் மொழிந்தது வுசிதமே. அதற்கிப்பொழுது உதயமாக வின்னம் 2-நாழிகை தானிருக்கிறது. தாங்கள் விடைகொடுக்கும் பக்ஷத்தில் அதற்கு வேண்டிய வேற்பாடு செய்கிறேன். தாமினியொரு தடவை யென்தனைக் காடாலிங்கனஞ் செய்துகொண்டு ஒராசை முத்தமளிப்பாய் ஆசைமன்னவா !

இருவருங் கட்டி முத்தமிடல்.

காந்தா ! தாமிவ்விடமே இருங்கள், யானெனது அமளி சென்று சகிமார்களை யழைத்து அதற்குத்தகுந்த வேற்பாடு செய்கிறேன். கண்ணாளா ! யானெப்படித் தம்மைவிட்டுப் பிரிந்துப்போவேன்?

கட். காதற்கிளியே ! துயருறேல். நீ சென்று வேண்டிய ஏற்பாடுகள் செய்து துரிதமே வருவாய். ஆனாலுந்தனைப் போக விடையளிக்கிறேனே, நானுசை யற்றவனென நினையாதே. காரியம் முடிவதற்காகவேண்டி வெறுப்பாய் நினக்கு விடை யளித்தேனேயன்றி வேறிலது. ஜல்தி யிவண் வருவாய் ஹம்சகெமனா !

கம. கண்ணாளா ! வாஸ்தவந்தான். அப்படியே சென்று வருகிறேன். சென்று வரட்டுமா காந்தா ! போய்வருகிறேன்.

கமலாக்ஷி கட்வாங்கனிடம் விடைபெற்றுச்சென்று தனது அமளியில் வீற்றிருந்து தன் சகிமார்களை யழைத்தல்.)

2-வது களம்.

(பாத்திரங்கள் கமலாக்ஷி, சகி இரத்திநாங்கி, பிரியவதனா.)

கம. ஆ பிரிய சகிகாள்! இரத்திநாங்கி! பிரியவதனா!

இர. தோழி பிரியவதனா! இதென்னடி ஆச்சரியமாயிருக்கிறது? ஒருநாளாவது கமலாக்ஷியை நாமெழுப்பினாலல்லது அமளியைவிட்டு எழுந்திராதவள் இன்னமுதயமாகாமலிருக்க நம்மை யேனழைக்கிறாள்?

பிரி. பாங்கி! வாஸ்தவமாக விது வாச்சரியமாகத்தானிருக்கிறது. ஏதோ விசேஷமிருக்கும் போலவே தோற்றுகிறது. ஆகையால் செல்வோம் வா.

(இருவரும் பிரவேசித்தல்)

இர. சகி கமலாக்ஷி! என்னவிசேஷம்? இந்தவேளையிலெங்களை யழைத்த காரணம் யாது?

கம. பிரிய சகி! இரத்திநாங்கி! எனதன்புள்ள பாங்கி பிரியவதனா! இருவருஞ் சமீபத்தில் வாருங்கள்? எந்தனைக் கட்டியணைத்துப் பிடியுங்கள்? ஏதோ என்னுடல் பதறுகிறது.

இர. சகி! என்ன விசேஷம்? அஞ்சாதே, அஞ்சாதே

கம. எனதன்புள்ள அன்னை நிகர்த்த ஆருயிற் தோழிகாள்! என்ன விந்தை? யான் நீங்கள் அலங்கரித்த இம்மஞ்சத்தின்மீது சயனித்துத் துயிலுங்கால், சகிகாள்! ஒருபுமான். அடடா! என்ன லட்சணம்! பஸ்மோத்தூளிதராயும், சர்ப்பாபரண வலங்கிருதராயும், இடையில் புலித்தோலுடுத்தி ஜடாமகுடதாரியாய் ஒரு கையிற் சூலம், ஒரு கையில் டமருகம், ஒரு கையில் மான், ஒருகையில் மழுவும், மந்தகாசத்துடனும் தன்னுடன் மகாலக்ஷணவதியாயும் பச்சை நிறத்தோடுங்கூடிய வொரு பெண்மணியுடனும் எனது மஞ்சத்தின

ருகில் வந்து எந்தனை யெழுப்பி, அப்பெண்மயிலாள் எனது கையில் கொஞ்சந்தாம்பூலத்துடன் மஞ்சளும் வைத்தளித் தது மன்றி, தனதழகிய கூந்தலி லணிந்திருந்த மலரில் கொஞ்சமுமளித்து, அவர்களிருவரும் அதிகப்பசியுடன்வந்திருப்பதாயும் நாளையதின மிருவேளையும் தங்களுக்கு அன்னமளிக்க வேண்டுமென்றும், அப்படி யன்னமளிப்பது நின்னையன்றி மற்றொருவரு மறியலாகாவெனவும் அவர்கள் புசிக்குங்காலையில் யாராவது பார்ப்பாராயின் அவர்களை நீராக்குவதன்றியு மென்றலையும் ஆயிரஞ் சுக்கலாய் வெடிக்கும்படி சபிக்கப்படுமென்றும் பணித்துச்செல்லும் அமையத்து,அப் பெரியவர் தான்வைத்திருந்த பிரம்பினாலோரடி யடிக்கவும், அவ்வடிபட்டு மிரண்டு புரண்டெழுந்து அச்சத்தினா லுங்களையழைத்தேன். சகிகாள்! என்னுடல் பதறுகின்றது. யான் கண்டசொற்பனம் நன்மையோ தீமையோவொன்று மறிகிலேன். தெரிவியுங்கள் சகிகாள்!

இர. சகி கமலாக்ஷி! வருத்தப்படாதே. சாக்ஷாத் கறைக்கண்டரான கங்காதரரும் அன்னபூரணியான பார்வதி தேவியாரும் வர, பார்வதிதேவி நினக்குச் சீக்கிரம் மணம் நடக்கும் வண்ணந்தாம்பூல புஷ்பாதிகளளித்து அன்னம்வினவி யிருக்கிறார்கள். ஆகையால் அவர்களெப்படியும் நாளையுதயத்தில் வருவார்கள்; அவர்களுக்குப் பூசைமுதலியதும் புரிந்து அன்னமிடவேண்டும்; நீ செய்த கவுரிபூஜையின் மகிமையானது அன்னவர்களை நேறிற்கண்டு அன்னமிடும் பாக்கியம் பெற்றாய்; ஆகையால், அன்னவர் பிரம்பாலடித்தது, அடித்தவுடன் சரீரத்தில் மிக்கநோவும் அதன்பின் வர வர அந்நோவெப்படி மாறிவிடுகின்றதோ அப்படி யுனக்கேதாவதொரு துன்பமேற்பட்டு அது நாளடைவில் சீக்கி

ரமே விலகிவிடும். அதற்குத்துன்புறுதே. நாளேயன்னவர்கள் புசிப்பதற்கு வேண்டியவைகளை யாயத்தஞ்செய்!

பிரி. சகி பிரம்பாலடித்தது நீ யௌவன ஸ்திரீயான தால், தாங்கள் தெரிவித்ததை சொற்பனந்தானே யென எங்கேமறந்து விடுகிருளோ வென நினைத்து நினக்கு அது ஞாபகமிருக்குமாறு வேத்திரத்தினு லறிவுவளர்த்தி யிருக்கிறூர். அஞ்சேல் சகி !

சம. சகிகாள்!நீங்கள் மொழிந்ததுஉண்மையே. ஏனெனில், அந்த அடியானது இன்னமென்னுடலே நடுங்கச்செய்கிறது. ஆயினும்,சரீரத்தில் வருத்தமட்டில்ஏற்படவில்லை பாருங்கள். ஆகையாலெந்தனுக்குத் துன்பம் வருவதாகச் செய்ததன்று. பிரியவதனு தெரிவித்தது போல் மறந்துபோகாதிருக்கப் பணித்த சின்னந்தான்; சகிகாள் ! நீங்களிச்சங்கதியை மற்றெருருவருடனும் புகலாது வேண்டியபடி ஷட்ரஸோபேதமான உணவைப் பாகஞ் செய்துஇவண் கொண்டு வந்துவைப்பதுமன்றி, சந்தனபாளிதகுங்கும கதம்பகஸ்தூராதி கலவைச் சாந்துகளும் நறுமலர் மாலைகளும், தாம்பூலாதிகளும், கொணர்ந்துவைத்து விடவேண்டும். நீங்கள் கூட நாளேமுழுவதும் இவணிருக்கலாகாது. சீக்கிரமே வேண்டியவைகளைச் சித்தஞ்செய்து இவண்கொணர்ந்துவைத்து விட்டுபின்நீங்கள்கிரகஞ்செல்லுங்கள். யான்ஸ்நானஞ்செய்து சுசீலேயாய் பகவானதுவரவை யெதிர்ப்பார்த்திருக்கிறேன்.

(சகிகள் நிட்கிரமித்தல்)

3-வது களம்.

(சகிகள் அன்னபானுதிகள் முதலிய சகலமும் கொணர்ந்து வைத்துச்செல்லுதல்.)

கம. காந்தா ! காலதாமதமாகின்றது. பாவியாகியயான் தம்மை இதுகாறும் பிரிந்திருந்ததுமன்றி, தம்மைப் பசியினு

னும் மெலிவுறச் செய்தனனே. இதோ இவண் வைத்திருக்கும் ஆகாராதிகளைப் புசித்து கலவைச் சாந்தணிந்து நறுமலர் மாலைபுனைந்து தாம்பூலாதிகளைத் தரித்துக்கொள்ளுங்கள் ரமணா!

கட். எனதன்பிற்குறிய காதலி! நீ நொந்துகொள்வதை நோக்க என்மனதிற்கதிக வருத்தமாயிருக்கிறது. கண்மணி! காரியத்தின் நிமித்தம் அகன்றிருந்தால் அதை ஒரு வருத்தமாகப் பாவிக்கலாகுமா? காதலி துயருறுகே.

(இருவரும் உண்டு கலந்து சந்தோஷப்படல்)

4-வது களம்.

(இரவில் போஜனஞ் செய்தானவுடன் எல்லோரும் நித்திரை செய்தபிறகு சம்பாஷித்தல்.)

கம. காந்தா! இப்பொழுது அஸ்தமித்து ஏறத்தாழ 12-நாழிகையிருக்கும் போல் தோற்றுகிறது. சேவகர் சேடியர் முதலியோரும் நன்றாக வயர்ந்து நித்திரை போகிறார்கள். இது சமயம் நாம் நினைத்தபடி சூத்திரப்பரியேறிச் செல்லத்தக்க வேளையாக விருக்கிறது; தமது சித்தம் யாதோ?

கட். காரிழையாளே! யான் அது விஷயத்தைப் பற்றியே யோஜித்துக் கொண்டிருந்தேன்; அதற்கேற்ப நீயும் புகன்றனை. சபாஷ் காதலி! யாம் செல்வோம்வா.

(இருவரும் சூத்திரப்பரியேறி ஆகாய கமனஞ் செய்தல்.)

கட். காதலி! இதோ தெரிகிற உத்தியான வனத்திலிறங்கி சற்று களைப்பாறிச் செல்வோமா?

கம. ரமணா! யானுமப்படியே நினைத்தேன். எனக்குப் பசி யதிகமாக விருக்கிறது. அதைத் தணித்துக் கொள்வோம்.

(இருவரும் அவ்விடமிறங்கி யுண்ணல்.)

கட். பிரியரமணி! இதோ நாமிருக்கும் உத்தியான வனம் எனதாருயிர் சகோதரியாய லீலாவதியின் விளையாட்டுக்காக வேற்படுத்தப் பட்டது. இவ்வனத்திற் கருகாமையிலேதான் எந்தனுடைய நகரமும் எந்தன் பிதாவு மிருக்கிருர். உத்தம ராஜபுத்திரியாகிய வுந்தனைக்கேவலமானவர்களைப் போலழைத்துப்போவது வுசிதமன்று; கவுரவமாகவுமிருக்கமாட்டாதாகையால், எனது பிரிவினல் மிகத்துயருற்றிருக்கும் எனது பிதாவுக்கெனது வரவைத்தெரிவித்து நினது சக்கியத்தையும் மொழிந்து இராஜ மரியாதையுடனே நின்னையழைத்துப்போகிறேன்; நீ இவணிரு? இதோவொரு நொடியில் வருகிறேன், விடையளிப்பாய் ரமணி!

கம. காந்தா! தாம் மொழிந்தபடி விடையளிக்கில், ராசமைப்பிரிந்திருப்பதால் யான் மிகுந்த துயரடைவதாயிருப்பினும், தாம்மொழிந்தவசனமெனக்குமிகுந்தமேன்மையையுண்டாக்கக் கூடியதாயிருப்பதால், தாங்கள்காலதாமதஞ்செய்யாமல் சீக்கிரமே இவண்வந்து எந்தனையாதரிப்பீர்களென்கிற நம்பிக்கையின்பேரில் தங்களபிப்பிராயத்துக் கின்றனன். கண்ணளா! நமஸ்கரிக்கின்றேன். சென்றுவாருங்கள்.

(வந்தனஞ்செய்தல்)

(கட்வாங்கன் கமலாக்ஷியிடம் விடைபெற்று சூத்திரப் பரியுடன் நகரஞ் செல்லல்).

5-வது களம்.

(கலிங்கதேசத்தரசனன சோமசேகரனும் மந்திரியான வித்தியுத்ஜிஹ்வனும் பிரவேசித்தல்)

சோம. அமைச்ச! எனது விதிவசத்தை என்னென்று மொழிவேன். அந்தோ! எனதாருயிர்க் கண்மணியான

கட்வாங்கன், பரமசண்டாளனான கம்மியன் கொணர்ந்த சூத்திரப்பரியேறி யாகாயகமனஞ் செய்தனன். அந்தோ! பாலகன் கீழேயிறங்கும் வழியறியாது விழித்தனனோ? பரிசெல்லும் வேகத்தினால் தத்தளித்தனனோ? அன்றேல் தவறிப்பூமியில் விழுந்து மடிந்தனனோ? அந்தோ! ஒன்றுந்தெரியவில்லையே; என்மனமோ தத்தளித்துத் தாமரையிலை நீர்போற்றயங்கும்வேளையி லிடிமேலிடி யிடித்ததுபோலும் "பட்டகாலிலேயேபடுங் கெட்டகுடியே கெடும்" என்னும் நீதிக்கிணங்க, எனதாருயிர்ப்புதல்வி லீலாவதி பாதகனான நமது பிதா நமது யௌவனத்தைக்கூட வாலோசியாதுவிருக்கின்றனனே என்னுந்துயரத்தால் தமது குமரனான வீரவர்த்மனை துணையாக வழைத்துக்கொண்டு இன்னவிடமென்று கூடத்தெரியாது சென்று விட்டதை நினைக்க என்மனம் பதறுகின்றது. பரமசண்டாளனான வெனது ஜீவன் போகேனெனத் தவிக்கின்றதே. அமைச்ச! வுலகத்திலென்னைப்போல் பாவிகளுமிருப்பார்களா? புத்திரன் புத்திரி யிருவரையுமிழந்து துயரடைவார்களா? அந்தோ எனக்கொன்றுந் தோற்றவில்லையே; இனி யென்னருமைக் கண்மணிகளான கட்வாங்கன், லீலாவதி யிருவரையுங்காண்பேனோ? காண்பதுஞ் சந்தேகமோ? இத்துயராலேயே எனது ஜீவனுக்கு முடிவு காலமோ? மந்திரி! இதற்கேதாவதொரு ஆறுதலடையும் வழியுளதோ இல்லையோ? நன்றாக யோசித்துச்சொல்லுங்கள்.

வித். அண்ணலே! தாம் இவ்வாறு துயரடைவதில் யாதொரு பிரயோஜனமிலது. ஏனெனில் (சுலோகம்

பிரம்ஹாயேந குலாலவந்நியமிதொ பிர்மமாண்ட பாண்டோதரே
விஷ்ணுர்யேந தசாவதாரகஹநெ க்ஷிப்தொமஹாஸங்கடெ
ருத்ரொ யேநகபாலபாணிபுடகெ பிக்ஷாடநம் ஸேவதெ
ஸூர்யொப்ராம்யதி நித்யமெவ ககநெ தஸ்மைநம: கர்மணே.

என்ற நியாயத்தின் வண்ணம், கர்மசேஷத்தால் மும்மூர்த்திகளும் துயரிலுழன்றனரெனின், கேவலம் மானிடராகிய நமக்குக் கேட்பானேன்? தோன்றலே! தமதாருயிர் இளவலான கட்வாங்கன் க்ஷத்திரியகுலத்திற் ஜனித்த மேன்மையாலும் மகா உத்தமதீரவீர சிகாமணியான தம்கெர்ப்பாம்புதியில் ஜனித்த வைபவத்தாலும், கம்பியன் காண்பித்த பரீக்ஷையைக் கூடவிருந்து நோக்கியவனுதாலும் இளமைப்பருவத் துடுக்கினு லொருவரது சம்மதத்தையு மெதிர்பாராது பரியேறி யாகாய கமனஞ்செய்தனன். ஆயினும், அன்னவனுக் கேதேனும் தீங்கு நேருமெனத் தாமெண்ண வேண்டுவதில்லை. ஏனெனில் (பாடல்)

கருப்பைக்குள் முட்டைக்குங் கல்லினுட்டேரைக்கும்
விருப்புற்ற முதலளிக்கும் மெய்யன்—உருப்பெற்றால்
ஊட்டிவளர்க்கானே ஓ மதிமருண்ட மன்னு! கேளாய்
வாட்ட முனக்கேன் மகிழ்.

என்னும் நீதிக்கிணங்க சகல சராசரங்களிலுள்ள பிபீலிகாதி பிர்ம்மபரியந்தமுள்ள சகலஜீவராசிகளையுங் கார்க்கும் ஜகந்நாதன் நமது குமரனைக் காப்பாற்றுவாரென்பதில் ஐயமிலது. தமது குமரன் சீக்கிரமே தாம் சந்தோஷமடையத் திரும்பி வருவானென்பது நிச்சயம். ஆனல், மற்றொரு துயரத்திற்கு மாபாவியாகிய யான் காரணபூதமாக விருப்பதாற்சொல்வதற்கு நாவெழவில்லை. ஆயினும் சமுகத்தில் தெரிவித்துக்கொள்வதி லெந்தனுக்கு யாதொருகுறையுமில்லை. ஆகையாலது விஷயத்தைப்பற்றி யடியேன் தெரிவிப்பதைச் செவியுற்று மன்னிக்கக் கோருகின்றனன். யாதெனில், தமது குமரியான லீலாவதி மகாலக்ஷணவதி, கற்புடையவள், சகலகலாவல்லவள். எனது குமரனே மகா சுந்தரவந்தனுயிருப்பதுடன் கல்விக்கேள்விகளில் மகாநிபுணன். அங்ஙனமிருக்

கத் தமது புத்திரியை வலுவிற்ரு னழைத்துப் போயிருப் பானென நினைப்பதற்கிடையில்லை. ஆயினும், தெய்வச்செய லெவ்வண்ணமோ? ஆகையால், தீனனுகிய என்மீதருள்சுர ந்து எவ்விதக் குற்றமிருப்பினும் மன்னிப்பீர்களாகில் அன் னவர்களிவண்வந்தவுடன் விசாரிக்கிலுண்மை வெளியாகும். ஆகையால் அரசரேறே! தாம் துயரப்படுவதில் யாதுபயன்? வருத்தப்படுவதால் சரீரத்திற் கொருவித வருத்தமிலது வேறிலது. மன்னவா! இனி விசனமடையாதிருக்கப் பிரார் த்திக்கின்றனன்.

சோம. என்ன திடீரென மங்களகரமான பேரிரைச்சல் உண்டாகிறது; அதன்காரணத்தை யறிந்துசொல்லும்?

வித். மகராஜ்! யாரோ மகானெருவர் நமது அரண்ம னையை நாடிவர, புரஜனங்கள் அவரைச் சூழ்ந்துகொண்டு ஆநந்தமாய் சப்திக்கிருர்கள். யான் சென்று அவரையிங்க ழைத்து வருகிறேன்.

சோம. (தனக்குள்) ஏதோ நமது புத்திரன் நாமத்தை யுச்சரிக்கிருர்களே. அவன் திரும்பிவந்தாலாகாதா; சற்று பொருத்திருக்கிறேன்.

கட். பிதா நமஸ்கரிக்கின்றேன். மந்திரிவர்யா! பணி கின்றேன்.

(வந்தித்தல்)

சோம. குழந்தாய்! நீயார்? என்னருமைத் திருமகனைப் போலிருக்கிருயே; வெகுநாளானபடியால் அடையாளந்தெரி யவில்லை. சீக்கிறமாகத் தெரியப்படுத்து வத்ஸா!

கட். தங்களை துயரக்கடலில் தள்ளின பாதகனுகிய தங் கள் மகனிதோ எதிர்நிற்கிறேன். சந்தேகம் வேண்டாம்.

சோம. வத்ஸா! கண்மணி, என்செல்வமே, என்னருமைக்குலவிளக்கே, தீனனுகிய எந்தனைமறந்து சென்றுயோ; வழியில் எப்பாடு பட்டாயோ? என்னநினைந்தாயோ? அப்பா வத்ஸா!உன்னை சுகசரீரியாய்த்திரும்ப வரும்படி செய்தகவுளையான் கோடி வந்தனஞ்செய்கிறேன். அப்பனே! என்ன சங்கதி? நீ புரவிமீதேறினவுடன் எப்பாடுபட்டாயோ? அதையெல்லாம் விபரமாகவெனக்குத் தெரிவிப்பாய் கண்மணி!

கட். பிதா!தாம் துயருறவேண்டுவதில்லை. யான்சூத்திரப் பரியேறி யாகாயகமனஞ் செய்கையில் புரவி வாயுவேகத்துக்குமேற்பட்டுச் சென்றதால் அந்தோ! யான் மிகநொந்துஇனிப்பிழைப்பதில்லை யெனமனம்வேசாறித் தத்தளித்துத்தயங்கி மயங்கி கீழிறங்கும் சூத்திரமேதாவதுளதோ வெனப்பரியைத் தடவிப்பார்க்க அக்குதிரையின் தலையுச்சியிலோர் சூத்திரந்தோன்ற, அதை முறுக்கப் பரி முன்னைவிட மனோவேகத்திலு மதிவேகமாய்ச்செல்ல வாரம்பிக்க, நான் மிகப்பயந்து வருத்தமுற்று குப்புற சயனித்துக்கொள்ள, அதனிடது செவியோரமாகத்தோன்றிய மற்றெரு சூத்திரத்தைத்திருக குதிரைவேகமடங்கிக் கிழிறங்க வாரம்பித்தது. உடனே யான் கொஞ்சந் திடச்சித்தமாக விருக்கப் பரி மகதநாட்டரசன் மகளாகிய கமலாக்ஷியின் உப்பரிகையி லிறங்கியது. உடனே யான் கிழிறங்கிப் பார்க்கையில் இரவு நாழிகை பதினைந்தாயிற்று. மிகுந்தவிருளாக விருந்தமையாலும் பசிமிகக் கொடுமையாக விருந்தமையாலும் ஏதுவரினு மனுபவிப்போமெனக் கடவுளைத்துதித்துப் பரியை யோர் பக்கத்திலொளித்துவைத்து அவ்வுப்பரிகையில் செல்லுமமயத்து, அங்கோர்புறத்துள்ள மாளிகை வாயிலில் அநேகவீரர்களுருவினகத்தியுடன் நித்திரைபோவதைக் கண்ணுற்று மெதுவாக அம்மாளிகைக்குட்செல்ல, அங்ஙனமோரமளியில் ஒரு

மாதுநல்லாள் துயில, அவளது மஞ்சத்துக் கருகிலநேகதாதி யருஞ் சேடியருந் துயன்றனர். அதைப்பார்த்த யான் திடச்சித்த முற்றவனுய் மஞ்சத்தில் சயனித்திருந்தமாதை என்னுடைவாளாற்றட்ட அன்னவள் துயிலெழுந்து எந்தனைக் கண்ணுற்று ஜாடையாக மற்றொரு புறயழைத்துச் சென்று நீயாரென வினவ, யான் மிகப்பசியாயிருப்பதா லதைத்தீர்ப்பின், பின் என்வரலாற்றை மொழிகிறேனெனப்பகர, அவ்விதமே அவணிருந்த சில பண்டபலாதி சிற்றுண்டிகளை யளிக்க யானுண்டுகளையாறி,யான்நீயாரெனவினவ, அன்னவள்தனது பூர்வோத்திரம் மொழிய, பின்னெனது வரலாற்றை மொழிந்து, அன்னவளது வனப்பினுல் காதலுற்று அன்னவளைச் சேர வினவ,அவளுஞ் சம்மதிக்க விருவருங்காந்தருவமணமாகக்கூடி சுகிக்க, அன்னவள் தனது தகப்பனுக்கும் தாதிக்குமிவ்விஷயந் தெரியில் தனக்குமெந்தனுக்கு மாபத்து விளையுமென்று மொழிந்து எந்தனை அவ்வரண்மனையிலோர்பாலொளித்து வைத்துக் காலையில் தன் தோழிகளுக்கு மாறுபாடான மொழிகள் பகர்ந்து, அன்னபாருதிகளைத் தருவித்துப் பொழுதுபோக்கி. அஸ்தமித்து 15-நாழிகையானதின் பின்னிருவரும் ஒருவருமறியாது சூத்திரப் பரியேறி யாகாயகமனஞ் செய்து நமது நாட்டிற்குச் சமீபத்துள்ள வுத்தியானவனத்திலுள்ள மண்டபத்தில் வைத்து, இராஜ மரியாதையுடன் நகரத்திற்கழைத்துப் போவதாகச்சாற்றி விடைபெற்றுத்தமது திவ்விய சரண கமலங்களில் பணிந்தனன். பிதா! பாவியாகிய யான் தமது ஆக்ஞை பெருது சூத்திரப்பரியேறிச் சென்ற குற்றத்தையும், தமது சம்மதமன்னியில் கமலாக்ஷி யென்னும் மடநல்லாளை காந்தருவமணஞ்செய்த தப்பிதத்தையும், அன்னவளை யழைத்துவந்து உத்தியானவனத்திருத்தி யிராஜமரியாதையுடனழைத்து வருவதாய்ப்

பணித்தேனென்று சமுகத்தில் லஜ்ஜையின்றி மொழிந்தகுற்றத்தையு மன்னித்து, அன்னவளை யிராஜமரியாதையுடனழைத்துவர உத்திரவளிக்கப் பிரார்த்திக்கின்றனன்.

சோம. வத்ஸா! நன்று மொழிந்தனை. கண்மணி! நினது வியோகத்தால் துக்கசாகரத்தி லழுந்தியிருந்த வெந்தனை நீ வந்து மங்கள சங்கதி மொழிய யான் கோபிப்பேனோ? கவலைப்படேல் கண்மணி! அமைச்ச! நமது மருமகள் உத்தியானவனத்தில் வந்திருப்பதாக வத்ஸன் மொழிந்ததைக்கேட்டீர்களன்றோ? ஆகையால், தாங்கள் நமது நால்வகைப்படையுடனும் மங்களவஸ்துக்களுடனும் போய் ஜல்தியில் இவணழைத்து வாருங்கள்?

கட். பிதா! யானும் நமது அமைச்சருடன் சென்று தமது ஆக்ஞைப்படி எனதாருயிர்க் காதலியை யழைத்துவர விடையளிக்கப் பிராத்திக்கின்றனன்.

சோம. வத்ஸா! நின் மனதின்படியே சென்று வா.

(மந்திரியும் கட்வாங்கனும் நிட்கிரமித்தல்)

சோம. சேவகா! ஜல்தியாகச் சென்று சிறைச்சாலையிலிருக்கும் "தாருவர்மா" என்னும் ஈழதேசத்துக் கம்மியனை யதிதுரிதமாக இவணழைத்துவா?

சேவ. பிரபோ! இதோ தாருவர்மாவை யழைத்து வந்தேன்.

(தாருவர்மாபிரவேசித்தல், அரசனை வந்தித்தல்)

சோம. ஏதாருவர்மா! நீ வெகு அபாயகரமான வொரு சூத்திரப்பரியைக் கொணர்ந்து இவண்பரீக்ஷை காண்பிக்க, அதன் காரணத்தினு லெனது புத்திரனுக்கு உயிரிழக்கத்தக்க வாபத்துநேர, தெய்வ கடாக்ஷத்தா லுயிர்பிழைத்து வந்தனன். ஆயினுமெனது குமரன் சென்றவிடத்து ஒரு அழ

கிப இராஜ குமரியை மணஞ்செய்து அழைத்து வந்து உத்தியான வனத்திருத்தி, அன்னவளை யிராஜ மரியாதையுடனழைக்க வெனது வத்ஸன் சென்றிருப்பதால், அவன் வருவதற்குள் நீ யுனது சூத்திரப்பரியுடன் அதிதுரிதமாக விந்நகர் நீங்கிச் செல்லவேண்டும். இதோ உனது புரவியை பெற்றுக்கொள். நினக்கு வேண்டியபொருள் கொடுக்கும்படி பணித்திருக்கின்றனன். பெற்றுச்செல் ?

தாருவர்மா. ஆக்ஞா மகராஜ் !

(தாருவர்மா குதிரையுடன் நகர்ப்புறஞ் செல்லுதல்)

தாரு. (தனக்குள்) இம்மன்னவனிடம் மேன்மையான சூத்திரமமைந்த புரவியைக் கொணர்ந்து காண்பித்ததற்குப்பரமசண்டாள னெந்தனைச் சிறைவைத்தனனன்றோ? நன்று இவ்வரசகுமரன் நமது குதிரையின் வைபவத்தாலன்றோ ஒரு பெண்மணியை யடைந்து அன்னவளை யுத்தியானவனத்திருத்தி யிராஜமரியாதையுட னழைக்கச்சென்றிருக்கிறான். அவன் அவளை யழைக்க வருவதற்குள் யாமன்னவள் பக்கல் சென்று அரசகுமர னழைத்துவரச் சொன்னதாகத் தெரிவித்து, இச்சூத்திரப் பரியையுங் காண்பித்தன்னவளை யப்பரிமீதேற்றி நமது நாட்டிற்கழைத்துப் போய் நாம் விவாகஞ்செய்து கொள்ளலாம். இது தான் சரி. இம்மன்னவன் நமக்குச்செய்த வவமானத்திற்கு நாமிம்மன்னவன் மகனைத் திண்டாடவிடுவது தான் சரி. ஆகையால் யான் அவ்வரசகுமரி யிருக்கு முத்தியானவனஞ் செல்கிறேன்.

### 6-வது களம்

இடம்-உத்தியானவனத்துள்ளமண்டபம்பாத்திரம்-கமலாக்ஷி

கம. ஆ! நமது நாதர் துரிதமாக இவண் வருவதாகமொழிந்து சென்றவரின்னம் வரக்காண்கிலேன். அதை யாலோசி

க்குங்கால் நம்மையழைத்துச்செல்லச் சகலமரியாதைகளுஞ் சித்தஞ்செய்வதுபோற் காணுகிறது. அன்னவரைப்பிரிந்திருக்கு மொருநிமிஷ மொருயுகம் போலிருக்கிறதே; காந்தா! துரிதமாக வந்து எந்தனை யாதரிக்கலாகாவா ?

(தாருவர்மன் பிரவேசித்தல்)

தாரு. அன்னையே! சேவகன் அடிபணிகின்றனன்.

கம. மசம்ளங் கேவகா! என்ன விசேஷம் ?

தாரு. அன்னையே! தமது நாயகரு மெங்கெஜமானருமாகிய கட்வாங்கமகாராஜர் தங்களை யிங்கிட்டுவந்தபோது இச்சூத்திரப்புரவி மீதழைத்துவந்து இவணிருத்தி யிராஜமரியாதையுடனழைத்துப்போவதாகத்தம்மிடம்மொழிந்ததாகவும் அன்னவர் அவரது பிதாவாகிய பெரியவரசரிடம் மொழிய, அவர் வனத்திலிருந்தழைக்கலாகாதென புகன்றதால், இளவரசர் தம்மை இப்பரிமீதேற்றி நகர்ப்புறத்துள்ள வரண்மனையிலமர்த்திவரும்படி பணித்தனர். அரசகுமரர் சகலசைனியங்களையுந் தயார் செய்ய உத்திரவு செய்து அவர் மங்களவஸ்துக்களைத்தயார்செய்து கொண்டிருக்கிறுர். ஆகையால், தங்கள்ஆக்ஞாபனத்தின்வண்ணம்நடக்கச்சித்தமாயிருக்கிறேன்

கம. சேவகா! மெத்தசந்தோஷம். என்கண்ணுளர்மொழிந்தவார்த்தைக்கு மறுவார்த்தை யுண்டோ? இதோ இப்புரவிமீதேறிக்கொள்கிறேன். அவரரண்மனைக்குப் புரவியைச்செலுத்துவாய்.

தாரு. அம்மணி! அப்படியே செலுத்துகிறேன்.

(தாருவர்மன் சூத்திரப்பரிமீது கமலாக்ஷி யேறியவுடன் தானுமேறி விசைக்கருவியை முடுக்க, பரி கெகனமார்க்கஞ் செல்லல்.)

கம. சேவகா! ஏன் புரவியை அதிவேகமாய்ச் செலுத்துகிறுய் ? நாம் போகக்கூடிய விடஞ்சமீபத்திற்றனே இரு

க்கும். ஆ! இதுதான் நகரம்போலிருக்கிறதே ; இதைத்தாண்டிப்புரவி செல்லுகிறதே ; புரவியை நிறுத்து ? அதோ! என் நாதர் முதலியவர்கள் இராஜவீதியில் மகாவைபவத்துடன் வருகின்றூர்கள். நிறுத்து நிறுத்து புரவியை?

தாரு. ஏ பெண்கள் சிகாமணியே! யான் சேவகனன்று; இப்பரியைச் செய்ததீரன். இப்பரியினுதவியாற்றான் நீங்கள் இவண் வந்தது. ஆகையால், நீ எந்தனுக்குரியவளேயலது அரசனுக்குரியவளன்று. ஆகையால், யானுந்தனையெனது நாட்டிற்கழைத்துச் செலகின்றேன். இவண் நிறுத்தகாரியமிலது.

(புரவி ககனமார்க்கஞ் செல்வதைக் கண்ணுற்ற கட்வாங்கன் பரதவித்தல்).

கட். ஆ! ஈதென்ன நமக்கு நேர்ந்தஅவகேடு ? பிரிய சகி ! யானுன்னை யிராஜமரியாதையுட னழைத்துவருவதாகத்தெரிவித்து இவண்வந்தகாலையில், யாரோ பரமசண்டாளன் நின்னைமோசஞ்செய்தான்போல் தோற்றுகிறது. அப்பரமசண்டாளனிப் பூமிமீது செல்வனேல், அவனுயிரையொரேஅம்பினல் விண்ணுலகேற்றுவேன். இவனோ ககனமார்க்கத்திற் செல்கின்றனன். இவன் தேவனோ? அன்றேல் அசுரனோ? அறிகிலேன். அந்தோ ! பேதையே நின்மனமென்னபாடு படுகின்றதோ? என்ன நினைந்தனையோ? ஏங்கிப்பதறிச் சதறுகிறுயோ ? யெங்குகொண்டு செல்வானோ? பிராணப்பிரியே! உன்னைவிடுவிக்க வழிதெறியவில்லையே.

(மூர்ச்சித்தல்)

சோம. ஆ! ஆ! கண்மணி வத்ஸா! உனது துயரத்திற்கு யானன்றோ காரணமாயினேன். அமைச்ச ! வத்ஸன் மூர்ச்சையைத் தெளிவிக்க ஏற்பாடு செய்யுங்கள் ?

அமை. பிரபோ! அப்படியே செய்கிறேன்.

(மூர்ச்சை தெளிந்தெழுதல்).

கட். ஆரிழையாளே! யானுந்தனைக்காந்தர்வமாகக் கூடி நினது சகிமார்களும், சேவகரும் பிதாவும் அறியாது அழைத்துவந்தனனே; அந்தோ! அப்பாவ மெந்தனுக்கு லபித்ததோ? பிரிய ரமணி! எவ்வாறுபிர்தரிப்பேன்? கட்டழகியாளே! திட்டமில்லாது உந்தனை விட்டுப்பிரிந்து கெட்டேனே! ஆ! ஆசைக்கிசைந்த கிளியே! உந்தனது அருமைத் திருவாக்கைக்கேட்கும் நாளென்றோ? அந்தோ! பிராணசகி! பாவியாகிக் கெட்டலையும் மனத்தனாகினேன். ஆ! ஆ! ஆ! பிரிய ரமணி.

சோம. வத்ஸா! நீ துயரடைவதில் யாது பயனுளது? நினது துயருக்குக் காரணமாயிருந்த எந்தனை யன்றோ நிந்திக்கவேண்டும். யான் நீ மந்திரியுடன் சென்ற அக்கணமே சிறைவைத்திருந்த கம்பியனை யழைத்து நீ திரும்பி வந்த விருத்தாந்தத்தை மொழிந்து பரிசளித்துப் புரவியையுங் கொடுத்தனுப்ப, அம்மகாபாவி நினக்கித்தனை துயரம் ஜனிக்கச்செய்தனன். அப்பனே! நீ மனந்தேறுவையாகில் அன்னவளைவிட அதிவனப்புள்ளவோர் அரசகுமரியை விவாகஞ் செய்வித்து நின் மனதைச் சந்தோஷப்படுத்துகிறேன்.

கட். ஐயோ ஜகதீசா! பரமசண்டாளனான கம்பியனிடமோ எந்தன் கட்டழகியைக் காண்பித்துக்கொடுத்தீர்; லோகநாதா! இது ஞாயமோ? இது தகுமோ? இது தர்மந்தானோ? யான் படுந்துயரம் நீ பார்க்கவொண்ணாதோ? எந்தனழகியாளை என்வசமாக்குவதென்றோ?

பிதா! பரமசண்டாளனான பாதகனை யதற்குள் என் சிறைவிடுத்தீர்கள்? சிறை விடுத்தாலுஞ் சூத்திரப்புரவியை

யேணவனிடமளித்திர்கள்? அந்தோ ! தாங்கள் புரவியையும ளித்துப் பூர்வோத்திரமும் மொழிந்ததாலன்றே, பாதகன் எனதன்புள்ள நாயகியைக் கவர்ந்துசென்றான். ஐயோ! பிதா! தங்களை நோவதில்யாதொரு பயனுமிலது; என் விதி யைநோகவேண்டுவதலது வேறிலது. அத்தனே! யானினி யரைக்ஷணங்கூட எந்தனருயிர்க் கண்ணாட்டியைக் காண மல் என்னமாய்க் காலங்கழிப்பேன்? தகுந்த நாயகியுடனிரு க்குமாடவர்தரிக்கு மிவ்வாபரணவலங்கிருதங்கள்காரிகையா ளைப்பிரிந்த கசடனுக்கிருப்பதிற் பிரயோஜன மில்லை. ஆகை யால்,யான் காஷாயம்பூண்டு கடல்சூழ்ந்த வுலகெலாஞ் சுற்றி யென்கட்டழகியாளைக் கண்டழைத்துக்கொண்டு இவண் வருவேனலது,யான் இவணிருக்கச் சம்மதித்திலேன். பிதா! எந்தனுக்கு மனமுவந்து விடையளிக்கப் பிரார்த்திக்கின்ற னன்.

சோம. கண்மணி! நன்று மொழிந்தனை? பரமசண்டாள னாகிய யான் சூத்திரப்பரியின் விநோதத்தைப் பார்க்கவெத்த னிக்க, நீ துரிதமாக வப்பரியேறி யாகாயகமனஞ் செல்ல, நானயர்ந்து இனியுந்தனை யுயிருடன் பார்க்கும் வகைதெரி யாமல் வருத்தமுற்றிருக்கு மமயத்து, நினது செல்வசகோத ரியான லீலாவதி எந்தனுடனுரையாது ஒருவருமறியாமலெ ங்ஙனோ சென்றனளெனத் தாதியர் மொழியக்கேட்டு, இடி மேலிடி யிடித்ததென துயரடைந்து, வாழ்நாள் கழிக்கும் நடைப்பிணம்போல் திரிந்திருக்கும்போது, தெய்வகடாக்ஷத் தால் வந்துசேர்ந்த எந்தன் செல்வசிகாமணியே! இது சம யம்“யானிங்கிருக்கும் மனமிலேன், காஷாயந்தரித்துக்காசினி யெலாந்திரிந்து என் கட்டழகியைத்தேடி யழைத்துவருவே னென” மொழிந்தால் என்மனஞ் சகிக்குமோ, உயிர்தரிக்கு மோ? கண்மணி!

கட். பிதா! மற்றதெல்லா மிருக்கட்டும்; எனது விசுவாசமுள்ள சகோதரியெங்குற்றாள்? அவளங்ஙனஞ் செல்லக்காரணம் யாது? தாங்களன்னவளைத் தேடிப்பார்க்கும் வண்ணந்தூதர்களையனுப்பவில்லையா? எல்லாவிபரங்களையுஞ் சவிஸ்தாரமாகத் தெரிவிக்கவேண்டுகின்றனன்.

சோம. வத்ஸா! நீபுரவியேறிச்சென்ற வன்றிரவில் அவள்யாதொருகாரணமுமின்றித் தனதின்னுயிர்த்தாதிமார்களிடமும் மொழியாது மந்திரிகுமாரனும் நினது பிரியநண்பனுமான வீரவர்மனைச்சகாயமாகக்கொண்டு இருவருமின்னவிடஞ்சென்றார்களென்றறியாவண்ணம் போய்விட்டார்களென்றுதயத்தில் தாதிகள் வந்து மொழிந்ததின் மேலுணர்ந்தநான் உடனே தக்க தூதர்களை நான்கு திக்குந்தேடவனுப்பிவித்து, அவர்கள் வரவுக்கெதிர்நோக்கித் துயருடன் நாள்கழித்து வருகிறேன்; சென்ற தூதர்களின்னமும் வரக்காணிலேன்; ஏங்குகின்றேன் என் குழந்தையை நினைத்து!

கட். பிதா! நன்று, இது விஷயத்தில் தாம் நோவதில் யாது பயனுளது? என் தலைவிதியை நோகவேண்டும். அண்ணலே! நன்று, இனி யான் இங்ஙன மரைக்ஷணந் தரியேன்; இப்படியே சென்று எனதன்புள்ள சகோதரியையும், என் கண்மணி காதலியையுந்தேடி யழைத்துக்கொண்டுதான் இவண் வருவேன். அதுவரை தாம் துக்கப்படா திருங்கள்; வருத்தம் வேண்டாம், சென்று வருகிறேன்.

(கட்வாங்கன் காஷாயந் தரித்து, உத்தியான வனத்துள்ள மண்டபஞ் செல்லல். அரசனும் மந்திரியும் துயருடன் அந்தப்புர மடைதல்)

7-வது களம்.

இடம்—மந்திரி குமரியி னரண்மனை

பாத்திரங்கள். ஜலஜாக்ஷி, தாஸி குசுமவதி.

ஜல. சகி குசுமவதி! இன்று என்ன விசேஷம்?

குசு. தோழி! இன்று காலை நமதரசகுமார ரிவண்வந்து தனது நாயகியை யழைத்துவரச் சகல மரியாதையுடன் செல்லா நிற்ப, அது காலை முன் சூத்திரப்புரவி கொணர்ந்த கம்மியனப்பெண்மகளைத் தனது சூத்திரக் குதிரைமீதேற்றி யாகாயவீதியில் கொண்டு செல்வதை யரசகுமரர் கண்டு வருத்தமடைய, அதைக்கண்டு அவர் பிதா தக்க சமாதானம் மொழிந்துங் கேளாத தன் குமாரனுடன், லீலாவதியும் தமது சகோதரரான வீரவர்மனுஞ் சென்ற சங்கதியை மொழிந்தவுடன், அரசகுமரன் மிக்கத்துயருற்று இனி யெனது சகோதரியைக் காணுது அரைக்ஷண மிரேனெனப் பிரதிக்ஞை செய்து, காஷாயம் பூண்டு உத்தியான வனத்தை நோக்கிச் சென்றார். இதுதான் விசேஷம்.

ஜல. சகி! ஐயோ மோசம் வந்ததே, என் செய்வேன்? அரசகுமார ரெப்படியுந்தனது சகோதரியைக் கண்ணுறுவாரென்பதில் ஐயமிலது. அப்பொழுது எனது சகோதரரைத் தன் வாளிக்கிறையிடுவார். அல்லாமலும், அவர் என்று புருவைக்கேட்க இவண் வந்தனரோ அன்றே என் மனதைக்கவர்ந்து சென்றவப்புருஷாங்கனை யானிது சமயஞ்சந்தித்துஅவர் மனேவியாகூல மகற்றிச் சேராவிடில், அவருத்தேசித்த நாயகியைக்கண்ட பிறகெந்தனைக் கண்ணெடுத்தும் பாராரென்பது திண்ணமன்றோ? ஆகையால்,சகி! இதுசமயம் நான் அவர்பால் நண்ணிச்சேர்ந்தால் என் சகோதரரது பிராணன் காக்கப்படுவதன்றி யென்விடுப்பமும் நிறைவேறும். ஆனதால், தோழி! நீ சீக்கிறஞ்சென்று ஆடவர்களணியும் காஷாய வுடையொன்று ஜல்தியில் கொணர்ந்தளிக்க வேண்டுகின்றனன்.

துசும· சகி! நீ யிவ்விதஞ் சென்று விடுவாயானால் நான் பிறகென்செய்வேன்? யாருடன் உல்லாசமாய்ச் சந்தோஷிப்பேன்? அந்தோ! பிரியரமணி! எப்பொழுது உந்தனைக் காணுவது.

ஜல. தோழி! நீ யாதொன்றுக்குங் கவலைப்படாதே? என்னுதருடன் துரிதமே இவண்வருவேன். ஜல்தி சென்று யான் வினவிய பொருள்களைக் கொண்டு வா?

துசும, சகி! இதோ காஷாயங் கொண்டுவந்தேன்.

ஜல. (தனக்குள்)சன்னியாசி வேஷந்தரித்தேன், உத்தியானவனஞ் செல்கிறேன். அதோ! பூஞ்சோலைக்கு நடுவிலமைக்கப்பட்டிருக்கிற சிங்காரமண்டபத்தில் ஒளிந்துக்கொண்டு அரசகுமரன் வரவையெதிர்பார்க்கிறேன்.

(ஒளிந்துக்கொள்ளல்)

(கட்வாங்கன் காஷாயவுடையுடன் அங்கு பிரவேசித்தல்)

கட். (தனக்குள்) ஆ பிரியகாந்தே கமலாக்ஷி! மகாபாவி யானுந்தனை யுனது வுற்றார் பெற்றாரொருவரு மறியாது மகாசுத்தவீரன் போலழைத்து வந்து இப்பாழும் மண்டபத்திலிட்டு நகரத்துக்குள் சென்றேனே; காதலி! அப்பொழுது பரமசண்டாளனாகிய தாருவர்மன் ரூத்திரப்புரவியுடனிவண் வந்து நினக்கேது புகன்றனனோ? நின்மனமென்ன வெண்ணத்தா லப்புரவிமீதேறச் சம்மதித்ததோ? புரவி யாகாயத்தை யெட்டியவுடன் நின்மனதிலென்ன நினைந்தனையோ? எப்பாடு பட்டனையோ, எவ்விதங் கதறிப்பதறினையோ? அந்தோ பேதையே! உனக்கிதுகாறும் ஜீவனிருக்கிறதோவிலதோ? எங்கு அம்மகாபாவியால் கொண்டு போகப்பட்டுத் தியங்குகின்றனையோ? எவ்வித மேங்குகின்றனையோ? ஏ குரங்க நேத்திரி! என்மனம் பதரி உடலைவிட்டுயிர் பிரிகின்ற காலத்தடையுக்

துயரடைகின்றதே; கண்ணாட்டி! ஆ என் பெருமாட்டி!சீமாட்டியாகிய நீயிது சமயமிவண்வந்து எந்தனை யாதரிக்கலாகாவா? நான் என் செய்வேன்? ஆ ரமணி!

(மூர்ச்சித்துப் பின்னெழுதல்)

ஆ ஜகதீசா! அவ்விந்துமுகத் தையலையானெப்பொழுது காண்பனோ? காணப்போகிறதே யில்லையோ? இப்பிறப்பிலில்லையாயினும், இனி யெப்பிறப்பில் வாய்க்கினும், அப்பொழுது இவளையே மனைவியாகக்கொண்டு வாழக்கருணை செய்வீர்: என் கழுத்திற் றனது கரங்களைப்போட்டுக் கட்டியணைத்துச்சுகித்து, எனக்குப்பலவிதப் பணிவிடைகளையுஞ் செய்தகரத்தை யினி நான் காண்பனோ? காணுவதுஞ் சந்தேகமே; கண்மணி! இன்றோடு நம் சேர்க்கை யொழிந்ததோ? திரும்ப வுண்டாகுமோ, உண்டாகாதோ? நீ யென்னிடத்து வைத்த வன்பிற்குக்கன் மனமுள்ள கொடுத்துவையாத்துரோகி நான் அனுபவிக்கமாட்டாது உந்தனை யதிகத்துன்பத்திற் காளாக்கினேன். அந்தோ சுந்தராங்கி! உந்தனை வந்தடைந்து உனதமிழ்தத்தினுமினிய வசனத்தைக் கேட்கிறேன். இல்லையேல், நாசமடைகிறேன். பாடுதல்

வனத்திடத்துச் சஞ்சரிக்கும் வானவர்கா ளென்றன்
மனத்திடத்துச் சஞ்சரித்த மாதரசைக் காணீரோ?
போமா றென்றின்றிப் புலம்பித்தவிக்கிறேன்
மாறுண்டேலதை யெனக்குக் காட்டீரோ?

(மூர்ச்சித்தல்.)

ஜல. (தனக்குள்) ஆ நமது கண்ணாளர் படுந்துயர் சகிக்கலாற்றுதது; இது சமய மூர்ச்சையாகினர்; நாம் சென்று அன்னவர் மூர்ச்சை தெளிவித்து மனதைத்தேற்றுவோம். அவரிடம்போ யுபசரிப்பதற்கு இதுதான் தக்கசமயம். (இதோபோகிறேன்)

(ஜலஜாக்ஷி சென்றுகட்வாங்கனைத் தன்மடிமீதிலிருத்தி மூர்ச்சை தெளிவிக்க அவன் தெளிந்து எழுந்து)

கட். ஆ பிராணப்பிரியே! நீ யிதுவரை யெங்குசென்றிருந்தாய்? நான் பதறிக்கதறியது நின் செவிக்கேறகவில்லையோ? அந்தோ பெண்மணியே! யானிராஜவீதி வருகும்போது சூத்திரப்பரிமீது தாருவர்மாவென்னுங்கம்மியன் நின்னைத்தூக்கிச் செல்வதைக் கண்ணுற்றுப் பதைத்தேனே; அவனிடமிருந்து எவ்வித மீண்டாய்? ஆயிழையாளே! என்னகமகிழ நிகழ்ந்தவற்றை மொழிவாய் பெண்ணே! என் மனதிசைந்த கண்ணே!

ஜல. காந்தா! தமக்கேற்பட்டிருக்கும் மதிமயக்கம் நீங்குமாறு மதிதனைச் சடையிற்றறித்த மகாதேவனை யெப்பொழுதும் மனதிடை வணங்காநிற்கும் மங்கை ஜலஜாக்ஷியன்றோ யான்? ரமணா! கமலாக்ஷியைப் பிரிந்து கதறுந்தமது மனதைத்தேறுதல் செய்யும் வண்ணமும், அன்று புருவைப் பெறவெனது அரண்மனைக்குத்தாம் விஜயஞ்செய்தவன்று என் மனதை யென்னை யறியாது கவர்ந்துவந்து மிதுவரை யெய்தனைத் தவிக்கவிட்டு இப்படிச் செல்வது தர்மமா? எந்தனை நிகர்த்த ஒரு பேடைமயிலாளைப் பிரிந்து தாம் தற்காலமடைந்திருக்குந் துன்பத்தைவிட யானெவ்வளவு துன்பமடைந்திருக்க வேண்டுமென்பதைத் தாங்களே அகன்ற தமது சித்தத்திலாழ்ந்து யோசனை செய்யுமாறு வற்புறுத்தவும் வந்தனன். பிராணநாதா! இனித்தமது விபோகத்தைச் சகிக்கேன்: எந்தனை மறுப்பில் நானுடனே தமது சரணாரவிந்தத்தடியிலேயே பிராணனைத்துறப்பேன். சுந்தரா! மங்கையர் மனதைக் கவர்ந்திடும் தந்திரா!

(கட்வாங்கன் பிரமித்துப் பின்றெளிந்து மொழிதல்.)

கட். ஆருயிர் நிகர்த்த ஜலஜாக்ஷி! எந்தன்மீது நினக்கு ஞாபக மிருந்ததா? அந்தோ! மதி நிகர்வதனி! நீ மொழிந்ததெல்லா முண்மையே; யானிதுகாறுங் கமலாக்ஷியின் வியோகத்தா லெத்துயரடைந்திருக்கின்றேனோ அத்துயர் நீயு மடைந்திருப்பாயென்பதில் ஐயமிலது; ஆயினும், உந்தனை யானத்துயருக் குட்படுத்திய பாவமோ இப்படி யெந்தனைத் துயருக் குள்ளாக்கியது. மடநல்லாளே! மங்கை நின்னுழுவாய்ந்த அக்கமலாக்ஷி யெந்தனது ஆபத்துக்காலத்திலெந்தனை முன்பின்னறியாதவளாயினும், அச்சுந்தராங்கி பாதியிரவிலெந்தனைக் கண்டதும் முன் பழகியவள்போலெந்தனை யாதரித்து என் களைப்பை யகற்றி, பென்மன விருப்பத்தின்படி யென்தாபத்தைத் தீர்த்துத் தன்னுற்றார் பெற்றாரொருவருமறியாது எந்தனைப் பின்றொடர்ந்து வந்த சீமாட்டியை யிப்பாழும் மண்டபத்திருத்தி நகருக்குள்வந்து திரும்புவதற்குமுன், பரமசண்டாளனான தாருவர்மாவெனும் கம்மியன்கைப்பற்றிச் சென்றாள். அக்காரிகையா ளெத்துயர மடைந்தனளோ? எவ்வாறு கதறிப்பதறினளோ? என்ன நினைந்தனளோ? இனி யெந்தனைக்காண வழியிலதென்றெண்ணியுயிர் நீத்தனளோ? அந்தோ! அப்பேதையின் கதியெவ்வாறாயினவோ? ஒன்றுமறியா தேங்கி அன்னவளைத்தேட விராஜவுடைமாற்றிக் காஷாய வுடைதரித்து, இப்பாழும் ஸ்தலத்தில்வந்து நான் பரதவித்திருக்கு மமயத்து இவண் நீயேன் வந்தனை? ஐயோ! பேதையே பாவியாகிய எந்தனை நோக்கினும், என்னிடம் சம்பாஷிப்பினும் மிக்க துயரன்றோ நேரும். பெண் மயிலே! நீ மறுமொழி புகலாது நினது மனைக்கேகி சுகித்திருப்பாய்; யானிதோ இப்பொழுதே புறப்பட்டு இப்பூமண்டல முழுதுந் தேடியாவது கமலாக்ஷியைக்

கண்டழைத்துக்கொண்டு இன்னகர்வந் தன்னவளுடன் கூட நின்மனக்குறை யகற்றுவேன்; காதலி நீ செல்?

ச்ம. (மனதிற்குள்) அரசகுமரன்காதலி யென்றதினல்என் பேரில்வருக்கு நாட்டமிருப்பதாகத் தெரிகிறது; ஆகையால், தகுந்தபடி மொழிந்து என்வயப்படுத்துகிறேன்.(பிரகாசமாக) காந்தா ! என்ன வார்த்தை சம்பாஷித்தீர்கள் ? கமலாக்ஷியை விட்டுத்தாம் பிரிந்ததினல் அன்னவளெவ்வளவு துயரத்திற்கிடமாகினள்; அது போல், தாமிதுசமையமெந்தனைப்பிரிந்திடில் யானுமவ்விதத்துன்பத்தை யடையநேரிடுமே தவிர வேறன்றன்ருே? காதலா! தாம் நன்ருகயோஜித்துப் பாருங்கள்? நாதா! யானினி யரைக்ஷணந் தங்களைவிட்டுப்பிரிந்திருக்க மனந்துணியேன். தாங்களடியாள்மீது கருணைசெய்தாளவேண்டும்.

கட். புத்திசிகாமணியான ஜலஜாக்ஷி ! நன்று மொழிந்தனை; நீ மொழிந்தது உசிதமேயாயினும் இது சமயம் யானடைந்திருக்கும் கோலத்துக்கும் நினது சவுந்தரியத்துக்கு மொவ்வுமா? நன்ருக யோஜித்துப்பார்.

ஜல. காந்தா! யான் தங்களுக்கு பாதியாளன்ருே? சகலவிதத்திலும் பாதிபாகத்தை யடைகிறவளான யான் இக்கோலத்திலும் பாதியெந்தனுக்குண்டன்ருே? ஆகையால் தாமடைந்த கோலத்தைக்கேள்வியுற்று இனித்தம்மைப் பிரிவதில்லையென்கிற நிச்சயத்துடன் அக்கோலத்திற்குவேண்டிய முஸ்தீபுகளைத் தயார்செய்து வேஷங்கரித்து வெளிக்கிளம்பி யிங்கு வந்தடைந்து அதை யெடுத்துக் கட்டிவைத்தேன்: ஆகையால யானுமவ்வித ஆடையணிந்து தங்களது சரீரசாயையைப்போல் தம்மைப்பிரியாது சேர்ந்துழல்வேன் காந்தா!

கட். பிரிய ரமணி! சபாஷ் மெச்சினேன் நின் புத்தியை. நீ இவ்வளவு தூரம் மன்ருடுவதால் என் மனமொருவாறு ஒப்புவதாயினும், மற்றொருவிதத்தில் ஐயோ! சுகசரீரியாகிய நின்னுடன் ஆனந்தவைபத்திற் வைத்தனுபவியாது இவ்வலங்கோல மேன்செய்யத் துணிந்ததென துன்புறுகிறது. ஆயினும், நின் எண்ணத்தை மறுப்பதற்கு மனமிலது. நன்று நின் எண்ணத்தின்படியே செல்வோம் வா.

(ஜலஜாக்ஷியும் சன்னியாசியைப்போல் காஷாயந் தரித்து கட்வாங்கனுடன் சேர்ந்து செல்லல்)

கட். ஆ ஜகதீசா! பேதையான கமலாக்ஷி யெந்தனைப் பிரிந்த துயரத்தால் எப்பாடுபடுகின்றனளோ? அந்தோ! வானவர் முதல்வா. (பாடுதல்)

மருந்தறியேன், மணியறியேன், மந்திரமொன்றறியேன்,
மதியறியேன் விதியறியேன், வாழ்க்கைநிலை யறியேன்,
திருந்தறியேன் றிருவருளின் செயலறியே ன்றந்தான் செய்தறியேன்,
மனமடங்குந் திடத்தினிலோ ரிடத்தேயிருந் தறியேன்,
அறிந்தோரை யேத்திடவுமறியேன்,
எந்தைபிரான் மணிமன்ற மெய்தவறிவேனே
இருந்ததிசை சொல்வறியேன், எங்ஙனநான் புகுவேன்
யார்க்குரைப்பே னென்னசெய்வேன் ஏதுமறிந்திலனே.

அந்திவண்ணா! ஆபத்சகாயா! அருள்மணி விளக்கே! என்னரிவை படுந்துயரம் நீயேதணிக்கவேண்டும். பாவியாகிய யான் அம்மடமானை யிவ்வடவியில் அனியாயமாய்ப் பிரிந்தலைந்து வாடும்வண்ணஞ் செய்த நினக்கு யானேது பிழையியற்றினன். அந்தோ! ஆர்த்தத்திராண பரனெனப்புகல்வது வீணோ? அநாதியாகிய யான் நினது சரணம்புயத்தைச் சர்வதா அர்ச்சித்திருந்த வெந்தனை யித்தீங்கிற் குள்ளாக்குவது நினக்குத் தர்மமோ? மான்மழுதரித்து மறையறியாப் பாதனே! நான் தம்மை நோவதில் யாது பயனுளது?

(பாடுதல்)

என்செயலாலாவ தொன்றுமிலது இனித்தெய்வமே
உன்செயலேயென் றுரைப்பெற்றே னிந்த வூனெடுத்த
பின்செய்ததிவினை யாதொன்றுமில்லை பிறப்பதற்கு
முன்செய்த தீவினையே இங்ஙனே வந்து மூண்டதுவே.

என்விதியை யான் நோகவேண்டுமல்லது சர்வஜீவதயாபரரான தம்மைநோவதில் பயன்யாதுளது? ஆ ஜலஜாக்ஷி! யானினிநின்னைநிகர் கமலாக்ஷியைக் கண்ணுற்காணுவேனோ? காண்பதுவும் சந்தேகமோ? கண்ணுற் கண்டுவக்குங்கால மெய்துமோ? கண்ணாட்டி! ஒன்றுமறியாது கலங்குகின்றேன். அன்றி, பேதையாகிய நீயுமென்னுடன் துயருறச்சம்மதித்து எந்தனைத்துடர்ந்து வருவது எந்தனுக் கிடிமேலிடி யிடித்த பாவனைபோல் துயரமுண்டாகின்றது. சகலத்திற்குஞ்சாக்ஷாத்லோகநாதரிருக்கிறார். செல்வோம் வா.

8-வது களம்.

சன்னியாசிவேடத்துடன் மந்திரிகுமாரனை வீரவர்மன் பிரவேசிக்கிறான்.

வீரவ. (தனக்குள்) ஆ ஜகதீசா! என்மனதிற்கிசைந்த உல்லாச மதிவதனப் பெண்மயிலாள் லீலாவதியை யிழந்து இவ்வேஷமாக்க ஏதுகாறும் நினைத்திருந்தனையோ பரமேசா! நானினி யெங்ஙனங்காண்பேன், கண்டுஎன்மனந்தேறுவேன்? ஜகதீசா! நினக்குஎன்மீது கிருபையில்லையோ கண்ணுதலே! அதோ யாரோ இரண்டு மகான்கள் வருகிறார்கள். அன்னவர் களைப்பணிந்து நமது வருத்தம் நீங்கிச் சுகப்படுவோமா, அன்றே நமக்கு விதித்தது இவ்விதிதானோவென்று வினவியறிந்து கொள்வோம். பிரபோ நமஸ்கரிக்கின்றேன்.

கட். (மனதிற்குள்)நான் நிஜசன்னியாசிபோலவே அபிநயிக்கிறேன். (பிரகாசமாக) ஏ குழந்தாய்! நீயார்? நின்வர

லாறென்ன ? ஏனிவ்விளவயதில் சன்னிபாசியாகினாய்? மகா கஷ்டங்களை யனுபவித்திருப்பதாக நின்முகத்தில் தெரிகிறது; அதேன்?

வீரவ. சுவாமி ! யான் கலிங்கதேசத்தரசன் மந்திரியின் குமரன். யானெனது நேசனான கட்வாங்கன் மனப்படற, அந்தோ! அவனது உடன்பிறந்தாள் லீலாவதியென்னும் பெண்மானுடன் அன்னவளது மாதாபிதாக்களறியாது வனத்திடை நண்ண, சோரர்கள் பறித்து எங்களது வஸ்திராபரணங்களைக் கவர்ந்ததுமன்றி யெந்தனைக் கொல்லவாரம்பிக்க; அவ்வுயர் குடியிற் பிறந்த லீலாவதி அவர்களை வேண்ட, அவள் வேண்டுதலுக்கிசைந்து எந்தனை வுயிருடன் விட்டேக, பின்னிருவரு மவ்விடமிருந்து செல்லு மமயத்து லீலாவதி பசியால் வருந்தித் தன்கழுத்திலணிந்திருந்த வொரு வைர கண்டசரத்தை யென்னிடமளித்து விற்றுவரப்பணிக்க, அந்தோ ! பரமசண்டாளனாகிய யான் சுந்தரமுகத் தையலை வனத்திருத்தி யதற்குச் சமீபமாயுள்ள சாளுவதேசத்திற் சென்று விலைகூற, அதைக் கிரயத்திற்குக் கொள்ளவந்த செட்டிகளிலிருவர் ஒருவரை விட்டொருவர் வாங்கவேண்டுமென்கிற வெண்ணங்கொண்டு ஒருவருக்கொருவர் சச்சரவு செய்து முடிவிலிருவரு மெந்தனைப் பிடித்து வரசன்பால் கொண்டுசென்று, இவ்வாபரணத்தைத்திருடிவந்தவனென்றியம்ப, மன்னவரெந்தனை யுண்மைவினவ, யானிப்பூண் என் மனைவியுடையது; அவள் இன்னகருக்கருகிலிருக்கும் வனப்புரத்திலின்னவிடத்திலிருக்கின்றனளெனமொழிய, உடனே வரசனெந்தனைச் சிறையிருத்தி, மறுநாட்காலையி லென்னை யழைத்து நீ யின்னகரில் யரைக்ஷணந் தங்கவொண்ணாது; உந்தனை மறுபடி இந்நகரிற் காண்பேனாகிற் சிறச்சேதஞ் செய்வேனென மொழிய, யான் அந்நகர் நீங்கிவனப்

புறமணுகி யெனதாருயிர்க் காதலியைக் காணுது பலவிடத்துந்தேடி நொந்தயர்ந்து, காணமுடியாமற் கடைசியாக இவ்வேஷமாகி யின்னமுந்தேடி யலைகின்றேன். ஐயா ! இக்கஷ்டநீங்கி யெந்தனது கண்மணியைக் காண்பனோ? காணுதுதவித்திருப்பேனோ? இது சங்கதியைத் தமதருள்வாக்கால் தெரிவிக்க வேண்டுகிறேன்.

(கட்வாங்கன் மூர்ச்சித்தல்)

வீரவ. சுவாமி ! ஏன் பெரியவர்களப்பையடைந்து ஸ்மரணை தப்பிவிழுந்தார் ?

ஜல. அவர் மூர்ச்சையைத் தெளிவிக்கிறேன். பிறகு அவரால் காரணந்தெரிவிக்கப்படுவீர்.

(கட்வாங்கன் மூர்ச்சைதெளிந்தெழுந்து)

கட். ஆ என் பிரியசகோதரி ! பரமசண்டாளனுகிய என்னுடன் பிறந்த காலவித்தியாசத்தால் நினக்குமிப்பேர்ப்பட்ட தீங்குகளேற்பட்டனவோ? எங்குற்றாயோ ? எப்பாடுபடுகின்றாயோ? எந்தன் நேசவிசுவாசப் பிரியசகோதரி ! எந்தனை மறந்தாயோ? இவன் தூர்த்தனென வெண்ணித் துறந்தாயோ? எங்கு காண்பேன்? எந்தன் ஆருயிர்நண்பா வீரவர்மா! நினக்கும் விதித்ததிவ்விதியோ? மகாபாவியாகிய யான் சூத்திரப்பரியேறி மிகுந்த வருத்தமடைந்து பின்னொருவாறக இறங்குஞ் சூத்திரமுணர்ந்து மகதநாட்டரசன் மகளான கமலாக்ஷியின் உப்பரிகையிற் குதிரையுடனிரங்கி யதையோர்பாலொளித்து வைத்து உப்பரிகையிற்செல்ல, அவண் நித்திரைசெய்துகொண்டிருந்த கமலாக்ஷியைக்கண்ணுற்று, பசிபொருக்கமுடியாது தட்டியெழுப்ப அன்னவளெழுந்து என் பசியை யாற்றித் தன்பூர்வோத்திரமொழிந்து, என் வரலாற்றையுணர்ந்து இருவருங் காந்தருவமாகக்கூடி மறுநாளிரவு

சூத்திரப்பரிமீது ஒருவருமறியாது அழைத்து வந்து நமது நகரத்தருகிலுள்ள உத்தியானவனத்திருத்தி யான் நகரஞ் சென்று அவளை இராஜமரியாதையுட னழைத்துப்போவ தாக மொழிந்து, யான் சென்று பிதாவை வணங்கி யன்னவ ரிடஞ் சகல சங்கதிகளையுஞ் தெரிவித்து, எதிர் சென்றழை க்க வேண்டிய வஸ்துக்களுட னிராஜவீதியில் வருகையில், மகா பாவியான தாருவர்மா வென்னும் கம்மியன் சூத்திரப் பரியின்மீது கமலாக்ஷியைக்கொண்டு செல்வதைக் கண்டு பர தவித்து, இனிபன்னவளை மீட்காது திரும்புவதில்லை யெனும் வைராக்கிய முட்கொண்டு காஷாயம்பூண்டு பிரயாணப்பட, அது சமயத்தில் நினது சகோதரியான ஜலஜாக்ஷி தானுங் கூடவே வருவேனென மொழிந்து எவ்விதம் மறுத்துங் கே ளாது அவளுங் காஷாயம் பூண்டு என்னைத் தொடர்ந்துவர, இவண் நின்னைக்கண்டேன், அந்தோ! நமது விதிப்பயனிப்படி யாயிருந்தது? ஆண்மக்கள்களாகிய நமது விதிப்பயன் தானி வ்விதமென்கிலோ, இதோ நினது சகோதரி ஜலஜாக்ஷியின் விதிப்பயனைப் பார்.

வீர. ஆ ஜலஜாக்ஷி! (மூர்ச்சித்தல்)

(வீரவர்மன் மூர்ச்சை தெளிந்தெழுதல்)

வீர. அந்தோ! என் பிரிய சோதரி! நின்னை யென் தோழரான இவ்வரசகுமரன் பால் அரியாசனத்தில் பார்த்து ஆனந்தியாம லிக்கோலத்துடன் காணவோ காத்திருந்தேன். ஐயோ! என்மனம் பதறுகிறதே; யான் என்செய்வேன்; கங்காதரா! மான்மழு தரித்த மங்கையோர்பாகா! இதுவும் நின்னருளோ? ஆ ஜகதீசா!

ஜல. எனதாருயிர் ஜேஷ்ட சோதரரே! தாமிவ்விஷ யத்திற்காக என்னைப்பற்றி வருத்தப் படுவது சரியன்று;

ஏனெனில், எனதுநாதரெவ்வண்ணமோ அவ்வண்ணமே யானுஞ் சுகதுக்கங்களை யனுபவிக்க வேண்டியவள்; அன்னவர் காஷாயந்தரித்ததால் யானுங்காஷாயந்தரித்தேன்; இது விஷயத்தில் துக்கமென்ன? என் தோழியாகிய லீலாவதியையும், கமலாக்ஷியையுங் காணவேண்டியதற்கு நாமூவரும் பிரயத்தினஞ்செய்யவேண்டியது. அவர்களைக் கண்டு கூடியபின் நமது சுகதுக்கங்களைப்பேசிக்கொள்வோம். பிறகுதமது சித்தம்.

கட். பிரிய நண்பா! நீ லீலாவதியை யழைத்து வந்த விஷயத்திலெந்தனுக்கு வருத்தமிலது; அது விஷயத்தில் சந்தேகப்படாதே. ஏனெனில், இவ்விலையிலாமாணிக்கம் நிகர் ஜலஜாக்ஷியை நீ யெந்தனுக் களித்திருக்க, நான் லீலாவதியை நீ யடைந்ததற்காக மனவருத்தப்படுவேனென நினையாதே. நல்லது, இதுசமயம் ஜலாக்ஷி கூறியதுபோல் நாமூவரும் அவ்விருவரையுந்தேட முயலவேண்டுவது திண்ணம். ஆகையால், நாமூவரும் அதோ! தெரிகிற வாசிரமத்திற் கிஞ்சித்து விச்ராந்தியடைந்து பின் செல்வோம் வாருங்கள்.

(மூவரும் ஆசிரமஞ் சென்றவுடன் அவ்வாசிரமத்திற் கண்வரென்கிற மகாரிஷியைக்கண்டு வந்தித்தல்)

கட். தோழா வீரவர்மா! இதோ பார்? இந்த வாசிரமம் மகானுபாவராகிய கண்வமகாரிஷியினுடையது. யாம் இவ்வாசிரமத்தினுட்சென்று அம்மகானின் அடிமலர்பணிந்து நமதுவினை தீருங்காலமெதுவென நன்குணர்வோம். பிரபோ! தீனர்கள் நமஸ்கரிக்கின்ருேம். (பாடுதல்)

அப்பனீயம்மைநீயையனு நீயன்புடையமாமனும் மாமியும் நீ
ஒப்புடையமாதரு மொண்பொருளுநீயொருகுலமும் சுற்றமும்ஓரூரு
துய்ப்பனவு முய்ப்பனவுந் தோற்றுவாய்நீ துணையாயென்னெஞ்
சந்துறப்பிப்பாய்நீ

இப்பொன்னீ இம்மணி நீ யிம்முத்து நீ யிறைவ நீ யெனையாளும் தெய்வம் நீயே.

ஏ ஜோதிர்நாதா ! அநாதரக்ஷகா ! தீன சரண்ணியா ! என்குருவே.

(பாடுதல்)

குலம்பொல்லேன் குணம்பொல்லேன் குறியும்பொல்லேன்
குற்றமே பெரிதுடையேன் கோலமாய்
நலம்பொல்லேன் நான்பொல்லேன் ஞானியல்லேன்
நல்லாரோ டிசைந்திலேன் நடுவேநின்ற
விலங்கலேன் விலங்கலா தொழிந்தேனல்லேன்
வெறுப்பனவு மிகப்பெரிதும் பேசவல்லேன்
இலம்பொல்லே னிரப்பதேயீய மாட்டே னென்செய்
வான்றோன்றினே னேழையானே.

ஏ லோகேசா ! ஆதியில் சனக, சனந்தன, சனாதன சனத்குமாராதி யோகிகளுக் குபதேசிக்க கல்லாலின டியிலமர்ந்த கங்கையைத் தரித்த கண்ணுதலோ ? அன்றேல், ஆதியில் மாணிக்க வாசகருக்குக் குருந்த விருக்ஷத்த டியிலமர்ந்து உபதேசித்த வுத்தமகுண சிலாக்கியரோ? ஏழை படும் பாட்டிற்கிரங்கி யனுக்கிரகிக்க இவ்வாசிரமத்திடை மவுன யோகியாகத் தரிசனமளித்த தமது திவ்விய சரணாம்புயத்தில் வந்திக்கு மடியேன் வருத்தத்தையெலாந் தவிர்த்தாளுவாய்.

(பணிதல்)

(கண்வர் நிஷ்டைகலைந்து, தன்னைப்பணிந்தவன்
இன்னானெனத் தனது ஞானதிருஷ்டியா
லுணர்ந்து சம்பாஷித்தல்)

**கண்.** சுபம்பவது தேவத்ஸா ! மன்னர் மதலாய் ! மங்கையினால் மனம்வேறுபட்டு மதிமயங்கி இவ்வேடமாகினை யன்றோ? இது கண்ணுதலின் திருவிளையாட்டே. வத்ஸா ! நீங்களது பூர்வோத்திரங்களைச் சவிஸ்தாரமாக வுணர்ந்தேன்.

யானே, எல்லுமெல்லியு மேழைபங்காளனை கங்காதரனைக் கருத்திலுண்ணித் தவஞ்செய்பவன்; அன்னவரது கருணையினற் பூதபவுஷிய வர்த்தமானங்களை நன்றுணர்ந்தேன். பக்தர்காள்! நன்று, இனி நீங்களது கஷ்டகால விமோசனமாக க்கறைக்கண்டன் கருணைசெய்வார். ஆகையால், நீங்கள் மூவருமிவ்வேடத்துடனே இவ்வாசிரமத்திற் கருகிலுள்ள மச்சதேசம் நண்ணி உபாயத்தா லவ்விடமிருக்கும் லீலாவதியை யழைத்து இவண்வரின், பின் கமலாட்சியி னிருப்பைத் தெரிவிக்கின்றனன். ஆகையால், புரவலர் புதல்வனே! மதிநிறைந்த மந்திரிமதலாய்! மதிவதன தையலே! நீங்கள் மூவரும் ஜல்தி சென்று இவண் திரும்புங்கள்.

(கட்வாங்கன், வீரவர்மன், ஜலஜாக்ஷி மூவரும் நிட்கிரமித்தல்)

## 4-வது அங்கம்

### 1-வது களம்

(சுகுணபூஷணனும், சுந்தரவதனனும் பிரவேசித்தல்.)

சுகுண. அமைச்ச! ஜகதீசரது கருணையினல் எனது வயற்றுதித்த அருமைத் திருக்குமரியாகிய லவிதாங்கிக்குச் சுகுணவந்தனை ஒருநாயகனைத்தேடி விவாகஞ்செய்வித்தவுடன் என்மனே வியாகூலம் நிவர்த்தியாயிற்று. எனதுமருமகன் மகாசுலட்சணவந்தராக விருக்கின்றர். அதிலுமெனது குமரி யிடைவிடாது அன்னவருடன் விளையாடிக்கொண்டிருப்பதைச் சகிகளால் மொழியக்கேட்ட நான்மிகு குதூகலமடைந்தேன். அமாத்தியா! தமதுசகாயத்தாலும், ஜகதீசர்அருளாலு மெனக்கு யாதொரு குறைவுமில்லாது இனிச்சுகமடைவேனென்பதில் ஐயமில்தன்றே?

சுந். மகாராஜ் ! தமதிஷ்டம்போலும், தமதுகுமாரியின் வனப்பின் நேர்த்திக்குங் குணத்திற்கு மிசைந்த நாயகர் கிடைத்தது தாமியற்றிய நோன்பின் பலனே.

(கட்வாங்கன், வீரவர்மன், ஜலஜாக்ஷி மூவரும் சன்னியாசி
(வேடத்துடன் பிரவேசித்தல்)

சுதண. அமாத்தியா ! அதோ யாரோ மூன்றுமகாத்து மாக்கள் திருமூர்த்திகள்போல் பிராப்த மாகின்றார்ளே; அவர்களை யெதிர்சென்றழைப்போம் வாருங்கள்.

சுந். தங்களிஷ்டம்போல் மகாராஜ்.

(இருவரும் எதிர்நோக்கிச் செல்லல்)

சுதண. பிரபோ ! தீனன் நமஸ்கரிக்கின்றேன்.

சன். சுபம்பவது, ராஜன் !

சுதண. பிரபோ!சதாதங்கள் தபோக்கினியால் பரிசுத்தஞ் செய்யப்படுகிற நாடெது? தங்கள் பாததூளியால் இந்நகரம் புனிதமானதற்குச் சந்தோஷிக்கிறேன்; தாங்கள் சிரமந்தீர இந்த அர்க்கிய, பாத்திய, பலங்களை கிரகித்தெங்களை யாசீர்வதிக்கப் பிரார்த்திக்கின்றேன்.

சன். போ இராஜன் ! எங்களுக் கிருப்பிட மின்னது தானென்கிற நிச்சயமிலது. நாங்கள் சதா நித்யானந்த வஸ்துவை யாராதிருக்குஞ் சாதுக்கள். யாங்களோ காரணத்தை யுட்கொண்டு கிஞ்சித்துக் காலமிவணிருந்து செல்லக்கருதி யிவண் குறுகினேம்.

சுதண. பிரபோ யான் ! தன்னியனுகினேன். தாங்களது விச்சைபோலெதுபரியந்த மிருக்கத் திருவுளமோ, அதுவரை யிவணிருந்து, இத்தீனனுக்கருள் புரியக்கோருகின்றனன்.

சன். போ இராஜன்! நாங்களெங்களது ஆசிரமத்திருக்குமமயத்து உலகசஞ்சாரஞ்செய்ய விச்சையுண்டாக, நமது மனோபாவப்படி நமக்கு சிச்ரூஷை செய்யு முத்தமர்கள் யாவரென வுன்னுமமையத்து, மச்சநாட்டிறைவனை நீ யுத்தமனெனவும், நினது குமரியும், அவள் மனமிசைந்த நாயகனு மெங்களுக்குச் சிச்ரூஷை செய்ய யோக்கியர்களெனவுமுணர்ந்து இங்ஙனம் பிராப்தமாகினோம்.

சுதண. பிரபோ! தமது சித்தத்தி லுகந்தவண்ணஞ் செய்யக் கார்த்திருக்கின்றேன், எனது குமரியாகிய லலிதாங்கியின் மனவிருப்பத்தின்படி யன்னவளுக்கியற்றிய வுத்தியானவனந் தாங்களிருப்பதற்குச் சுகமான பிரதேசம் அவ்விடத்தில் தாங்களிருந்தால், யானெனது குமரியையும், மருமகனையுஞ் சிச்ரூஷைக் கவ்விடம் மனுப்புகின்றேன்.

சன். ஏ இராஜசேகரா! நினது அன்பிற்கு மதிதிசத்காரஞ்செய்யு மேன்மைக்கும் மிக அகமகிழ்ந்தனம். அவ்விதமே இந்நகர் உத்தியானவனஞ் செல்கின்றோம். ஜெய சங்கரா! கவுரீபதே.

(சன்னியாசிகள் மூவரும் நிட்கிரமித்தல்)

2-வது களம்.

சுதண். அமைச்ச! யான் செய்த நோன்பின் பலத்தாற் றிருமூர்த்திகளை நிகர்த்த மூன்று யோகிகள் நமது நகரடைந்து, இவண் சிறிது காலம் வசிக்கவேண்டுமெனப் புகன்றதன்றி, நமது மருமகனையும் மகளையுஞ் சிச்ரூஷை செய்யும்படி நம்மையவர்கள் கேட்கும் பாக்கியமும் பெற்றோம். ஆகையால், தாமொரு சேவகனையனுப்பி எனது ஜாமாதாவையும் குமரி லலிதாங்கியையும் அதிதுரிதமாக இவணழைப்பியுங்கள்.

சுந். தோன்றலே ! இதோ அழைப்பிக்கிறேன். சேவகா ! நீ துரிதமாகச் சென்று அரசரது குமரியையும், அவரது நாயகரையு மதிதுரிதமாக அரசரழைத்ததாகத் தெரியப் படுத்து?

சே. பிரபோ ! அப்படியே தெரிவிக்கிறேன்.

3-வது களம்.

(லீலாவதியும், லலிதாங்கியும் பிரவேசித்தல்.)

காரியதுரந்தரனென்றலீலா. சகோதரி லலிதாங்கி! ஏதோ இன்றெனது இடதுதோளு மிடதுகண்ணுந் துடிக்கின்றது. மனதிற்கேதோ வொரு ஆறுதலாக விருக்கின்றது. இன்னகாரணமென வெந்தனுக்குப் புலப்படவில்லை.

லீலா. சகோதரி ! நினக்குமட்டி லவ்விதமிருப்பதாக நீமொழிந்தனை யன்றோ ; இதோபார் யானுமப்படியே அனுபவிக்கின்றேன். இதன்காரண மெனக்கின்ன தெனப்புலப்படவில்லை.

சேவ. பிரபோ ! நமஸ்கரிக்கின்றேன், மாதா! நமஸ்கரிக்கின்றேன்.

லலி. சேவகா ! தீர்க்காயுளா யிருக்கக்கடவாய். இவ்விடம் வந்தகாரணம்யாது ?

சேவகன். அன்னையே ! அரசர் தங்களையும், தங்களது நாயகரையுஞ் சபைக்குச் சீக்கிரம் விஜயஞ்செய்யத் தெரிவிக்க வென்னையனுப்பினர்.

லலி. சேவகா ! என்ன விசேஷம்?

சேவ. அன்னையே ! இன்றுசபைக்குயாரோ மூன்று ருஷிகள்வந்து நமது மகாராஜாவுடனேதோ சம்பாஷித்துக் கொண்டிருந்தார்கள். பின்னரவர்கள் தங்களுத்தியானவனத்

தைநாடிச்செல்ல அரசர்தங்களை யழைத்துவரும்படி யாக்ஞாபித்தார்கள். இதுதானெந்தனுக்குத்தெரியும்.

லலி. நாதா ! பார்த்தீர்களா? தமக்குமெந்தனுக்கு மேற்பட்ட சுபச்சின்னத்திற்கும், எனது பிதா, நம்மிருவரையு மழைத்து வரப்பணித்ததையு யோசித்தால்,மகான்களைநாம் தரிசனஞ்செய்வதற்கு அழைக்கிறார் போற்றோற்றுகிறது. நாம் சென்று அன்னவரைப்பணிந்து, நமது துன்பங்களை நிவர்த்திசெய்து கொள்வோம் வாருங்கள்.

காரிய. பிரியரமணி ! நன்று; மிகச்சந்தோஷம். செல்வோம் வா.

(இருவரும் சென்று அரசனைப் பணிதல்)

சுதந். ஏ வத்ஸெ ! நீயும் நினது நாதரு மொருகாரியஞ்செய்ய வேண்டுமென நினைக்கின்றேன். யாதெனில், நினது உத்தியானவனத்தில், திருமூர்த்திகளைப்போன்ற மூன்று மகா ருஷிகள் வந்திருக்கின்றனர். அவர்களுக்கு நீங்களிருவரும் வேண்டிய சிச்ருஷைகள் புரிந்து, அன்னவர்களனுக்கிரகத்தைப் பெறவேண்டும். அதற்காகவே உங்களை யழைத்தேன்.

காரிய. பிரபோ மகராஜ்!நான் தன்னியனானேன். மகத்குதூகல மடைந்தேன். மகாத்துமாக்களுக்கு சிச்ருஷை புரிவதென்றால் இலகுவிற் கிடைக்கக்கூடியதா? அன்று; அப்படியிருக்க, தமது குமரியு மெனதாசைக் கிளியுமாகிய லலிதாங்கியினுத்தியானவனத்து பிராப்தமாயிருக்குஞ் சாதுக்களுக்கு சிச்ருஷை செய்ய யாதுந்தடையிலது. அப்படியேசென்று தமதாக்ஞையின் வண்ணஞ் சிச்ருஷை புரிகின்றோம்.

சுநுண. மகத் குதூகல மடைந்தேன். என்மனோபீஷ்டப்பிரகாரம் பெரியோர்களுக்குப் பணிவிடைசெய்யத் தாமே யேற்றுக்கொண்டீ ராகையால்.நீங்களிருவருந் துரிதமாகச்சென்று, அம்மகான்களுக்கு சிச்ரூஷை புரிந்து, அன்னவர்களது அனுக்கிரகத்தைப் பெறுங்கள்? சென்றுவாருங்கள்.

சாரிப. பிரபோ! நமஸ்கரிக்கின்றேன்.

லலி. பிதா! வந்தனஞ்செய்கின்றேன்.

காரி. ஏஹம்சகௌமனு! தற்காலம் நாமிருவருந் தன்யர்களாகினோம். இன்றுதயத்தில் நமக்கேர்ப்பட்ட சுபச்சகுனங் களிந்தவைபவத்திற்கேயாகையால், நாம் சென்றன்னவர்களைப் பணிந்து, சிச்ரூஷைபுரிந்து நமது வருமைதீருநாளென்றென வறிந்து கொள்வோம். செல்வோம் வா.

லலி. தம் மனம்போல் நடக்கத் தயாராகவிருக்கிறேன்.

4-வது களம்.

(கட்வாங்கன், வீரவர்மன், ஜலஜாக்ஷி சன்னியாசிகள்)

கட். என்னின் னுயிர்த்தோழா! இன்னமு மெனதாருயிர்ச் சகோதரியாய லீலாவதியைக் காணிலேன். என் செய்வேன்? இனி யெக்காலஞ் செல்லுமோ? ஆ ஜகதீசா! இன்னமுந் தமக்கேழை மீதிரக்கமில்லையா? கண்வர் மொழிந்தது வீணுமா? ஒருக்காலும் பொய்க்காது.

வீர. தோழா! தமதுமனம் வருத்தமுற தமதுசகோதரியின் மீதுள்ளவெனதாசை நேசபாசத்தால் மகாராஜாவையு மெனது பிதாவையு மெதிர்பாராது அவளை இரவிலழைத்து வந்து நடுக்கானகத்திற் பிரிந்துதவிக்கும் பரமசண்டாளனை என்மனமாறுதலடையும்வண்ணம்லோகேசர் கண்வர்மொழிந்

தவார்த்தையாலிதுவரையுங் காத்திருந்து மின்னமுமெனதாருயிர் காதலியைக்காணும் வழியிலாது மயங்குகின்றேன். என்செய்வேன், எல்லாந் தெய்வத்தின் செயலே.

(காரியதுரந்தரனென்னும் லீலாவதியும், லலிதாங்கியும் பிரவேசித்தல்)

காரிய. பிரபோ ! அபிவதனஞ் செய்கிறேன்.

லலி. பிரபோ ! நமஸ்கரிக்கின்றேன்.

வீர. உங்களுக்கு மங்கள முண்டாகுக. ஏ இராஜகுலத் தோன்றலே ! வீற்றிரும்? அரசிளங்குமரி ! வீற்றிருப்பாய்.

காரி. பிரபோ ! தீனர்களாகிய வெங்கள் மனோவியாகூலத்தைநீக்கி யெங்களைத் திருப்தி செய்விக்க வேண்டுகின்றோம்.

கட். அரசிளஞ்சிங்கமே ! உலகில் மனித ஜன்மமெடுப்பது மகாவரிது; அதிலு முத்கிருஷ்ட மனித ஜன்மமெடுத்துங் கஷ்டத்தை யனுபவியாது சுகத்திலிருப்பது மிகக்கஷ்டம். ஆயினும், நிங்களுக்கு நேர்ந்த கஷ்டம்யாது? நிங்கள் மனக்கவலையாது? அதை யொருவாறு தெரிவிப்பீர்களாக.

வீர. பிரபோ ! உலகத்தின்கண் நரை, திரை, மூப்பு, சாக்காடென்னும் நால்வகை குணத்திற்குமுள்ள ஏதுவாகிய இம்மனித சரீரமெடுத்த வெனது சரித்திரத்தைத் தெரிவிக்கின்றேன், கிஞ்சித்து கிரகிக்கவேண்டும்.

கட். ஏசாது ! தமக்கெத்துயரிருப்பினும், நாமெப்பொழுது சன்னியாசியாகினோமோ அப்பொழுது அதன் முன்னரடைந்த வின்ப துன்பங்களை மறந்து விடவேண்டுமென்பது திண்ணம். ஆகையால், தமது சரித்திரத்தை பின்

னர் தெரிவிக்கலாம். இக்காரியதுரந்தரர் அரசகுமரராயிருந்தும் தமக்கேதோ மனக்கவலை யிருப்பதாயும் அதைத்தீர்க்கவேண்டுமென்றும் பணிந்ததால், அன்னவர் குறையை முதலில் வினவுவோம்.

காரி. (தனக்குள்) இம்மகான் சம்பாஷிப்பதை யுற்றுநோக்கில் நமது சகோதரரான கட்வாங்கன் குரல்போலிக்கின்றது. நல்லது நாம் பதறலாகாது. நமது விருத்தாந்தத்தைத் தெரிவிப்போம். பின்னர் நிகழ்வதை யறிவோம். ஏ மகாத்துமாக்களே! பதிதையாகிய வெனது சரித்திரத்தைக் கிஞ்சித்து சிரவணஞ்செய்து, எனது வின்னல் தீர்க்கவேண்டும். அதாவது, யான் கலிங்கதேசத்தரசன் குமரியாய லீலாவதி என்னும் பெயரினள். (இப்படிச் சொல்லி முடிவதற்குள் கட்வாங்கன் பிரியசோதரி! யென்று கட்டிக்கொண்டு, கண்ணில் தாரை தாரையாக நீர் பெருக, வாய் குழறிப்பேச முடியாமல் ரோதனஞ் செய்தல்) பிறகு.

கட். ஆ பிரிய சோதரி! நீ யென்னுடன் கூடப்பிறந்து பரம விசுவாசமாயிருந்தும், மகா பாபியாகிய யான் யுவாவாகியும், நினக்கனுகுணமான நாயகனைத் தேடி மணஞ் செய்யாதிருந்த மனவருத்தத்தினு லெனது நேசனான வீரவர்மனுடன் வனம்புகுந்துபடாத அல்லலடைந்து, இவ்விராஜாங்கத்தி லாணுடையுடன் ஆடவனெனக்கண்டோர் நினைக்கும் வண்ணம், நின்கருத்திலுள்ள துயரங்களை யெல்லா மகத்தடக்கித் துயருழந்திருக்கின்றனையோ? என்னுடன் கூடப்பிறந்ததற்கிதுதான் நீ கண்ட சுகமோ? நங்காய்! நின் கோமளரூபத்தைப்பார்க்க வென்மனம் பதறுகிறதே. என்னுயிருடல்விட்டு நீங்கும் மார்க்கம் நோக்குகின்றதே. என்ன கஷ்டம் நினக்கு நேர்ந்தது? லீலாவதி!

லிலா.. என்னருமை ஜேஷ்டப்ராதா ! தாம் சூத்திரப் புரவியேறி யாகாயகமனஞ் செய்தபொழுது, அந்தோ! தாங்கள் ஜீவனுடன்றிருப்புவீர்களென்னு நிச்சயமில்லாது கலங்கிக்கொண்டிருந்த தந்தையையுங் கவனியாது, மகா தீரவீர சிகாமணியான தம்முடைய வியோகத்தையுநோக்காது, காமவிச்சையாற்றமதாருயிர்த் தோழரான வீரவர்மனுடன்வனம் நண்ண, அங்கென் பூர்வஜன்ம வினையினலெனது நாதனைப் பிரிந்து. மற்றொரு மன்னனாற் கவரப்பட்டும், எனது புத்தி கோசரத்தினலவனிடமிருந்துந் தப்பிக்கானகமடைந்து, நாதரைக்காணுது திகைத்துக் கதறி, சுயசரீரத்துடன் சொல்லில் பதிவிருதாதோஷம் லபிக்குமென வெண்ணி ஆணுடைதரித்து, இந்நகர்வந்து இந்த வுத்தியானவனத்திற் சயனித்திருக்குங்கால், இவ்வூரரசன்மகளாய் விந்த லலிநாங்கி பெண்ணைக் கண்ணுற்று காமுற்றதால், அதை யறிந்த வரசனிங்குவந்து என்னைவேண்ட, யான் நகரடைந்து இவளை மணந்து, அந்தப்புரஞ்சென்று லலிதாங்கியின் மனோபாவமறிந்து, எனதுண்மையை மொழிந்து, அவளைத் தமக்கு விவாகஞ் செய்விப்பதாக வுறுதிமொழி பகறி, இதுவரை வெளியிலொருவருக்கு மென்னுண்மைதெரியாது காலங்கழிக்க, கறைக்கண்ட ரருளினலின்று அரசனழைத்துத் தங்களுக்குத் தொண்டு புரிய வனுப்பினர். அந்தோ ! இளவரசென்னு மென்பிரிய சோதரா ! தமதழகிய திவ்விய சுயரூபத்தைப்பாராது முழுதுந் துறந்த முனிவர்களைப் போற்றரித்த வேடச்தைப் பார்க்க லபித்த பரமசண்டாளியின் கெதியை யென்னுற் சொல்லுந்தரமன்று. சகோதரா ! தாமிவ்வேடமெடுத்த காரணம் யாதோ? அன்றியும், தாம் நகரடைந்து மெனது வியோகத்தைப் பிதாவாலுணர்ந்து, எந்தனைத்தேடி வரும் மார்க்கத்திலென்னுதரான தமது தோழரைக் கண்டு

கோபமுற்று வதைத்தீர்களோ, அன்றேல் காணவில்லையோ? அதன்விபர மின்னதென வெந்தனுக்குத் தெரிவிக்கக் கோருகிறேன்.

வீர. என் பிரிய காதலி ! நின் சகோதரரை வெறுத்து மொழியாதே? பரமசண்டாளனாகிய யானுந்தனாலளிக்கப்பெற்ற வைரகண்டசரத்தைச் சாளுவதேசத்திற்கு விலைப்படுத்தச்செல்ல, அங்கிரண்டு வைசியர்கள்வந்து அவ்வாபரணத்தை விலைக்குக் கொள்வதி லொருவருக்கொருவர் பொருமைகொண்டு எந்தனைத் திருடனெனப் பிடித்து வரசன்பால்விட, அரசனெந்தனை யாரெனவினவ, யானெனது விருத்தாந்தத்தையும் நினது இருப்பையுங்கூற, அம்மன்னவனேதோவொரு துஷ்ட வெண்ணங்கொண்டு என்னைக் காவற்படுத்தி, பின் மறுதின மெந்தனைச் சிறைநீக்கி, நீ யினி யிந்நகரத்திற் றலைகாட்டலாகாதெனத் தெரிவித்தனுப்பினன். யானங்கிருந்து விடுபட்டு வனத்தில்வந்துந்தனைப் பார்க்க நின்னைக் காணாது, துயருற்று ஏங்கி யிவ்வேடங்கொண்டு வனத்தலைய, அரசகுமாரரான வென் தோழரவண் சன்னியாசியாகவர யான்கண்டு வணங்கி என்றுயர் தீருமெனவேண்டி, என் வரலாறு மொழிய, அதைக்கேட்டவுடன் றன்னறிவழிந்து மூர்ச்சையாகிப் பின்னர் தெளிந்து எனக்காறுதல் மொழிந்தழைத்து வந்தனர். அந்தோ ; பிரிய ரமணி ! மிகு கஷ்டதிசை யடையினு மெவ்வுருமாறினு நின்னைக் காணக் கிடைத்ததற்கு நான் ஜகதீசனை வணங்குகின்றேன். காதலி ! இனி விசனப்படேல்.

சுட். ஆ பிரிய சோதரி ! யான் என் மொழிவேன் ? சூத்திரப்பிரியேறி ககனமார்க்கமாக விதர்ப்பநாடடைந்து கிழிறங்குஞ் சூத்திரமுணர்ந்து, அந்நாட்டரசன் மகளாய கமலாக்ஷி

யினரண்மனை மீதிறங்க, நடுவிரவானதா லிருட்டினாலும் பசி க்களேயினாலு முன் பின்னறியா விடத்தினாலும் பயமுற்று, கமலாக்ஷியி னந்தப்புர நண்ணி, அவளைச் சமாதானப்படுத்தி, காந்தர்வமாகக்கூடி, மறுதினமிரவி லொருவருமறியாது சூத் திரப்புரவிமீ தன்னவளை யேற்றிக்கொண்டு நமது நகருக்கரு கிலுள்ள வுத்தியானவனங்குறுகி, அங்கன்னவளை நிறுத்தி நமது தந்தையிடந் தெரிவித்துச் சந்தோஷமா யழைத்துச் செல்லக்கருதி யான் மரியாதையுட னரசசமுக நண்ணி, யென்வரலாறு மொழிந்து கமலாக்ஷியை யெதிர்சென் றழை க்கவேண்டிய வேற்பாடு செய்ய மந்திரியுடன் சென்றிருக்கு மமையத்து, பிதா சூத்திரப்புரவி கொணர்ந்த தாருவர் மாவை யழைத்து வெகுமதியளித்துப் புரவியையுங் கொடு த்து, அப்புரவியால் கமலாக்ஷி யெந்தனுக்குக் கிடைத்த சந் தோஷத்தையும், அவளை யுத்தியானவனத்திருத்தி யெதிர் சென்றழைப்பதற்கு வேண்டிய வேற்பாட்டிலிருக்கும் யான் வருமுன்னம் இந்நகர்விட்டு நீங்கென வரசன் அவனை மொ ழிய, அப்பரமசண்டாளனான தாருவர்மா வுத்தியான வனஞ் சென்றே, எவ்விதமோ கமலாக்ஷியைச் சூத்திரப்புரவிமீதேற் றிக் ககனமார்க்கமாகக் கொண்டு செல்ல,அதை யான் பார்த் துத் துயரடைந்து கதற, அது வுணர்ந்த பிதா வெந்தனுக் குப் பலதேறுதல் மொழிந்துங் கேளாது, இவ்வேடத்துடன் கமலாக்ஷியைக்கண் டழைத்துவராது நகருக்குத் திரும்பே னென நிச்சய மொழிபகர்ந்த வெந்தனிடம் நினது வியோ கத்தை மொழிந்து பிதா கதற, யானதைக்கேட்டவுடன் சோ கமுற்று, இரண்டு துயரத்திற்காளாகி பிதாவுக்குத்தேறுதல் மொழிந்து வுத்தியானவனம் நண்ணி கமலாக்ஷி யிருந்தவிட த்தில் விசனமடைந்திருக்க, அது சமயம் நமது மந்திரி சூழ ரியான் ஜலஜாக்ஷி யவ்விடமிருக்க, யான் கமலாக்ஷியென்ன

வெண்ணி கட்டிப்பிடித்து, பிறகு ஜலஜாக்ஷியென வறிந்து லஜ்ஜைபுற்று. அதன்பின்னர் அவனை யிராஜ்ஜியத்தி லிருக்கப் பணிக்க, அவள் சம்மதியாததினால் அன்னவளு மெந்தனைப் போலாண்டிவேடந்தரிக்க, இருவருங்கூடி வனமார்க்கமாக என் காதலியைத் தேடிவர, நடுவிலெனது தோழரான இவ் வீரவர்மனை யிவ்வேடத்துடன் சந்தித்தோம். அவனெங்க ளைப்பணிந்து தன் குறையை முறையிட, யான் கேட்டுப் பரி தபித்துப் பின்னரவனுற்றேறி, நின்னையுங் கமலாக்ஷியையுந் தேடிவரு மபையத்துக் கண்ணுவராசிரமம் நண்ணி அர்ம காணை வணங்க, அவர் ஞானதிருஷ்டியால் நினதிருப்பை யறிந்து தெரிவிக்க, நாங்களுடனே இவண் போ ந்து நின்னைக் கண்டனம். இனி கமலாக்ஷியைக் காணுவதில் முயற்சி செய்யவேண்டும். ஏ பிரிய சோதரி! நினது நிஜ வுருவங் காண யான் மிக்க அவாக்கொண்டனன்.

லீலா. எனதாருயிர்ச் சகோதரி ஜலஜாக்ஷி! யான் நின் னுட னுண்மை பகராது மறைத்த பாவத்தால், யானடைந்த துக்கமெளிதன்று; ஆயினும், நீ யெந்தனை வெறுக்காது என் சகோதரரை மணக்கவெண்ணங்கொண்டு அவர் மனதை நின்பாற்றிருப்பிச் சுகம்பெறுவிடினும் என்சகோதாருடன் கஷ்ட மனுபவிக்க இவ்வேடங்கொண்ட நினது பெருந்தன் மைக்கு யானுயிர வந்தனஞ் செய்கின்றேன். எந்தனை மன் னிப்பாயாக.

ஜல. தோழி! ஈட்டுக் கேடென வுலகோர் சொல்லும் வார்த்தைபோன்று என் சோதரர்மீது காதலுற்றனை யெ னத்தெரிந்து, எவ்விதமாவது அரசகுமாரரை யாமடைந்து நமது சகோதரருக்குந் தீங்கணுகா வண்ணங் காப்பாற்ற முயன்று, நினது பிராதா கமலாக்ஷியின் வியோகத்தாற் சன் னியாசிவேடம் புனைந்து செல்கிருரெனக் கேள்வியுற்று யான்

உத்தியான வனங்குறுகி தெய்வகடாக்ஷத்தா லவரதுகிருபை யையடைந்து அவரைவிட்டுப்பிரியமனமில்லாது இவ்வேஷத்துடனவரைப் பின்பற்றி வந்ததினால், சகி! நின்னைக்காணலாயிற்று. ஆயினும் எல்லோருடைய சுயரூபத்தையுங் காட்டியெல்லோருஞ் சந்தோஷ முறவேண்டும். ஆகையால், சுயரூபத்தைக்காட்டுங்கள். யானும் என்னுண்மை வடிவுடன் வருகிறேன்.

(திரைக்குப்பின் போய்சுயவுருவுடன் திரும்புதல்.)

(மற்றவெல்லோருஞ் சுயரூபத்துடன் வருதல்.)

லீலா. தோழி லலிதாங்கி! யானாதியில் நினதந்தப்புரத்தி லெனதுண்மை மொழிந்து, என்சோதரருக்கு நின்னை மணஞ்செய்விக்கிறேனென மொழிந்தேனன்றோ? ஆகையாலிங்ஙனம்வா, எந்தன்பிரிய சோதரா! தாமிவளை யென்னிமித்தந் தமது நாயகியாகக்கொண்டு லலிதாங்கி, ஜலஜாக்ஷியிருவருடனிக் கமலாக்ஷியையுங் கண்டு அவர்களெல்லாரிடத்திலு மொரே சீராக விருக்கக் கோருகின்றனன். எனதாருயிர் தோழி ஜலஜாக்ஷி! இந்த லலிதாங்கியை நின்சகோதரியாகப் பாவித்து, என்சோதரருடன் சேர்ந்திருவருஞ் சுகஜீவிகளாக வாழக்கடவீர்.

கட். சோதரி! நின் மனோபாவத்தின் வண்ணம் யான் நடந்துகொள்கிறேன். ஏ லலிதாங்கி! இனி யுன்மனக்கவலையகற்று; ஜலஜாக்ஷி, கமலாக்ஷி இவர்களுடன் நீயுஞ்சுகமாகவென்னுடன் கூடிக்கலந்து சுகித்திருப்பாய். யாமெல்லாரையுஞ்சமமாக வனுபவிப்பதில் தடையிலது.

லலி. நாதா! யான் பூர்வஞ்செய்த தபோபலத்தினாற்றங்களை நாதனாகவடைந்தனன். எந்தனைக்கைவிடாதாதரிக்க கருத்துவக்க வேண்டும். என் ஜேஷ்ட சோதரி ஜலஜாக்ஷி!

எந்தன் மீது கருணைசெய்து எந்தனை நின்சகோதரியாகப்பாவித்துக் காப்பாற்றக் கோருகின்றனன்.

ஜல. சோதரி! வருத்தப்படேல். எல்லோரும் சரியாகப் பகிர்ந்துண்போம்.

கட். பிரியசோதரி! என்னுருயிர் நண்பா! எனதன்புள்ள நாயகிகாள்! நாமினி யிவ்விட மரைக்ஷண மிருக்கலாகாது. யாம்சன்னியாசி வேடத்துடன் கண்வராசிரம மடைந்து, கமலாக்ஷியைக்காணும் வழியைத் தேடவேண்டும்.

லீலா, சோதரா! அப்படியே செய்வோம்.

(எல்லோரும் சன்னியாசி வேடங்கொண்டு, உடனே புறப்பட்டு ஐவருங் கண்வராசிரம மடைதல்)

கட். எனதாருயிர் சோதரி! இம்மகான் தவஞ்செய்யும் விந்தையைக் கண்ணுற்றனையா? இம்மகானது திருக்கருணையினாற்றான் நின்னைக்காணும்படி யேற்பட்டது. ஆகையால், நாம் யாவரு மிம்மகானைப்பணிந்து, அன்னவர் நிஷ்டை கலையும் பரியந்தம் சிச்ருஷை செய்திருப்போம்.

லீலா. அண்ணா! அப்படியே செய்வோம்.

(எல்லோரும் வந்தித்து சிச்ருஷை புரிதல்)

5-வது களம்.

(தாருவர்மா கமலாக்ஷியோடும் சூத்திரப் பரியுடனும் பிரவேசித்தல்)

கம. அடே சேவகா! ஏன் நகரத்திலிரங்காமல், நகரத்தைக்கடந்து செல்கிறாய், நகரத்துஜனங்கள்நம்மைப்பார்த்து என் பரிதபிக்கிறார்களென்றதற்கு,நீ யேதோ வித்தியாசமாக பதிலுரைக்கின்றனை?

தாரு. நங்காய்! நானுன்னை மோசஞ்செய்து என்னிருப்பிடத்திற் கழைத்துச் செல்கிறேன், இப்பரியைச் செய்த மகா சாமர்த்தியவான்யானே, இனியுனக்கொரு குறைவுமில்லையென பதிலுறைக்க வில்லையா?

கம. அடாபாவி! சண்டாளா! துரோகி! எனச்சொல்லும்போதோ மூர்ச்சித்து அவள் பரியில்விழ, தாருவர்மாபிடித்து அப்பரியை அவ்விடம் பூமியிலிறக்குதல்.

தாரு. அவள்மூர்ச்சை தெளிவித்து எழுந்ததும், ஏமதிமுகத்தையலே! இப்புரவியை இவ்விடத்திலிறக்கினேன். இந்தவிடமோ நிர்ஜனமான வனப்பிரதேசமாக ஜில்லெனக் குளிர்ந்து, பூத்துக் காய்த்து பழுத்தகனிகளோடுகூடிய தருக்களால் நிறைந்திருக்கிறது. ஆகையால். ஏ ஜலஜாக்ஷி! நின் மனோவியாகூலத்தை யகற்றி யென்முகம் பார்த்து, எனக்காறுத லுறைப்பாய்.

கமலா. ஏ பரமசண்டாளா! ஓமப்பிண்டத்தமுதை நாய் இச்சித்ததுபோல் நீயென்தன்னை யிச்சிக்கலாகாது. துரோகி! நின் யோக்கியதையையு மென்தகைமையையு யோஜித்துப்பார்? முடவன் கொம்புத்தேனுக்கிச்சித்ததுபோல் துரோகி! வீணுக ஏன் பாவத்தைக் கட்டிக்கொள்கிருய்? சாம்பலால்மூடியநெருப்பை யணைந்ததென வெண்ணி வஸ்திரத்தில்முடிய நினையாதே. முடிந்த துணியுடன் தரித்திருப்பவனையுஞ் சாம்பலாயெரித்து விடும். பாதகா! ஐயோ! யானிச்சூத்திரப்புரவியையு நினதுவணக்கமான வார்த்தையையு மெனதபலபுத்தியால் நம்பிமோசம் போனேனே. அந்தோ! பாவி! நீசெய்தமோசத்தை யிதுகாறு மெனதாருயிர்க் காதலருணர்ந்திருப்பார். அவரின்னமரைநொடியிலிவண் குறுகி நினதகங்கா

ரங்கொண்ட நெஞ்சை யிருபிளவாகப் பிளந்து விடுவார். ஆகையால், நீ செய்தது பெரும் பிழையாயினும் இதுசமயம் நீ யிவ்விடம் விட்டோடிப் பிழை மூர்க்கா!

தாரு. ஏ சித்தஜன்மயங்கும் வித்தகக்குயிலே! ஏதோ யெந்தனைப் பயமுறுத்துகின்றாய்? ஏ பேதையே! எந்தனை யின்னானென நீ யுணரவில்லை போலும்; சொல்கிறேன் கேள். யானோ தேவலோகத்தாருக்குச் சதா வுபகாரம் புரியும் விசுவபிர்ம்மாவின் குலத்துதித்த தீரன். தாருவர்மாவெனப் பெயர்பெற்றவன். சிற்பவேலையிற் றேர்ச்சியுற்றதால் மகாவல்லவனெனவும், குபேரனுங்கண்டாவல்கொள்ளுந் திரவியமும், இந்திரன் பார்த்தேங்கும் மாடமாளிகை கூடகோபுரங்களுங் கொண்டவீட்டையுடையவன். அரசர்களுங் கண்டானந்தங் கொள்ளு மாண்மையுள்ளவன். மகா தீரவீரன். நின்னைப் போலொத்தவனிதாரத்தினங்களைச் சேர்ந்து சுகங்கொடுக்கு ங்கலவியில் மாரன். வித்தையில் ஆதிசேஷனை வென்றவன். இவ்வளவு உத்தம குணங்களைக் கொண்ட வெந்தனைத் திரஸ்காரஞ் செய்யாது எந்தனுக் கிணங்குவையேல் நினக்கென் மாளிகையைத் தருகிறேன். மாளிகை நிறைந்த சகல சம்பத்தையு முனக்கே தத்தஞ் செய்கிறேன். எனது பாரியையு நினக்கேவல் செய்யப் பணிக்கிறேன். நினக்குச் சகல சுதந்திரமு மளித்து, என்னுடல், பொருள், ஆவி மூன்றையும் நினக்கேதாரைவார்த்து, நினதேவற்படி நடப்பேன். ஆயிழையாளே! என்னை வேறாக நினைத்துத்தூறாதே? நின் சித்தங்கனிந்து, எந்தனை யாதரிப்பாய் ரமணி!

கம. அடா பாவி! நீசத்துரோகி! நினது வளப்பத்தை யென்னுடன் மொழிவதனால் நினக்குக் கிடைக்கும் பிரயோஜனம் யாதுளது? நீ யெனக்குக் கொடுப்பதாகச் சொல்லு

கிற சகல வைபவங்களையும் நின் குலமாதர்களுக் களித்து, அவர்களை விவாகம் புரிந்து சுகபோகமாக விருப்பாய். தீபத்தினொளியைக் கனியென நினைந்து விழுந்து தன்னுயிரிழக்கும் விட்டிலைப்போல், மடியாதே. காமாக்கினிக்குப் பயந்து மகா பதிவிருதாக்கினியில் விழுந்து உண்ணுமற் றின்னுமலுயிரிழந்து, அனியாயமாய் மாண்டுபோகாதே. மகா பதிவிருதையாகிற வெந்தன் சாபத்தை வலுவிலேற்றுக்கொள்ளாதே. இதுவரை நீ செய்த பிழைகளை யெல்லாம் பொறுத்தேன். இனி யிங்கு நில்லாது நினது கிரகஞ்சென்று நின்னில்லாளுடன் சுகமே வாழ்ந்திருப்பாய். பதிதா! என்னெதிரில் நில்லாம லிந்தக்ஷணமே செல்.

தாரு. ஆ! மன்மதனிடையினித்தாங்கா தென்றேங்கும் மத்தகஜகும்பத்தை நிகர்த்த ஸ்தனபாரமுள்ள மாதே! நினக்கு எவ்வளவு மனவைராக்கிய மேற்பட்டது? ஓகோ வுணர்ந்தேன்; என் மனவுறுதியைச் சோதிக்கவெண்ணி சம்பாஷிக்கின்றனையோ? பூஞ்சோலையி லுறையும் பூங்கிள்ளையே! நினதாசையால் நான் படுந்தொல்லை மிகக்கஷ்டம். ஏ பங்கஜாட்சி! நீ மனமுவந்தாதரிப்பாய். நின் மனமென்ன கல்லா? அதென்முன் கரையாது நில்லா. நீ மறுத்துப் பகராது எனக்கின்பமான மொழி சொல்வாய். எந்தனை ஆர்வரித்திடர் செய்யு மன்மதனை வெல்வாய்! நான் மொழிவதற்குப் பதில் சொல்வாய். அன்றெல், என்னுயிர் நில்லா. நல மோங்கும் நாரியே! கண்டோரேங்குங் கனதனமடைந்த மங்கையே! என் மனமொத்த நங்கையே! என் கழுத்திலணிவாய் நின் செங்கையை, என் கரமளிப்பாய் நின் கொங்கையை.

கம. ஆ துரோகி! நினக்குசதடாது; நீ யெந்தன் பக்கலணுகக்கூடாது. எந்தனையிலேசாக வெண்ணி யிவ்விதம்

பேசில், என் வயற்றெரிச்சல் நின்னைக் கொல்லாதுவிடாது. நீசா! இது வுனக்கழகல்ல, நான் சொல்வது வீண்பேச்சா; அந்தோ! இனியுந்தனுக்கு விதிகிழிந்தது. உன்னுடலழியுங்காலம் வந்தது; இனி நீ யிவ்விடம் நிற்றலாகாது; என் பதிவிருதாக்கினி நின்னை யெரிக்காமல் விடாது. சண்டாளா! என்னுடல் பதறுகிறதடா; என்னுவி துடிக்கிறதடா; வேண்டாமடா; இதுவரை நீ மொழிந்த நீசவார்த்தைகளை யெல்லாந் தெய்வத்தின் பொருட்டுப் பொருத்தேன். இனி நீ யெங்கேயாவது ஓடிப்பிழை. அன்றேல், அநியாயமாய் மாண்டுபோவாய்.

தாரு. ஏ பேதைமதியுடைய பெண்ணே!நீ யிதுவரைநல்லதனத்துடன் வசப்படுவாயென நினைத்தேன்; அது வீணாயிற்று; இனி யுந்தனைப் பலாத்காரஞ் செய்தாலிவண் கூடாதென நிராகரிப்பவர்யார்? ஏ பெண்ணே! நினைக்க நினைக்க நின்னாலெந்தனுக்கு நேருவது மதனவாதையே; நல்லது இனி யுந்தனைச் சேராது இவண் அரைநிமிஷம் பொருக்கேன். கண்ணுட்டி! என் மனம் வாட்டி! முகங் கோட்டி, கை நீட்டி, பேசுவதடாது. என் பாவமுந்தனைச் சுற்றுதுவிடாது. ஏ பரிபக்குவபாலே! இனி நான்தாளேன்; உன்னைச்சேராமல் மீளேன்.

(பலாத்காரஞ் செய்ய வெத்தனித்தல்.)

கம. ஆ ஜகதீசா! பரமசண்டாளி பெண்ணுகப் பிறந்து, மாதா பிதாக்களைத் துறந்து, எந்தனுசைக் கண்ணாளன் கட்வாங்க பூபதியைப் பின்பற்றி, அவரது ஆக்ஞைப்படி யுத்தியானவனத்திருக்க, இச்சண்டாளன் பசப்பியமொழியை நம்பியபாபமோ இக்கானகத்திற் கலங்கித் தவிக்கிறேன். எந்தனைத் தேற்றுவா ரொருவருமில்லையே; ஏ லோகநாதா! ஆர்

த்தத்திராணபரரான தாம் ஏழையாகிய வெந்தனுக்கிரங்கி, எந்தனைப் பலாத்காரஞ்செய்யவாரம்பித்த இத்துரோகியை வதைத்து, எந்தனை மீட்கலாகாவா? ஏ லோகேசா ! அரகர பரமேசுவரா ! ஆ ஆ. (பிரலாபித்தல்)

தாரு. ஏ நங்காய் ! நீ யேன் வீணுகக்கண்ட க்ஷோபஞ் செய்து கொள்கிறுய் ! நினக்குத் துணையாக இங்கொருவரும் நேரார். உன்முகம் பாரார். என்மனமாறுதலடையவொரு இச்சகவார்த்தை மொழியில், இருவருக்குஞ் சுகமே. அதனுல் நினக்கு வரும் கனமே. ஏன் தூரத்தி லோடுகிறுய்? இப்படிவா? நீயே யிணங்கிவிடு. உன்னைத் தொந்திரவு செய்யாமலிருக்கிறேன்.

கம. ஏ காலன் வசப்படப்போகிற பதிதா ! என்கிட்ட வணுகாதே? அடா சண்டாளா ! ஆதியில் தாராதேவியை யிச்சித்த சந்திரன் பட்டபாடும், அகலியையை யிச்சித்த விந்திரன் கெட்டகேடும், தமயந்தியை யிச்சித்தவேடன் அடைந்த கேடும், திரௌபதியை யிச்சித்த கவுரவர் மாண்ட கதையையும், சீதையை யிச்சித்த இராவணன் தன் சுற்றத்தோடு அற்ற பெரும்போரும், நீ கதையிலாவது கேட்டதில்லையா?பதிவிருதைகளின் பாதிவிருத்தியத்தைக் கெடுக்க வெண்ணங்கொண்டவர்களிலொருவராவது பிழைத்திலர். தூர்த்தா ! வேண்டாம் வீணுனவாசை கொண்டு வாணுளழியாதே. போடாமூர்க்கா ! எட்டி நில், இனி சமீபித்தால் இக்கல்லால் கொடுப்பேனேரடி.

(மகதநாட்டிறைவன் வஜ்ஜரதெந்தனும், அவன் மந்திரி சல்லாப வாக்கியனும் வேட்டைப் படையுடன் பிரவேசித்தல்.)

வஜ். மந்திரி! நாம் இவ்வனத்தின்கண் பலதுஷ்டமிருகங்களைத் தேடிவதைத்துக் கொண்டே மனிதர் சஞ்சரித்திராத நடுக்காட்டுக்கு வந்துவிட்டோம், களையாயிருக்கிறது, சற்று இவ்வட விருட்சத்தடியிற்றங்கி யிளைப்பாருவோமா?

மந். பிரபோ! அவ்விதமே செய்வோம்.

வஜ். யாரோவொரு ஸ்திரீ ரோதனஞ் செய்கிற சப்தமென் செவிக்குப்புலப்படுகிறது; தமக்குக் கேட்கவில்லையா?

சல். இராஜசேகரா! வாத்ஸவம், யாரோவொருமாது கதறுஞ்சத்தங் கேட்பதுடன், அன்னவளை யாரோ பலாத்காரஞ் செய்வது போலும், அதற்கவள் பதறிக்கதறி வெறுத்துரையாடுவதுபோலுங் கேட்கின்றது. நாம் சீக்கிரஞ் சென்று பார்ப்போம் வாருங்கள்.

(இருவரும் அங்கோடுதல்.)

வஜ். யாரடா துஷ்டப்பயலே! மகதநாட்டை மகாபலிஷ்டனான வஜ்ரநேந்நன் யரசாளும்போது, அனியாயஞ்செய்யத்துணிந்தவன்? அம்மாதைத் தொடாதே, விலகிநில்? காமவெறிகொண்ட பயலே! இந்த கட்கத்தால் நின் கபாலத்தைப் பிளக்கிறேன். ஏ ஸ்திரீயே! நீயேன் ரோதனஞ் செய்கிறாய்? இங்கு நிற்கிற இம்மானிடன் யார்? உனக்கினி பயமில்லை. உன்னையிவன் அநியாயஞ் செய்திருந்தால் அதற்குத் தகுந்த தண்டனை விதிக்கிறேன். சங்கதியை விவரமாகச் சொல்.

கம. மகராஜ்! வந்தனம் புரிகின்றேன். ஏ இராஜபூபாலா! யான் விதர்ப்பநாட்டரசன் மகள்; கலிங்கதேசத்தரசகுமாரரான கட்வாங்க பூபதி யெந்தனை மணந்து தமது நகரத்திற்கு இச்சூத்திரப் புரவியின் மீதுவைத்துச் சென்று நகர்ப்புறத்துள்ள பூஞ்சோலையி லமர்த்தித்தன் பிதாவுக்

தென் வரவைத் தெரிவித்து, என்னை மேன்மையாக வழைத்துப்போவதாகப் புகன்று சென்ற கொஞ்ச நேரத்திற் கெல்லாம், இப்பாதகன் இச்சூத்திரப் பரியுடன் என்னிடம் வந்து தான் சேவகனென்றும், கட்வாங்க இராஜன் நகரத்திற்குச் சமீபமாயுள்ள வரண்மனையிலெந்தனைக் கொண்டுபோய் வைக்கப் பணித்தனரென்றுஞ் சொன்ன மொழியை நம்பி யிப்பரிமீதேற, இப்பாவி யென்னை யாகாயமார்க்கமாகத் தூக்கி யிவண்வந்து, தன்னைச் சேரும்படி பலாத்காரஞ்செய்கிறான். அதனால் யான் கதறினேன். ஏ பூபாலா! எந்தனை யிதுசமயங்காத்துக் காப்பாற்றி யெனது நாதருடனெந்தனைச் சேர்த்துவிடில் தமக்குக் கோடி சுகிர்தமுண்டு. வந்தனஞ் செய்கிறேன் பிரபோ!

வஜ்ஜ. பெண்மயிலே! வருத்தப்படாதே; நின்னை யாதரிக்கின்றேன். ஏ துஷ்டா! நீ கொஞ்சமு முயர்குலத்திற்பிறந்த வுத்தமியெனை நினையாது இப்படி பலாத்காரஞ் செய்யத்துணியலாமா? இதோ வுந்தனையிவ்வாளுக்கிரையிடுகிறேன். பயலே ஓடாதே! ஓடாதே! இதோ வீசுகிறேன் கட்கத்தை, ஸ்வதேவதாஸ்மரணஞ்செய்துகொள்?

(தலையை வெட்டுதல்).

(அமைச்சா! கட்கத்தை சுத்தஞ்செய்யும்)

சல்லா. பிரபோ இரத்தத்தைக்கழுவியாயிற்று. ஆயுதத்தை உரையில் போட்டுக்கொள்ளுங்கள்.

வஜ்ஜ. ஏ பெண்மணியே! தூர்த்தனை யிதோயொழித்துவிட்டேன். நீ யிதற்குச்சமீபமாக விருக்குமகதநாடாகிய வென்நகரத்துக்குவந்து அரண்மனையிலிருப்பில், நினது நாதருக்கறிவித்து, அவரை யழைத்து அவருடனுந்தனைச் சேர்த்தனுப்புகிறேன். அதுவரையில் துக்கப்படாதிரு.

கமலா, ஆபத்துவேளையிற் கார்த்திரக்ஷித்த ஆரியரே! தமது வார்த்தைக்கு மறுமொழிசொல்லத் தெரிகிலேன். தமது விருப்பத்தின் வண்ணமிதோ தம்முடைய நகரத்திற்கு வருகிறேன்.

வஜ். அமாத்தியவர்யா! நமது சைனியங்களை யெல்லாம் நகரத்திற்கு நான்கூட்டி வருகிறேன். இம்மாது நல்லாளை நீர் நமது வரண்மனையில் கொண்டுபோய் வைத்து வேண்டிய தாதியர் சேடியர் முதலியவர்களை யளித்துபசரிக்கச்சொல்லும். இதோ பின்னால் நான் வருகிறேன்.

சல். ஆக்ஞா மகராஜ்! மாதே! வாருங்கள் நாம் செல்வோம்.

(எல்லோரும் நிட்கிரமித்தல்.)

## 6-வது களம்.

(கமலாக்ஷியும் வஜ்ஜரதெந்தனும் பிரவேசிக்கிறார்கள்.)

வஜ். (மனதிற்குள்) வனத்திலிருந்து அனுப்பின கமலாட்சியைக் கண்டால் எவன் தான் மையலாகான். பிரம்ம சிருஷ்டியில் இவ்வளவு வனப்பை நான் பார்த்ததேயில்லை. அவளிருக்கு மரண்மனைக்குப்போய் அவள் மனோபாவத்தை யறிகிறேன். இதோ அரண்மனைவாயலுக்கு வந்து விட்டேன். அந்தப்புரஞ் செல்கிறேன்.

தாதி. அம்மா கமலாட்சி! அரசர் வருகிறார். எழுந்திரு, துக்கப்படாதே.

கம. (பரபரப்புடன்) பிரபோ! நமஸ்கரிக்கின்றேன்.

வஜ். சுபாங்கி! நினக்குச் சுபமுண்டாகுக.

கம. பிரபோ! சாக்ஷாத் ஜக்தீசனது கருணையினால் தமக்கு தீர்க்காயுளும், சகல வைபவமும் பெருகவுண்டாக

வேண்டும். அண்ணலே! அன்றடியாளுக் குறுதிபகர்ந்த வண்ணமெனது நாயகருக் கென்னிருப்பைத் தெரிவித்தீர்களா பிரபோ!

வஜ். ஆயிழையாளே! தெரிவிப்பினென்ன, தெரிவியாது விடிலென்ன?

கம. பிரபோ! ஏது தாமப்படி மொழிகிறீர்கள்?

வஜ். பூவையே! பூங்காவில் நீ கதறிப்பதறி நின்ற காலத்தில் யான் நின்னைப் பார்த்தது முதல் மதனன் வயப்பட்டு வாடுகிறேன். யான் நின்னை யச்சண்டாளன் கையினின்றும் விடுவித்ததுபோல் மன்மதனென்கிற பாவியிடமிருந்தென்தனைக்காப்பாற்றுவாய் காரிழையாளே!

கம. (தனக்குள்) சபாஷ் "மூன்றேமுக்கால் நாழிகை முத்துமழை பொழிந்து வாரியெடுப்பதற்குள் மண்மாரி பொழிந்ததாம்" என்பதுபோல் பரமசண்டாளனாகிய தாருவர்மா வனத்தில் நம்மைப் பலாத்காரஞ் செய்ய வாரம்பிக்க, இம்மகான் கார்த்தனரென வெண்ணிக் கிஞ்சித்தகமகிழ்ந்தேன்; அதற்குளித்துரோகி அவனிலுங்கொடிய பாதகனாய்த் தகாதவெண்ணங்கொண்டு சம்பாஷிக்கப் புகுந்தனன். என்செய்வேன், வருவதெல்லாம் வரட்டும், அனுபவிப்போம். (பிரகாசமாக) ஏ மன்னவா! சகலரையுங் காக்குந் தாமெந்தனிடமிம்மொழி பகரலாகுமா?

வஜ். ஏ பங்கஜாக்ஷி! நின்தத்தை மொழியைக் கேட்டவுடன் என்மனம் விகாரப்பட்டுயிர்போகுந் தருவாயிலிருக்கிறேன். அதற்கு நின்னதராமிர்த மளிப்பினுய்வேன்.

கம. இராஜன்! தர்ம் இவ்விதஞ் சம்பாஷிக்கத்தகுமா? இது பாபமன்றோ? ஆபத்காலத்திலிரட்சித்தவனும், இடர்தீர்

த்தவனும் பிதாவன்றே ? அவ்விதம் எந்தனது ஆபத்காலத் திற்காப்பாற்றிய தாமெந்தனுக்கு வாய்த்த தந்தையன்றே ! யான் தங்களருமைமகளன்றே ? தாமெந்தன் மீது காதல் கொள்வது முறையாகுமா ?

வஜ். ஏ சுந்தரி ! நீ மொழியுந் தர்ம சாஸ்திரம் யானுணர்ந்தம்த ; ஆயின், உந்தனைக் காப்பாற்றிய காலத்திலென் மனதிலென்ன வெண்ணத்துடன் கார்த்தேனெனவறிவை யோ? அப்போது நான் கொண்ட வெண்ணமிதுதான் ; அது தப்பன்று ; இச்சையுடனென்னை யாதரிப்பாய் ரமணி !

கம. ஏ பூபாலா ! தம்மை யுசிதகுணவள்ளலென மதித்திருந்தனன். உருத்திராக்ஷப் பூனையென அப்போதெண்ணிலேன். அந்தோ ! பாவி யான் அப்பரமசண்டாளனலவஸ்தைப் பட்ட காலையில் நீர் காப்பாற்ற தொழியில், அன்றே என் ஜீவனைத் துறந்திருப்பேன். அப்படிக்கில்லாது பசுத் தோலைப் போர்த்த புலிபோ லெந்தனுக் குதவிபுரிந்து, எந்தனையே இச்சித்தாய். ஈதுனக்கடாது, இனி யெந்தனை நீ நினைக்கவொண்ணுது. நற்சிந்தையுடனெந்தனுக்கு மொழிந்த வுறுதியின் வண்ணம் என்னுயகருடன் சேர்த்து விடாவிடினும், இவ்வந்தப் புரத்தினின்று மெந்தனை வெளிப்படுத்தில், யானெங்காவது போய்ப் பிழைத்துப் போகிறேன். அதுவே உந்தனுக்கு மேன்மை, இல்லாவிடில் நினக்கு வருவது துன்பந்தான்.

வஜ். ஏ பொற்கொடியே ! இவ்வார்த்தைகளை யெல்லாங்கேட்டு என் மனம் நின்னை யாளாது விடுமோ ? ஏ சுந்தரி! எந்தனை நீ சேரில், உந்தனை யிவ்வரசுக்கு இராணியாக்கி நானு நின்னேவல் கேட்டு நடக்கிறேன். யானே அப்படி நடக்குங்கால் மற்றுள்ளோ ரெவ்வாறிரார்கள் ? கருணை செய்வாய் கருங்குழலாளே !

கய. (தனக்குள்) ஆ! ஆ!! இப்பாவியு நம்மளவிற் கெட்ட வெண்ணங் கொண்டனன். நாமுமிவனது அரண்மனைக்குள்ளிருக்கிறோம்; இவன் வார்த்தைக் கிணங்காவிடில் பலாத்காரஞ் செய்வானென்பதில் ஐயமிலது; பலாத்காரஞ் செய்யில் நமக்கு வேறு வழியுமிலது; ஆகையால், நாமெவ்விதத்திலு மிவனை யேமாற்றிச் செல்லவேண்டும். அதற்காக இவனுக்கிதமொழி பகறி, ஆசை யேற்றி யொரு மாத நோன்பிருக்கிறதென்றும், அது முடிந்தவுடனிவன் மனதின்படி யிசைவதாயும் புகன்று தப்பினோமாயின் அந்தவொருமா தத்திற்குள் இங்கிருந்தெப்படியாவது தப்பியோடிவிடுவோம். அன்றேல், பிறகு யோஜித்துக் கொள்வோம். (பிரகாசமாக) ஏ சுந்தரா! ஏதோ யான் மொழிந்த வார்த்தைகளினாற்று'ம் துயரப்படலாகா. ஏதோ! தங்கள் மனதைச் சோதிக்கவேண்டி யிப்படிச் சம்பாஷித்ததன்றி வேறிலது. ஏ துரந்தரா! யானென்னூதர் வைத்துப்போன விடத்தை விட்டெது சமயம் பரமசண்டாளனை தாருவர் மாவினாற் சூத்திரப்புரவிமீது ஆகாயகமனஞ் செய்தேனே, அப்பொழுதே இம்மகா பாவிகையிலிருந்து தப்புவேனாயின், ஒருமாதவரை புருஷர்முகம் பாராதிருந்து கவுரி நோன்பியற்றுகிறதென வுறுதி செய்துகொண்டேன்; அதுபோல் தம்மால் யான் காப்பாற்றப்பட்டேனன்றோ? ஆகையால், ஒருமாத பரியந்தம் யான் கவுரி நோன்பியற்றி, அது முடிந்தவுடன் தமதுமனம்போல் நடக்கத் தயாராகவிருக்கிறேன்.

வஜ். ஏ ரமணி! மெத்த சந்தோஷம். நின் வாக்கியத்தின்படியே ஒரு மாதத்தையும் யானொரு யுகமாகக் கழிக்கின்றேன். ஆனால், என் மனோபீஷ்டம் நிறைவேறுவண்ணமெனக்கொரு வின்பமுத்தங் கொடுப்பாய்.

கம. மகாராஜன் ! முத்தங்கொடுப்பது நோன்பிற்கு பங்கமன்று ? மேலும் முத்தமளித்தால் மோகந் தீருமா ? அதிகமாகவிருத்தியாவதன்றி வேறில்லது; ஆகையால், கருணை செய்து இந்த வொருமாதத்தையு மொரு நிமிஷமாகக் கழிப்பில் அப்புறந் தாங்களெந்தனை விட்டுப் பிரிகின்றேனென்றாலும் யானரை நிமிடம் தங்களை விட்டுப் பிரியேன். தாமென் மீதெவ்வளவாசை கொண்டிருக்கிறீரோ அதைவிட நான் தங்கள் மீது மோகங்கொண்டிருக்கிறேன். வருத்த மடைய வேண்டாம். முப்பது தினத்தையு முப்பது நிமிஷமாகக் கழித்து விடில், பின் தம்மனம்போல் நடக்கலாம்.

வஜ. சபாஷ் ! பூங்குயிலாளே ! நின் மனோபாவத்தின் வண்ணமே நடக்கிறேன். ஏ சேடிகாள் ! நீங்களெல்லோருமென் கண்ணாட்டியின் மனதின்படி நடந்து, அவளது இஷ்டத்தைத் தேடிக்கொள்ளுங்கள். ஏ சுந்தரி ! நீ யினி கவுரி நோன்பியற்றலாம்; யான் சென்று வருகிறேன்.

கம. பிரபோ ! இந்த முப்பது தினங்கழிந்து, முப்பத்தோராவது தினமிவண் வரவேண்டும் மறந்து விடக்கூடாது. சென்று வாருங்கள்.

(இராஜன் நிட்கிரமித்தல்)

7-வது களம்.

கம. (தனக்குள்) ஐயோ! இதென்ன சங்கடமாகவிருக்கிறது. நாம் பிறந்து வளர்ந்த பெருமையென்ன, நாயகரையடைந்த நேர்த்தியென்ன, ஒரு நிமிஷமாவது அவரிடமடைந்த சுகமென்ன, இப்பொழுது நாம் படுமல்லலென்ன, இவையெல்லாம் ஜகதீசன் கற்பனையே யன்றி வேறிலது. இன்றோ நாமரசனுக்கு மொழிந்தவொரு மாதத்தவணையில், 29 நாளாயிற்று. இன்ன நமது நாதரது சங்கதியொன்று நமக்குத்

தெரிந்திலது. இதை விட்டுத்தப்பி யோடவு வழியிலது. இன்னமொரு தினஞ்சென்றால் மறுநாளில் என்னைச் சண்டாளன் வந்து பலாத்காரஞ் செய்வானே என் செய்வது? இதற்கு வேண்டிய சூழ்ச்சி செய்யவேண்டும். (சிறிது ஆலோசித்தல்) சபாஷ்! இதுதானுசிதம் என்னவென்றால், நாளையுதயத்தில் நாமெழுந்ததுங் கூந்தலைவிரித்துத் தாசியர் சேடியரையு மடித்து இம்சிப்போமானால், நமக்குப் பைத்தியமோ அல்லது பேபோ பிடித்துவிட்டதென நிச்சயித்து அதைத் தீர்க்க வழி தேடுவார். அதற்குள் நமது நாயகரை நாம்பார்க்கக்கிடைக்கலாம். இதுவே நல்லயோசனை. தலையை விரித்துக்கொண்டு அலங்கோலமாய் அறையைவிட்டு வேளியே போகிறேன். யாராவது சேடியெதிர்ப்பட்டால் அவளை நன்றாய் உதைக்கிறேன்.

(தலைவிரிகோலமாய் வெளியில் வருதல்.)

சேடி. அம்மா கமலாட்சி என்ன உடம்பு? ஏன் முகக்களை வாட்டமாயிருக்கிறது. ஏன் வஸ்திரங்களையும், கூந்தலையும் சரியாகக் கட்டவில்லை? ஏன் கண்ணையுருட்டி முழிக்கிறாய்? பற்களைக் கடிக்கிறாய்?

கம. சீ! சீ!! துஷ்டர்காள்! எந்தனை யாரென்று நினைத்தீர்கள்? ஆ! ஆ! ஆ! உங்களைக்கொன்று தின்றுதின்று இந்நாட்டரசனையுங் கொன்று, அவனது மணிக்குடலைத் தின்றுவிடில், யான் கடற்பூதமா? நல்லது. ஏ! ஆ! ஹோ, ஹா! ஹா, ஓடாதே! ஓடாதே, நில்! நில், உன்மாமைப்பிளந்து இரத்தங்குடித்து என் தாகத்தைத்தீர்த்துக் கொள்கிறேன். பன்னிரண்டு வருடமாக இந்த அரசப்பதர் என்னை நினைத்தானா? காமாட்சியை முறித்துத் தின்றேன், தோகிலாவை கொன்றேன், பார்வதியைப் பருகினேன், இப்போது கமலாட்சியை கணக்கிட வந்திருக்கிறேன்.

8-வது களம்

வஜ். அமைச்ச! நாம் கானகத்தி லிருந்தழைத்து வந்த பெண்மணியாள் எந்தனுக்கு மொழிந்த ஒரு மாதத்தவணைக்குள். 29 நாளாயிற்று. இன்று ஒரு தினம் கழிந்தால் நாளையதினம் நமக்கு விவாகம் ஏற்படப்போகிறது. அதற்கு நகரத்தை யலங்கரிக்கச் செய்யும்.

தாதி. இராஜ பூபாலா! அபயம், அபயம், காருங்கள் காருங்கள், தப்பி வந்து விட்டோம். இனிப்போகோம்.

வஜ். (பரபரப்புடன்) தாதிகாள்! என்ன விசேஷம்? என் கண்மணி யேதாவது தெரிவிக்கும்படி பணித்தனளா? என்ன தெரிவித்தாள்? ஏன் அலறிக்கொண்டு வந்தீர்கள்? உங்களை யாராவது துஷ்டர்கள் கண்டாசைகொண்டு துரத்தினர்களா? சீக்கிரமறிவியுங்கள்.

தாதி. மகராஜ்! இராத்திரி தமது காதலிக் குபசாரணை புரிந்து, அவள் சயனித்துக் கொண்டபிறகு நாங்கள் சயனித்தோம், உதயத்தில் நாங்களெழுவதற்குள் படுக்கையிலிருந்தே ஏதோ உளறிக் கொண்டெழுந்தாள். யாங்களெழுந்து என்னவென்று கேட்க, ஆர்வரித் தெங்களை யெல்லாமோடவோட வடித்துத்துஷ்டைகளா வுங்களைக் கொன்று தின்று, உங்களரசனது மணிக்குடலையும் தின்னுவிடில், யான்கடற்பூதமா பாரென்று எங்களைத்துரத்திக் கொண்டுவர நாங்கள் தப்பியோடி வந்தோம்.

வஜ். சிறிது ஆலோசித்து, அமைச்ச! இதென்ன விபரீதம்? யான் கொண்டவெண்ண முற்றுமாறி, எந்தனைத் துயரக்கடலில் மூழ்கச்செய்தனவே. அந்தோ! இனி யாறுவனோ மனந்தேறுவனோ? அமாத்தியா! என் புத்தி மயங்குகின்றதே; இவ்விதிக்கு யான் ஏயென் செய்வேன்.

சல். அரசரேறே! துயரமுறவேண்டாம். அப்பெண் மணி மிருந்த வுல்லாஸவதி யென்பதும், தமக்குரிய நாயகி தானென்பதும் யான் நன்குணர்வேன். அம்மடமயிலுந் தம்மைமணஞ்செய்ய வெண்ணியிருந்ததிலும் யாதுஞ்சந்தேகமிலது. ஆயினும், அன்னவளுக்கு இக்கதி நேர்ந்ததை யாலோசிக்கில், அப்பாழுங் கடற்பூதத்தின் செய்கை தானென்பதற்குத் தடையில்லை. ஆகையால் மகராஜன்! நானப் பேயை யொழிக்கும் வகை செய்கிறேன். அதாவது இந்நகர்முழுவதுமோர் பறைசாற்றச் சொல்லி, இவ்விதம் பிரசுரஞ் செய்யவேண்டியது. எவ்வாறெனில், எவரொருவர் அரசர்காதலிக்கு நேர்ந்த விபத்தைத் தீர்க்கின்றாரோ, அவருக்கெனது குமாரியாகிய விலாஸவதியை மனைவியாக வளித்து, சிரேஷ்டமான சீதனங்களு மளிக்கிறேமெனப் பறைசாற்றினால், யாராவதொருமகான் பிராப்தமாகி நமது விடுக்கணகற்றுவார், ஆகையால், அவ்விதமே திட்டஞ்செய்ய உத்திரவளித்தால் செய்கிறேன்.

வஜ். அமைச்ச! தாம் மொழிந்ததைக் கேட்க யான் பெருமகிழ்ச்சி யடைந்தேன்; அன்றியு நான் றெரிவிக்கு விதமாகப் பறைசாற்றவேண்டும். யாதெனில், அரசன் காதலியாகிய கமலாக்ஷிக்கு நேர்ந்த விபத்தை விலக்குகிறவருக்கு அரசன் ஏக புத்திரியான கலாவதியையும், எனது (மந்திரி) குமரியாய விலாஸவதியையும் விவாகஞ் செய்வித்து, பாதியிராச்சியமு மளிக்கப்படு மென்பதாக விளம்பரப் படுத்துங்கள்; பின் றெய்வச் செயலுள்ளபடி யாகின்றது.

சல். மகராஜ்! அவ்விதமே செய்கின்றேன். சேவகா! நீ துரிதமாக நமது நகரத்திருக்கும் சைனியாதிபதியை யழைத்து, பட்டத்து யானைமீது பேரிகையேற்றி அரசர்மொழிந்த வண்ணம் பறை சாற்றச்சொல்? நமது ஆசார வாச

லில் விவரப்பத்திரிகை யொன்று யெழுதிக்கட்டி, யவ்விடத்தில் நீ ஜாக்ருகனாக விருந்து யாராவது மந்திரவாதிகள் வந்தாலுடனே அவர்களை யிங்கழைத்து வந்துவிடு.

சேவ. ஆக்ஞா மகராஜ்! அப்படியேசெய்கிறேன்.

(மகாமந்திரவாதியான வீரபோஜன் பிரவேசித்தல்)

வீர. (தனக்குள்) யானிவ்வுலகத்தில் ஜகத் பிரசித்த மந்திரவாதியென்றும் பெயரெடுத்துவிட்டேன். நிஜமாக எனக்கு மந்திரமொன்றுந் தெரியாதிருந்துந் தந்திரத்தினால் யான் சாகினி, டாகினி, பிரம்மராட்சசம், வேம்படியான், காட்டேரி, தலைவிரித்தான், நொண்டிமாடன், ஆலடியான், துரைக்கருப்பு முதலியவைகளை யோட்டிருக்கிறேன். பேய் பிடித்தவர்கள், என் தலைகுட்டையையும், அதில் சுற்றியிருக்கிற பலவர்ணமான துணிகளையும், தாயத்துகளையும், பட்டங்களையும், கையிலணிந்திருக்கிற செப்பு வளையங்கள், வங்கிகள், மோதிரங்கள், காப்புகள், நெற்றியிலணிந்திருக்கிற விபூதி. குங்குமம், கருப்புப்பொட்டுகள், தேகமெங்கும் திருநீறுபூசி தூக்கமுடியாத ருத்திராட்சங்களைப் பூண்டும், கையிலேந்திய வேல், முதலியவைகளைப் பார்த்தும்.ஹ்ராம்,ஹ்ரீம், ஹ்ரூமென்று கடின வுச்சாரங்களோடு கூடின சொற்களை என்னாலுச்சரிக்கக் கேட்ட வெந்தப்பேய்தான் ஓடிவிடாது. மேலும், நான் போடுகிற விகாரமுள்ள பயங்கரமான கோலங்களையும், பூஜைகள், மாப்பொம்மைகள், தூபங்கள், மணிச்சத்தங்கள், ஹோங்காரங்கள், பல்லை நெறுநெறென்று கடித்தல் முதலியவைகளை யார் பார்த்தாலும் பேய்பிடித் திராதவர்களைக் கூடத் தலைசுற்ற ஆடச்செய்வேன். என்பிரம்புப் பூசைக்கஞ்சி யோடாத பிரம்மராட்சசமுண்டோ? சபாஷ் நம்முடைய தந்திரமே தந்திரம். நாம் அனேக தேயங்களைச்

சுற்றிவந்தோம். தற்காலம் இதோ யெதிரில் தெரிகிற மகத நாட்டின் தலைமைப்பட்டணத்தில் சுவல்பகால வசித்து, அங்குள்ளவர்களுக்குப் பேயோட்டி யிரட்சைகள் கட்டிப் பின் வேறு நாடு செல்கிறேன்.

இதோ கோட்டைவாயலுக்குள் வந்துவிட்டேன். என் சாமர்த்தியத்தைச் சொல்கிறேன். ஐயா! பேயோட்டுகிறது, திருஷ்டி பரிகாரஞ்செய்கிறது, ஏவல் நீக்குகிறது, வைத்தியஞ்செய்வது, இரட்சைகள் கட்டுவது, விஷ திருஷ்டி நீக்குவது, தாயத்துகள் கட்டுவது, எந்திரங்கள் ஸ்தாபிப்பது, புதையிலெடுப்பது, முதலிய வைகளெல்லாம் செய்வேன்.

என்ன! சுமார் பத்துவீதி சுற்றிவந்தேன். ஒருவரும் என்னைக் கூப்பிடவில்லை? வேறுவீதியிற் செல்லுகிறேன் இங்கென்னமோ பறைசாற்றுகிறார்கள். அதைக் கவனித்துக் கேட்கிறேன். * * * * சபாஷ்! நல்லது. அரசன் காதலிக்கா கடற்பூதம் பிடித்திருக்கிறது. எந்தனை விட்டு விலகாது என்னுடல்நிழலைப்போற் பின்பற்றித் தொடருகிற தரித்திரத்தை விரட்டியோட்ட வேண்டுமானால், இந்நாட்டு மன்னவன் காதலியைப் பிடித்திருக்குங் கடற்பூதத்தை நமது மந்திரத்தின் தந்திரபலத்தாலோட்டி நமது தரித்திரத்தையு மதனுடனோட்டி விடவேண்டும். அதன் பின் அரசகுமாரி, மந்திரி குமாரி யிருவரையு மணந்து பாதியிராச்சியமும் பெற்றுச் சுகமே வாழலாம். இன்றுதான் நமக்கு நற்காலம் போற்றோன்றுகிறது. பலே வீரபோஜா! அஞ்சேல்? யாரடா சேவகன்?

சேவ. யாரையா என்னை இவ்விடத்திலழைத்தது?

வீர. அடே! யான்தான் மந்திரதந்திரங்களில் வல்லவனெனப்பெயர்கொண்ட வீரபோஜன். அரசன்பால் நண்ணியெனது வரவைத்தெரியப்படுத்து?

சேவ. பிரபோ! தம்மைக்கண்டவுடனே அப்பேயோடிவிடுமென்பதில் ஐயமில்லை ; தாங்கள் பாதியிராச்சியத்தையடைந்தாலெந்தனுக் கொருபைசா சம்பளஞ்சேர்த்துக்கொடுக்கவேண்டும். அப்படி யொருபைசா சேர்த்துக்கொடுக்க மனமில்லாவிடில், எனக்கிப்பொழுது மாதமொன்றுக்கு 10 ரூபாய் சம்பளம் ; அத்துடனின்னமொரு பூச்சியமட்டுமாவது சேர்த்துக்கொடுப்பீர்களா ?

வீர. அடே சேவகா ! அஞ்சேல், முன்கேட்டதுபோலொருபைசா சேர்த்துக்கொடுப்பதற்கு நமக்குப்பாதியிராச்சியமட்டிலே சொந்தமாவதால், மற்றப்பாதியரசிற்குச் சொந்தமானவருடன் கலந்துயோசனை செய்து செய்யவேண்டியதாயிருக்கிறது. அது மிகவுந்தொல்லை ; நீ மொழிந்தவண்ணமொரு பூச்சியமல்லவோ கேட்டாய் நான் மற்றொரு பூச்சியஞ் சேர்த்து இரண்டு பூச்சியந் தருகிறோம். ஜல்தி அரசன்பால் தெரியப்படுத்து.

சேவ. அடே மூடா ! நீதானா பேயை யோட்டுபவன்; உன் வள்ளலெந்தனுக்குச் செவ்வனே தெரிந்தது; ஒரு பைசா சேர்த்துக் கொடுப்பது கஷ்டம், 10 ரூபாயோடு இரண்டு பூச்சியஞ் சேர்த்துக் கொடுப்பதாகச் சொன்னீர்; அப்பொழுது ஆயிர ரூபாயாகவில்லையா? சபாஷ் ! இதைப்போற்றுனிருக்குமுன் மந்திர பிரதாபமும். நல்லது, தாமிராஜ சமுகஞ் செல்லலாம்.

வீர. போ இராஜன்! வீரபோஜன் நமஸ்கரிக்கின்றேன்.

வஜ். மங்கள முண்டாகட்டும். தாமெந்த வித்தையிற்றேர்ந்தவர் ?

வீர. அண்ணலே ! இவ்வவனி முழுவதுஞ் சுற்றி யங்கங்குள்ள மனிதர்களைப் பிடித்தாட்டங்கொள்ளுந் துஷ்டப்

பேய்களை யெனது மந்திர பெலத்தாலோட்டி, மிக விருதும் கியாதியும் பெற்ற தீர வீரபோஜனாகிய யான் நமது நகரடைந்ததும் சங்கதியறிந்து தம்மைக்கண்டு தமது காதலியைப் பற்றியிருக்கும் பேயையோட்டி மேன்மைபெற இவண் குறுகினேன்.

வஜ். போ மாந்திரிக வல்லசிகாமணி! சந்தோஷங்கொண்டேன்; துரிதமாக வென்மனக்கவலையை யாற்றில். யான் நின்னைப் பிடித்தாட்டு மேழைப்பேயை யோட்டிவிடுகிறேன். அமைச்ச! இம்மகானை நமது நாயகியி னரண்மனையிற் கொண்டுபோய்விட்டு, வேண்டிய வுபகரணங்களைச் சேகரித்துக் கொடுத்துக்கொண்டு அவணிருந்து சுப சங்கதியை வந்தெந்தனுக்குரை செய்யுங்கள்.

சல். அப்படியே செய்கிறேன் பிரபோ! ஏ மகான்! இராஜஸ்திரீயி னந்தப்புரத்தை காண்பிக்கிறேன், என்னுடன் வாருங்கள்.

(அமைச்சனும், மாந்திரீகனு நிட்கிரமித்தல்.)

10-வது களம்.

(தலையை விரித்துக்கொண்டு கமலாட்சி பிரவேசிக்கிருள்.)

கம. (மனதிற்குள்) ஆதெய்வமே எந்தனை யேனிவ்வாபத்துக்குள்ளாக்கினை? யானேது குற்றஞ்செய்தேன்? பரமசண்டாளியாகிய வெந்தனை யென்னுதரிடத்தினின்றும்பிரித்து இவ்வித ஹிம்சைக்காளாக்கினது தகுதியோ? இதுமுறையோ? ஞாயந்தானே? என்னுயக ரெந்தனைக்காணுதெப்பாடுபடுகின்ருரோ? எங்ஙனந் தேடுகின்ருரோ? தெரிகிலேன்; ஜகதீசா! இனியாவது கிருபை செய்வாய். கவுரிமனேகரா! அந்தோ! இந்நகரத்து மந்திரியு மவருடன்கூட மற்றொருபுமானும்வருகின்ருர்கள்; உற்றுநோக்கில் புதியவன்மந்

திரவாதியைப்போல் தோன்றுகிறான். நன்று, இம்மந்திரவாதியை நமது யுக்தியாலோட்டி யனுப்பவேண்டும். இவன்வந்துவவன் செய்யுஞ் செய்கைகளைக்கண்டு பின்யோஜிப்போம்.

சல். பிரபோ மாந்திரீகரே! அதோதெரிகிறதே அந்த வரண்மனையிற்றனரசன் காதலியிருக்கிறாள்; அவ்வரண்மனை நெருங்கவே யெந்தனுக்குப் பயமாயிருக்கின்றது.

வீர. பிரபோ! அதற்காகத் தாமஞ்சவேண்டுவதில்லை, இதோபாருங்கள், நம்மைக்கண்டவுட னடங்கி யுட்கார்ந்திருக்கும்படி மந்திரோச்சாடனஞ் செய்கிறேன்.

(விபூதியை யெடுத்து மந்திரித்தெறிந்து, இருவருமரண்மனைக்குச் சமீபத்திற் சென்றார்கள்.)

வீர. மகராஜ்! ஏதோ மிருந்த வார்ப்பாடஞ் செய்வதாக மொழிந்த பேயின்நடத்தையைப் பார்த்தீர்களா? இனியது இவ்விடத்தை விட்டோடுவதிலென்னதடையிருக்கிறது? வேண்டிய தேங்காய், பழம், வெற்றிலை பாக்கு சாம்பிராணி மஞ்சள், கருப்புச்சிகப்பு பச்சை ஊதாவர்ணப்பொடிகள் ஆடுகள், கோழிகள், எருமைக்கடாக்கள், கட்குடங்கள், அக்கினி யிதுகளை யழைப்பியுங்கள்.

க்ம. (தனக்குள்) ஹாஹா! இவன் மகாமந்திரவாதி போற்றோற்றுகிறது. அனேகசாமான்களை அடுக்கடுக்காக கேட்டுவிட்டான். அன்றியும், தனது மந்திரபலத்தினால் சாமடங்கியிருப்பதாகவும், மந்திரியோடு புகழ்ந்துரையாடினான். நிஜமாக பேய்பிடியாதவருக்கு இவன் மந்திரம் என்ன பிரயோசனம்? ஆனாலிவன் செய்வதைச் செய்யட்டு மென்றிருந்திடில் மந்திரவாதிக்கு மரியாதை யதிகமாய்விடும். ஆகையாலவன்மொழிந்த சாமான்களைச் சேகரிப்பதற்கு முன்னும் மந்திரி யிவ்விடம்விட்டுச் செல்வதற்கு முன்னும், இம்மந்திர

வாதியை வந்தவழி திருப்பிப் போகும்படிச் செய்யவேண்டும். இதுதான் சமயம்; அப்படியே செய்கிறேன்.

கமலாக்ஷி சமீபத்திலிருந்த வொரு இருப்புலக்கையை க்கையிற்றாக்கிக்கொண்டு கனைத்து, ஆவேசஞ் கொண்டவள்போலோடிவந்து கதவை போரடியடித்துக் கதவைத் திறந்துகொண்டு வெளியேவந்து. அட்டகாசஞ்செய்து கொக்கலி கொட்டி, மந்திரவாதியிடம் வந்து. ஏ மாந்திரிகா! நீயெந்தனது குணமறியாது நின் மந்திரபலத்தாற் கட்டுண்டிருப்பவனென நினைத்துச் சாமான்கள் சேகரிக்கக் கட்டளை யிட்டனையோ? வீணாசைகொண்டு வாளுளிழய வந்தமதிகேட மாந்திரீகா! எந்தனை யாரென் றெண்ணினாய்? இதோ வுந்தனைக்கொன்று. உன்னுதிரத்தைப்பருகி, உந்தனை யழைப்பித்த வரசனது மணிக்குடலெடுத்துப் புசிக்கின்றேன், துஷ்டா!

வீர. பிரபோ மந்திரிவர்யா! அஞ்சாதீர்கள்? இதோ இந்த விபூதியை மந்திரித்து அதன் வேகத்தை யடக்குகிறேன். (விபூதியை யெடுத்து மந்திரித்தல்.) ஹரி ஓம், நமோ பகவதி, ஓங்காளி, நாவதிர மாமிசபக்ஷணி, கார்வேந்தகட்சி, கார்மன்ன தேவதா, கவுஸ்துபசம்பு, சண்டாளி, செயமுறி, செயமுறி, அம்ச், அம்ச், அங், அங், பட் பட், வேகராபட், வேகராபோய்பட், சீகராபட், சீகராபோய்பட், செவ்வேபட், ஓங்காளி, ஓம்பிடாரி, ஓம்நமசிவாய, சை, சை துஷ்டப்பிசாசமே நில், நில்.

சம. (தனக்குள்) இதுதான் சமயமிவனையோட்ட. (பிரகாசமாக) ஹா, ஹா, ஹா, ஹே! துஷ்டா! நீயோ நினது மந்திர விபூதியாற்றடை செய்பவன்; இதோ உன் விதியுமரசனது விதியும், மந்திரியின் விதியும் மொருங்கே கிழிந்தது.

கமலாக்ஷி ஓடப்போய் வீரபோஜனது குடுமியை யெட்டிப்பிடித்து, கீழே யிழுத்து ஒருதையுதைத்து, நெஞ்சிலோரறை யறைந்து எங்கே மந்திரி? யென நோக்க, மந்திரியோடிப்போக, அத்துடன் மாந்திரீகனைவிட்டந்தப் புரத்திற்குண் ணுழைந்து கபாடபந்தனஞ்செய்து கொண்டு ஜன்னலைத்திறந்து நடக்கிற விதத்தைப் பார்த்திருந்தனள்.

வீர. ஐயோ-தெய்வமே! அனியாயமாகப் போரசைபிடித்துப் பாழும் பேயை யோட்ட இவண்குறுக, அந்தோ! ஆரம்பத்திலேயே இப்பேய் என்னுயிருக்குலை வைத்ததே? அந்தோ என்னவேகம்? ஐயோ நமது பத்தினியின் பாக்கியந்தான் நாம் பிழைத்தது; மந்திரியுமோட்டம் பிடித்தார். நாமினியிங்கு நில்லாது அரசர் பாலுஞ் செல்லாதோடவேண்டியதுதான். ஓடிப்போகின்றேன் வேறுநாட்டைநோக்கி.

(மந்திரவாதி நிட்கிரமித்தல்)

வஜ். மந்திரி வர்யா! என்னவிசேஷம்? காரியங்கைகூடிற்று? கமலாக்ஷி சுகமுற்றனளா?

சல். பிரபோ! மகராஜ்! அவ்விடஞ் சென்றவுடன் மந்திரவாதி திருநீறள்ளி யெறிந்ததும் அந்தோ! அரண்மனை பட்டபாடு மப்பெண்மயிலாள் சரீரம் பட்டபாடும், அவள் கைகொண்ட விருப்புலக்கை பட்டபாடும், முடிவிலுலக்கையைக்கீழேயெறிந்து மந்திரவாதியைப் பிடித்துப் படுத்தியபாடும் நான் சொல்லத்தரமன்று; யானவ்விடம் விட்டோடிக் கொஞ்சதூரத்தில் மறைந்திருந்து பார்த்தேன். அப்பொழுது அது மந்திரவாதியைப் பிடித்து கீழேதள்ளி உதைத்து நெஞ்சிலறைந்து திரும்பி யரண்மனைக்குள் நுழைந்து கபாடபந்தனஞ் செய்து கொண்டது. பின்னர் மந்திரவாதி யுயிர் தப்பினது போதுமென வோட்டம் பிடித்தான். இதுதான் நடந்தது பிரபோ.

வஜ். மந்திரி ! யானென் செய்வேன் ? இதை யடக்கும் வல்லவர் கடவுளொருவரன்றி வேறொருவராலும் முடியாது ஆகையால் நமது நகரத்திலுள்ள தேவாலயம் பிர்ம்மாலய முதலியவைகளில் தினோத்ஸவம், வாரோத்ஸவம், பக்ஷோத்ஸவம், மாதோத்ஸவ முதலிய வுத்ஸவங்களை நடத்தும்படி திட்டஞ் செய்யுங்கள். கடவுள்கிருபை யெவ்வாறோ, இன்னம் பார்ப்போம்.

சல். ஆக்ஞா மகராஜ்! அப்படியே செய்கிறேன்.

## 5-வது அங்கம்

### 1-வது களம்.

(லீலாவதி—கண்ணுவரைத் துதித்தல்)

(பாடல்.)

வாய்கொண் டுறைத்தலரிதென்கேன் என்செய்கேன் வள்ளலுன்சேவடிக்கண், மன்னுதுபொன்னுசை மண்ணுசைபெண்ணுசை வாய்ந்துழலுமெனதுமனது, பேய்கொண்டு களனுண்டுகோலினன் மொத்துண்டுபித்துண்டவன்குரங்கோ, பேசுறுகுலாலனற்சுழல்கின்றகிரியோ பேதைவிளையாடுபந்தோ, காய்கொண்டு பாய்கின்றவெவ்விலங்கோ பெருங்காற்றினல் சுழல்கறங்கோ, காலவடிவோவிந்திரஜாலவடிவோவெனதுகர்மவடிவோவறிகிலேன், வளமைபெறுவனந்தனில்வளர்கிஷ்டைசெய்தருளும்வேதாந்தவேதமுதலே, கன்மமெலாமகற்றுங்கண்வரெனப்பெயர் பூண்டகபடற்றமேளனவடிவே.

(கட்வாங்கன் துதித்தல்)

கழியாத வருட்கருணைப் பெருகே யென்றுந்
துண்டாத மணிவிளக்கின் ஜோதியேவா
னொழியாது கதிர்பரப்புஞ் சுடரே யன்பர்
கோவாதவின்ப மருளுமொன்றே விண்ணோர்
விழியாலு மொழியாலு மனத்தினாலும்
விழைதரு மெய்த்தவத்தாலும் விளம்பு மெந்த
வழியாலுங்கண்டு கொளற்கறிய சுத்த
மவுன வெளியூடிருந்து வயங்குந்தேவே.

(வீரவர்மன் துதித்தல்)

விளக்கறியா விருட்டறையிற் கவிழ்ந்து கிடந்தழுது விம்முகி ன்ற குழவியினும் மிகப்பெரிதுஞ்சிறியேன், அளக்கறியா துயர்க்கடலிலழுந்தி நெடுங்காலம் அலைந்தலைந்துமெலிந்த துரும்பதனின் மிகத் துரும்பேன், கிளக்கறியா கொடுமையெலாம் கிளைத்தமழுமரத் தேன் கெடுமதியேன் கடுமையானேன் கிறிபேசும் வெறியேன், களக்கறியாம்புவியிடை நானேன் பிறந்தேனந்தோ கருணைநடத் தரசே நின்கருத்தை யறியேனே,

(ஜலஜாக்ஷி துதித்தல்)

சொல்லவனே பொருளவனே துரியபதத்தவனே-தூயவனே நேயவனே சோதியுருவவனே, நல்லவனே நன்னீதியே-ஞானசபா பதியே நாயகனே தாயகனே நண்பவனே யனைத்தும், அல்லவனே யானவனே அம்மையப்பா வென்னையாண்டவனே தாண்டவனே யருட்குருவேயெல்லாம், வல்லவனே சிவகாமிவல்லி மணவாளனே மறவாத மாமுனியே வந்தருள்க விரைந்தே.

(லலிதாங்கி துதித்தல்)

கைக்கிசைந்தபொருளே யென்கருத்திசைந்தகனிவே, கண்ணே யென்கண்களுக்கே கலந்திசைந்தகண்வமாமுனியே, மெய்க்கிசைந் தவணியே பொன்போலும் புலியாடையுடுத்த புனிதனே நோய்க்கி சைந்தவுணவே யென்,னெறிக்கிசைந்த நிலையே நித்தியமே யெல்லா மாஞ்சத்தியமே உலகில், பொய்க்கிசைந்தார்காணுதே போதம்செய் மாமுனியே புன்மொழியென்றிகழாதே புனைந்துமகிழ்ந்தருளே.

(இவர்கள் துதியைக்கேட்ட கண்வர் நிஷ்டைகலைந்து.)

**கண்.** (தனக்குள் சிவோகம், சிவோகம், சச்சிதானந் தம், பிர்ம்மைவாகம், ஓம், சதாசிவ பிர்ம்மம் (பிரகாசமாக) ஏ பக்தர்காள் ! நீங்கள் துதிக்கும் பக்திக்கும் சிச்ருஷைக்கும் மெச்சினோம். ஏ கட்வாங்கா ! இனி நின்மனக்குறையக ற்று; நினது காதலியாய கமலாக்ஷி தன்னையொரு கடற் பூதம் பிடித்துக் கொண்டதாக பாசாங்கு செய்து அட்டகா

சத்துடன் வந்த மந்திரவாதிகளை யெல்லாம் விரட்டி நின் வரவுக் கெதிர்பார்த்து, மகதநாட்டிலிருக்கின்றாள். நீங்களவண் சென்றவள் பேயை யோட்டும் பாவனைபண்ணி, சூத்திரப்பரியேறி யெல்லோரு மாகாயகமனஞ்செய்து நிங்கள் நகரடைந்து சுகித்திருங்கள். எந்தனைத் தெரிசித்த வைபவத்திற்காக இதுவரை நின்னைப் பிடித்திருந்த சஞ்சித கர்மாவையின்றோடு துலைத்து விட்டோம். செல்வாய் இராஜ குலசிகாமணி !

கட். அண்ணலே ! அரன் நிகர்தபோமணி விளக்கே ! தாம் சூத்திரப் பரியேறிச் செல்லப் பணித்தீர்கள். யானப் பரிக்கெங்ஙனஞ் செலவேன் ? அதவா அப்பரிகிடைப்பினும், இத்தனைபேருமேறிச் செல்லுந்தகைமையிலதே; அதற்கென் செய்வேன் பிரபோ !

கண், வத்ஸா ! துபரப்படாதே ; நினது சூத்திரப்புரவியவ்வரசன் பாலுளது; அதைத்தருவித்து இதோவிந்தககன குளிகையை யதன் கழுத்திலணிவீர்களாயின் எத்தனைபேர்களதன்மீதாரோகணித்தாலும், அது அவரனைவரையுந் தாங்கிச்செல்லும். இக்குளிகையை பெற்றுச்செல்லுங்கள்.

(ககனகுளிகையை யளித்தல்)

(கண்வரை யெல்லோரும் பணிந்து நிட்கிரமித்தல்)

2-வது களம்.

கட். பிரியசோதரி ! நேயா ! கண்மணிகாள் ! மகான்கண்வராருளும், கமலாக்ஷியி னிருப்புந்தெரிந்து கொண்டோம். யான் குருவாகவும் நீங்களெல்லாருமெனக்குச் சீஷர்களாகவுமிருந்து மகதநாட்டுக்குப்போய் நாம் காரியசாதகஞ் செய்து கொண்டு நமது நகரஞ்செல்லவேண்டும். செல்வோம் வாருங்கள் மகதநாட்டரசன் சபையைநாடி.

லீலா. அண்ணா! தாம் மொழிந்தவண்ணம் யாங்கள் நடந்துகொள்கிறோம்; ஆயினும் நாமைவருமொன்றுசேர்ந்து அம்மன்னவன் பாலணுகுவதைவிட அந்நகர்ப் புறத்திருந்து நமது வரவைச் சேவகர்களாற்றெரிவித்து, நேரிலரசன் வந்தழைக்க நாம்செல்லில் உசிதமென நினைக்கின்றேன். பின் தங்கள் சித்தம்.

சட். எனதாருயிர்சோதரி! சமயத்துக்குத் தக்கபடி மொழிந்தாய்; உசிதம், அவ்விதமே செய்வோம்.

(எல்லோரும் மகதநாட்டை நாடிச்செல்லல்.)

கட். சோதரி! இதோ மகதநாட்டின் சமீபம் நண்ணினோம். நாம் இத்தடாகக்கரையிலிருப்பில் யாராவது வருவார்கள். அவரிடந்தெரிவிப்போம் நமது வரவை.

லீலா. அண்ணா! அதோ! யாரோ ஒருபிரபு இக்குளத்தை நோக்கி வருகிறார்.

கட். ஆம், அவன் நம்மை நோக்கித்தான் வருகிறான். நானுங்களுக்குபதேசஞ் செய்கிறபாவனையாக விருக்கிறேன், நீங்களென்னைச்சுற்றிப் பாடங்கேட்பது போலுட்காருங்கள்.

(மந்திரி சல்லாப வாக்கியன் பிரவேசிக்கிறான்)

சல். (தனக்குள்) இன்று கச்சேரிவேலை சீக்கிற முடிந்துவிட்டது. சாயந்திர வேளையில் மனக்கவலையைவிட்டு கோட்டைக்கு வெளியே போயுலாற்றி வருகிறேன். சந்தியாகாலத்தில் கோட்டை வெளிமைதானத்தில் வீசுங்காற்று என்ன ரமணீயமாயிருக்கிறது? இன்னம் அந்தத்தெப்பக்குளத்தோரம்போய் நீர்க்காற்றை யனுபவிக்கிறேன். அப்பா! காற்று எவ்வளவு குளிர்ந்திருக்கிறது! அந்தக்கரையில் யாரோ சன்னியாசிகளிரங்கி யிருக்கிறார்கள்; அவர்களை யுபசரிப்பது கிரகஸ்ததர்மமாதலால், அவர்களை வணங்கி நகருக்

கழைத்துச்சென்று பிக்ஷைசெய்து வைக்கிறேன். ஹா!ஹா! இவர்களிடத்தில் பிரம்மதேஜஸ்ஸு என்னமாய்ஜொலிக்கிறது!நமதரசிக்குப்பிடித்திருக்கும்பேய்இம்மகான்கள்முன்னில்லாது. இவர்கள் கையால் விபூதிகொடுத்தாற் போதுமானது; இவர்கள் பிரதாபத்தை யரசனுக்கறிவித்து அரசனால் இவர்களுக்கு தக்க ஆதித்தம் செய்து வைக்கவேண்டும். சமீபத்தில் போகும்போது வெகுவணக்கத்துடன் செல்லவேண்டியதால், வஸ்திரங்களை நன்றாக விடுப்பில் கட்டிக்கொள்கிறேன். சமீபத்தில்வந்து விட்டோம்; நமஸ்கரிக்கிறேன்.

பிரபோ! அடியேன் அபிவதனஞ் செய்கிறேன்.

சன் (குரு.) நாராயண, நாராயண, நாராயண. நீர்யாரப்பா? எல்லாந்துறந்த எங்களிடத்தில் எதற்காகவந்தீர்.

சல். பிரபோ! யானிந்நகரத்தரசனது மந்திரி; இந்நகரத்தரசனுடைய ஆசையனைவிக்கொரு பேய்பிடித்துப் பல வைத்தியர்களாலுந் தீராது வருத்தமுறுகின்றனர். அண்ணலே! மனமிரங்கி யரண்மனைநண்ணி, அரசன்மனங்களிக்க வப்பேயை யோட்டி யருளவேண்டும்.

சன் (குரு.) சற்று யோசிப்பதுபோல் கண்ணைமூடிப் பின்குதிறந்து, மந்திரி! அப்பெண்மயிலாளைக் கடற்பூதம் பிடித்தாட்டா நிற்கின்றதோ? இதனாலரசனுக்கு மிகவேதையோ? என்று அதைவிலக்குவோம், அரசனை யிவணழைத்துவரில், பின்னெல்லோருஞ் செல்வோம்.

சல். பிரபோ! அப்படியே அரசரையழைத்து வருகிறேன். (மனதிற்குள்) ஓ! நமதரசருக்கு நல்லகாலஞ் சனித்தது; அன்றேல், ஆயுள்நாள்வரை தீருவதில்லை யென்றிருந்தபேய் போவதற்கு வழியுண்டாய் விட்டது. அரசரை

யிப்பொழுதே போய் யழைத்துவந்து இம்மகான்கள் முன்னிலையில் விடுகிறேன். அரசனரண்மனைவாசலுக்கு வந்து விட்டோம், உள்ளேபோகிறேன். யாரடா! சேவகன்.

சேவ. சுவாமி இதோ வந்தேன்.

சல். நாம் வந்திருப்பதாக அரசருக்குத் தெரியப்படுத்து.

சேவ. சுவாமி! தங்களை யரசசமுகம் வரும்படி உத்தரவாயிற்று

3-வது களம்.

சல். பிரபோ மகராஜ! நமஸ்கரிக்கின்றேன்.

வஜ். மந்திரி! என்ன விசேஷம்? எதித்தனை பரபரப்புடன்வந்தீர்கள்?

சல். மகராஜ்! நமது நகரத்திற்கு வெளியிலுள்ளதடாகக்கரையில் நான்கு சீஷர்களால் சிச்ருஷை செய்யப்பெற்ற ஓர் மகான் வந்திருக்கிறார்; அவரிடந்தங்களுக்கு நிகழ்ந்திருக்கும் துக்கத்தைத் தெரிவித்தேன்; தங்களை யழைத்து வரும்படி அம்மகான் பணித்தனர்; அதனால் நான் துரிதமாக தங்களிடம் வந்தனன்.

வஜ். அமைச்ச! நன்று, நமது துயரம் நீங்கினதுபோல் தோற்றுகிறது; அவ்விதமே செல்வோம் வாருங்கள்.

சல். மகராஜ்! அதோ! நடுவிலுட்கார்ந்து உபதேசஞ் செய்கிறாரே அவர்தான் குரு. மற்றவர்கள் சீஷர்கள். நாம் போனதும் அவர்களை வணங்கவேண்டும்.

(இருவரும் சன்னியாசிகள் சமீபமணுகுதல்)

வஜ். பிரபோ! நமஸ்கரிக்கின்றேன்.

சன்-குரு. ஏ மகிபாலா! உனக்கு சுபமுண்டாகட்டும்.

வஜ். என் முன்னோர்கள் செய்ததவப்பேறோ, அன்

றேல் யான்செய்த பாக்கியமோ, இந்நகர் செய்த புண்ணியமோ, தங்களது சரணாரவிந்த மிந்நகர்படியப்பெற்றது. மகானுபாவா! எனது காதலிக்கணுகியிருக்கும் பேயையோட்டி யெந்தனையாதரிக்க வேண்டுகின்றேன்.

சன்-நரு. ஏ இராஜபூபாலா! அம்மாதுக்கும் நினக்கும் விவாகமாயிற்றா?

வஜ். இந்த நிமிஷவரையிலில்லை.

சன்-நரு. ஏனின்னம் விவாகமாகவில்லை?

வஜ். பிரபோ! ஒருதினம் யான் வேட்டைக்குச் சென்றிருந்தபொழுது, தாருவர்மாவென்னும் கம்பியன் சூத்திரப் பரியுடனிம்மாது நல்லாளைக் கொணர்ந்து வனத்திரக்கித்தன்னைச்சேரும்படி பலாத்காரஞ்செய்தபோது அன்னவள் பதறிக்கதற, அதைக்கேட்டயானங்ஙனஞ் சென்று அத்தாருவர்மாவை வதைத்து, அன்னவளை யரண்மனைக்கழைத்துப்போயெந்தனைச்சேரும்படி வேண்ட, அன்னவள் மறுத்துத் தனக்கொரு மாதத்துக்குக் கவுரி நோன்பிருக்கிறதென்றும், அதுகழிந்தவுடன் விவாகஞ்செய்து கொள்வதாயுமொத்துக் கொள்ள, யானுஞ்சம்மதித்திருக்க, இருபத்தொன்பது தினங்கழிந்தவுடன் முப்பதாவதுதினத்தன்று ஏதோ யிருந்தது போலிருந்து ஒரு பேய் பிடித்து ஒருவருங்கிட்ட நெருங்கக் கூடாதபடி யார்ப்பாடஞ்செய்ய, நான் வருத்தமுண்டு பல மந்திரவாதிகளைக்கொண்டு சிகிச்சைசெய்யப்பணிக்க, அவர்களவ்விடஞ்சென்று லுயிர்தப்பி வருவது கடினமாக விருக்கிறது. ஆதிமுதல் இதுவரை யவ்வியாதியைத் தீர்ப்பாரிலாது ஏங்கித் தவித்திருக்கும் வேளையிற்றமது தரிசனங்கிடைத்தது. கண்ணுதலே! ஏழையைக்கார்த்தருளவேண்டும்.

சன்-குரு. அரசே! நின்னை யாதரிக்க எண்ணங்கொண்டே இவ்வளவு தூர மிங்குவந்தோம். நகரத்திற்குள் செல்வோம் வாருங்கள்.

அர. பகவன்! இதுதான் பேய்பிடித்தாடுமென் காதலியிருக்கு மரண்மனை; எனக்குள்ளேவர வெகு பயமாயிருக்கிறது. தங்களுக்கு வேண்டியவைகளை யேவலாளர் மூலமாயனுப்புகிறேன். என்னை யிங்கு வராமலிருக்க அநுமதிகொடுக்கப் பிரார்த்திக்கிறேன்.

சன்-குரு. அரச சிரேஷ்ட! நீ வரவேண்டிய அவசியமில்லை. நாங்கள் பேயை யோட்டுவதற்குச் செய்யவேண்டிய பூஜைக்குரிய சாமான்களைமட்டும் குறைவில்லாமலனுப்பும்; நாங்கள் சென்று சீக்கிறத்தில் மங்கள சமாசார மனுப்புகிறோம், போய்வாரும்.

(அரசன் நிட்கிரமித்தல்)

(சன்னியாசிகள் அரண்மனைக்குள் பிரவேசிக்கிறார்கள்)

சம. (தனக்குள்) என்ன வாச்சரியமாயிருக்கிறது! நாமுட்கார்ந்திருந்த காலையில், நம்மை யறியாது நித்திரைவந்து நாம் கண்ணைமூட, அத்தருணத்தில் நமது நாயகர் நம்மைச் சிறைமீட்டதாகச் சொற்பனங்கண்டு விழிக்க, இவ்வஞ்சகர்த்தாக்களை நிகர்த்த வைந்து மகான்கள் பிராப்தமாயிருக்கின்றனரே; அந்தோ! இதனுண்மை நமக்கொன்றுந் தெரிந்திலதே; நன்று, என்னதான் நடக்கிறதோ பார்ப்போம்.

சன்-குரு. சிஷர்காள்! யானம்மாதிடமணுகிப்பார்த்து வருகின்றேன். நீங்களிவணிருங்கள். ஒருவரையுமுள்ளே விடவேண்டாம். யிங்கு யாரும்வர பயப்படுவது நம்முடைய நற்காலந்தான். (அந்தப்புரத்திற்குள் நுழைந்து) அதோ உட்கார்ந்திருக்கிறாள், சமீபத்திற் போய் சங்கதியைத்

தெரிவிக்கிறேன். விதர்ப்பநகருறை பூபதின் புதல்வியாய கமலாக்ஷி! பாதி யிரவில் நின்னைச் சூழ்ந்திருந்த சேவகர்களறியாது மடமானே! நின்னைக்கண்டு கூடியவனிதோ யிங்குவந்தேன். அந்தோ! பேதையே! மறுமன்ன ரரண்மனைக்குள் நினது கோமள சரீரமுலர்ந்திருக்கும் கஷ்டத்தைக் காண யான் சகிக்கவில்லை. உன்னைக்கண்டு பிடிப்பதற்காக காலத்திற்குத் தகுந்த இந்த வேஷம்போட்டேன். யென்னை யன்னியனென்று கலங்காதே.

கம. (தனக்குள்) நமது நாதரென்பதில் ஐயமிலது. (பிரகாசமாக) ஆ பிரியரமணு! மகாபாபி யான் தங்களைப் பிரிந்து படும்பாட்டைப் பார்த்தீர்களா? பிரபோ! என்ன வேஷம்? என்னகஷ்டம்? சுந்தரமேணியாய தமக்கென்ற லிப்பேர்ப்பட்ட கஷ்டம் நேர்ந்தது.

(இருவருங்கட்டி முத்தமிடல்)

அவ்விடங் கள்ளவரையில் பதுங்கிக்கொண்டிருந்த சேவகர்களில்

முதற்சேவகன். அண்ணே! ஓடிவா, நானோடுகிறேன்.

2-வது சேவகன். ஏனோடுகிறாய்? நில், நில், நில்? சங்கதியைச் சொல்?

முதற்சேவகன். மந்திரவாதி மந்திரம் போடும்போதே அப்பாழும் பிசாசு அவர்பேரில் பாய்ந்து அவர் மூக்கைக் கடித்துக்கொண்டு விடாமலிருக்கிறது. நாமிருக்கிறது தெரிந்தால் நம்மையும் தீர்த்துவிடும்.

கட். பிரியநாயகி! மற்றசங்கதிகள் பின்பேசிக் கொள்வோம். பழைய நிலமையின்படியே எனதாக்ஞைக்குப் பயந்திருப்பதுபோல் நீ யபிநயித்தால், நாம் காரியசாதகஞ் செய்துகொண்டு நமதுநகர் செல்லலாம்.

கம. கண்ணுளா! அப்படியே பாசாங்கு செய்கிறேன்.

(பிரிந்து தூரத்தில் வணக்கமாக கமலாட்சி நிற்றல்)

வஜ். அமைச்ச! பெரியோர் அரண்மனை நண்ணினரே, என்ன நடந்ததோ ஏதோ ஒன்றுந்தெரிகிலேனே?

சேவ. பிரபோ! நமஸ்கரிக்கின்றேன்.

வஜ். சேவகா! என்ன விசேஷம்?

சேவ. பிரபோ! என்ன சொல்வோம்? அந்தவைந்து மகான்களில் தலைவராயிருந்தவர் மற்ற நால்வரையும் தூரத்தில்நிறுத்தி அம்மணியின் அரண்மனைக்குட் சென்று ஏதோ மந்திரங்கள் சொன்னர். உடனே அந்த ஆவேசமோடோடியும் வந்து அம்மகானைப் பிடித்துக்கொண்டது. நாங்களோடி வந்துவிட்டோம். இதுவரை யவர் பிராணனிருக்கிறதோ வில்லையோ தெரிகிலோம்.

வஜ். ஐயோ! அமைச்ச! மகாபாவியாகினேம்; வீண்வாதத்திற்குள்ளாகினேம்; யாமோடிப்போய் அப்பேயை வணங்கியாவது மகானைவிடுவிப்போம் வாருங்கள்.

சல். மகராஜ்! அப்படியே செய்வோம்.

வஜ். ஏ குசாக்ரபுத்தே! காதலியிருக்கும் அரண்மனை வந்து விட்டோம். உள்ளேபோய்பார்ப்போம். என்னவாச்சரியம்! பிசாசமடங்கி நிற்கின்றதே! முதலில் பெரியவரைக் கண்டதும் தன்வல்லமையைக் காட்டியிருக்கும். பிறகு மந்திரசக்தியாலடங்கியிருக்கும். அது தெரியாமற் சேவகர்கள் முதலிலேயே பயந்துவிட்டார்கள். நல்லது, பெரியவரைக் கேட்கிறேன்.

பிரபோ! குருமகராஜ்! என்னசங்கதி?

தரு. ஏ இராஜன்! இது சாதாரணமான பூதமன்று; கடற்பூதம்; இது இம்மடநல்லாளை விட்டுச் சாதாரணத்தில் போகாது; அதைப்போக்க வேண்டுமானால், ஆகாயத்தில் தூக்கிக்கொண்டு பறக்கக்கூடியவொரு எந்திரம் வேண்டும் ஓமஞ்செய்வதற்குவேண்டிய விரகுகளும், குங்கிலியம், நெய் முதலிய சமான்களும் வேண்டும். இந்நகரத்து ஜனங் களெல்லா மிராஜவீதியிலிருந்து இதைப்பார்க்கவேண்டும். அதற்கேற்பாடு செய்யில் பூதத்தை யந்த எந்திரத்திலாரோ கணித்துச் சென்று சமுத்திரத்தில் ஸ்தாபித்து விட்டாற் றான் இனியொருவரையும் உபத்திரவஞ் செய்யாது. அதற் குத்தகுந்த யோசனைசெய்யுங்கள்.

வஜ். முற்றுந்துறந்த முனிவரே! ஆகாயத்தில் பறக்கக் கூடிய சூத்திரப்பரி யென்னிடத்திலிருக்கிறது. அதையான் தாருவர்மாவை வதைத்தபிறகு என்னரண்மனைக்குக் கொ ண்டுவந்து வைத்திருக்கிறேன். மற்ற சாமான்களெல்லா முன்னமே தயாரிக்கப்பட்டிருக்கின்றன. எப்படியாவது அப்பூதத்தை யோட்டிவிடவேண்டும்.

சுன்-தரு. ஏ பிசாசமே! இனி யென்கட்டளைப்படி கே ட்டு இவ்வரசன் மனங்களிக்க இம்மடநல்லாளைவிட்டு விலகி நினது ஸ்தானஞ் சொல்லுகிறாயா, இல்லையா?

கம. ஐயோ! இவ்வரசனது மணிக்குடலைத் தின்னசமயம் பார்த்திருந்தேன்; முனிநாதா! தாமெங்கிருந்தோ என்னை யகற்றவந்தீர்கள். இனியென்செய்வேன்? எப்படி யாக்ஞா பிக்கின்றீர்களோ அப்படியேநடக்கிறேன். ஆனாலெந்தனைக் கடலில் ஸ்தாபனஞ் செய்யவேண்டுமானால், அதுவரையி லெந்தனை பூஸ்பரிசமில்லாத வாகனத்தில் தூக்கிச்சென்று கடலில்விட்டு விடவேண்டும்.

சன்-தரு. நன்று, அவ்விதமே செய்வோம். சீஷர்காள்! ஓமத்தை வளர்த்துங்கள்?

சீஷ. ஏ குரோ! இதோ ஆக்ஞாபனத்தின் வண்ணம் ஓமம் வளர்த்தியாயிற்று.

சன்-தரு. ஏ ராஜன்! அச்சூத்திரப் புரவியை இவண் கொண்டுவந்தீரா?

வஜ். பகவன்! இதோ கொண்டுவந்து நிறுத்தி யிருக்கிறோம்.

சன்-தரு. (ககனகுளிகையை அந்தச் சூத்திரப்பரியின் கழுத்திற் கட்டியபிறகு) ஏ துஷ்டபிசாசமே! இதில் வந்தேறிக்கொள்?

பிசா. தபோநிதே! நீர் முதலில் ஏறிக்கொள்ளும்.

சன்-தரு. ஏ கடற்பூதமே! நானேறிக்கொண்டாயிற்று, நீ வந்தேறிக்கொள்.

பிசா. தங்கள் சீஷர்களையும் ஏறிக்கொள்ளச் சொன்னாற்றான் பிறகு யானேறிக் கொள்வேன்.

சன்-தரு. அவர்கள் ஹோமஞ் செய்ய வேண்டும். அவர்கள்வர சரிப்படாது.

பிசா. அரசன் ஹோமஞ் செய்யட்டும். இவர்கள் பரியிலிருந்தபடி மந்திரத்தை யுச்சரிக்கட்டும்.

சன்-தரு. வெகு பிடிவாதஞ் செய்கிறதடாப்பா; சீஷர்காள்! வந்திதிலாரோகணஞ் செய்யுங்கள்.

போராஜன்! அந்தக்குங்கிலியம் முதலிய ஹோமதிரவியங்களை நினதுகையால் ஹோமகுண்டத்திலாஹுதிசெய்யும்.

வஜ். குருமகராஜ்! அப்படியே செய்கிறேன்.

(குங்கிலியத்தை குண்டத்தில் போட்டதும் புகைசூழ்ந்து கொண்டது)

சன் தரு. (மெதுவாக) சிஷர்காள்! எல்லோரும் ஜாக்கிரதையாக வுட்காருங்கள். பரியை யாகாசத்திற் செலுத்துகிறேன். இதுதான்சமய நாமெல்லாரு மிதைவிட்டகல்வதற்கு.

சிஷ. எல்லாரும் நன்ருக உட்கார்ந்துவிட்டோம்.

(சூத்திரத்தைத் திருப்ப பரி ககனத்தில் கிளம்பிப்போக வாரம்பித்தது.)

சன தரு. ஏ துஷ்டாவஜ்ரதெந்தா! கலிங்கதேசத்தரசன் மகனுனகட்வாங்கனின் பத்தினியென இவளையுணர்ந்தும், அன்னவளை யென்னிடஞ் சேர்ப்பியாது, மோகித்தவுந்தனை யெந்தன் கைவாளுக்கிரை கொடுக்குங் காலமிதுவன்று; யான் நகரஞ்சென்று அதிதுரிதமாக சைனியங்களுடன் வந்து, நின் கெர்வத்தை பங்கப்படுத்தி, உன்னுயிரை யெமனுலகனுப்புகின்றேன். இப்பொழுது யானெனது நாடாகிய கலிங்கதேசஞ்செல்கிறேன்.

(சன்னியாசிகள் கமலாட்சியுடன் ஆகாயத்தில் மறைந்துபோதல்)

வஜ். அமைச்ச! ஈதென்ன மோசம்; அம்மட நல்லாளாகிய கமலாக்ஷி மகாபதிவிருதையாகையா லெனக்கிச்சைமொழிபகறி தனக்குப் பேய்பிடித்ததுபோற் பாசாங்கு பண்ணிக் கொண்டிருந்ததை யாமறியாதிருந்தது மன்றி, கலிங்கதேசத்தரச குமாரனுன கட்வாங்கன் தன்நாயகியைத் தேடமுற்றுந்துறந்து மூவாசையொழித்த மகானைப்போல் வேடங்கொண்டு நம்மை வஞ்சித்து விட்டான். அம்மகாரணவீரன் நகரஞ்சென்று திரும்பிவந்து புத்தி கற்பிக்கிறேனென

வற்புறுத்திப் போயினனே. ஐயோ! அவன் மகா ரணதீர னயிற்றே, வீணாசைகொண்டு நம்மானங் கெட்டதுமன்றி, நம துயிருக்கும், நகருக்குங்கூடக் கெடுதிதேடிக் கொண்டோமே. அந்தோ! பதிவிருதைகளை யிச்சித்தவர்கள் படும்பாடிதுதானோ? என்செய்வேன் மந்திரி; இதற்காலோசித்தொரு சூழ்ச்சி யுரைப்பீர்.

சல். அரசசிரேஷ்ட! என் துயருறுகிறீர்? இனிவருத்தமுறுவதில்பயனிலது. எனக்கொருகாரியஞ்செய்வதுஉசிதமெனத் தோன்றுகிறது. யாதெனில், அக்கமலாக்ஷியின் மீதுள்ள பேயை யோட்டுகிறவர்களுக்கு தமது குமரியையு மெனது குமரியையுங் கொடுப்பதாக வாக்களித் திருக்கிறோமன்றோ? அதுபோல் நாம் நமது கன்னிகைகளையுஞ் சிறந்த வெகுமதிகளையுங் கொண்டு சென்று அன்னவர்கள் அகமகிழ மணஞ் செய்வித்துறவாடி வருவதே மேலென வுன்னினேன். பின் றங்கள் சித்தம்.

வஜ். மந்திரிவர்யா! நன்றுமொழிந்தீர். யானெவ்வண்ணம் நினைத்தேனோ அவ்விதமே தாமும் புகன்றீர். சரி, சீக்கிரமதற்கு வேண்டிய வேற்பாடு செய்யுங்கள்.

சல். மகராஜ்! தங்கள் சித்தத்தின் வண்ணமே தயார் செய்கிறேன்.

## 4-வது களம்.

இடம்—மச்சநாட்டரசனது அரண்மனை.

பாத்திரங்கள்—அரசன் சுகுணபூஷணனும், மந்திரி சுந்தர வதனனும்.

சுகுணபூஷணனும், சந்திரவதனனும் பிரவேசித்தல்.

சுகு. அமைச்ச! என்ன வாச்சரியம்? இவண் மூன்று மகான் பிராப்தமாகி, சுவல்பதினம் நமது உத்தியானவனத்தி

ற்றங்கி நமது குமரியையும் ஜாமாதாவையும் சிச்ரூஷை புரியக் கேட்டவர்களுக்கு அவ்விதமே யாம் இயற்ற, இப்பொழுது நமது குமரி, ஜாமாதா, மகான்களிவர்களொருவரையுங் காணவில்லையெனத் தாதியர் மொழியக் கேட்டது முதல் என்மனம் பதறுகின்றது. ஆகையால், நாமிருவரும் சிறு சைனியங்களுடன் அன்னவர்களைத் தேடிக் காணப்புறப்பட வெண்ணுகிறேன். தமது கருத்து யாது?

சுந். பிரபோ! தங்கள் மனம்போல் நடக்கத் தயாராக விருக்கின்றனன். தாங்கள் துயருறவேண்டாம். இதோ சகல சைனியங்களையுந் தயார்செய்கின்றேன். நமது குமரியையும் ஜாமாதாவையுந் தேடிச் செல்வோம் வாருங்கள்.

5-வது களம்.

இடம்—சாளுவதேசத் தரசனரண்மனை.

பாத்திரங்கள்—புஷ்பபாணன், மதிவல்லபன்.

புஷ்பபாணனும், மதி வல்லபனும் பிரவேசித்தல்.

புஷ். அமைச்ச! லீலாவதி யென்னும் மாதுநல்லாள் தனக்கொரு மாதத்திற்கொரு நோன்பிருப்பதாகவும், அது முடிந்தவுட னென்தனைச் சேருவதாக வாக்களித்தவள், ஐயோ! யாதொரு பாங்கியருங்காணாது எவ்விதமாகவோ தப்பியோடியிருக்கின்றாள். அன்னவளைத் தேடிப் பிடித்து அவளைச் சேராவிடி லென்மனந்தாளாது. ஆகையால், நீர் சீக்கிரம் நமது சைனியங்களைத் தயார் செய்தால், நாம் புறப்பட்டவளைத் தேடிச்செல்வோம்.

மதி. மகராஜ்! உசிதமே மொழிந்திர்கள். யான் சகல சைனியங்களையும் தயார் செய்கிறேன்.

6-வது களம்.

இடம்—விதர்ப்பநாடு.

பாத்திரங்கள்—அரசன் சுமந்தன், மந்திரி மதிவான்.

சும. மந்திரி ! நமது பெண்ணிரத்தினமான கமலாட்சி நேற்றிரவு அந்தப்புரத்தில் சயனிக்கச் சென்றவளை யின்றுதயத்தில் காணாததால், அரண்மனை முழுதுந் தாதியர் தேடியுமகப்படவில்லையென்று சேடிகள் சொல்லுகிறார்கள். அவளின்னவிடம் போனாளென்று தெரிவதற்கில்லை. யாம் சிறுபடையுடனுடனே புறப்பட்டுத் தேடிச்சென்றால் கண்டுபிடித்துவிடலாம். சீக்கிரம் புறப்பட வெத்தனஞ் செய்யுங்கள் ?

மதி. மகாபிரபோ ! தயார்செய்து விட்டேன், புறப்படலாம்.

## 7-வது களம்.

இடம்—கலிங்கதேசத்தின் புறத்துள்ள நந்தவனம்.

கட். ஏ உயிர்த்தோழா! எனதன்பு நிறைந்த சகோதரி ! ஆருயிர் கண்மணிகாள் ! இப்பாழு மண்டபத்திற்றான் கண்மணி கமலாக்ஷியை யிறுத்திச் சென்று மிகத் துன்புற்றேன். நன்று, இனி அவரவர் சுயரூபந் தரித்துக்கொள்ளுங்கள் ?

(எல்லோரும் சுயரூப மடைதல்)

கட். யாரடா ! நந்தவனக் காவலன் ?

நந்த. பிரபோ ! நமஸ்கரிக்கின்றேன். மகராஜ் ! தங்களைக் காணாது பெரிய மகாராஜா அவர்கள் படும்பாடு என்னொரு நாவாற் சொல்லுந்தரமன்று.

கட். காவலா ! நீ யெனது பிதாவின் சமுகங்கண்ணி யானுமென்சகோதரியும், மந்திரிகுமாரன் வீரவர்மனும், எனதாருயிர்க்காதலியாய கமலாக்ஷி, ஜலஜாக்ஷி, லலிதாங்கி இவர்களுடனும், இந்தவுத்தியானவனம் வந்திருப்பதாக அதிதுரிதமாகத் தெரிவித்துவா ?

காவ. ஆக்ஞா பிரபோ !

அரசன் சோமசேகரனும், மந்திரி வித்யுத்ஜிஹ்வனும் பிரவேசித்தல்,

சோமன். அமைச்ச! என் துர்ப்பாக்கியத்தை யென்னென்று மொழிவேன்? இன்னமென்தன் கண்மணிநிகர் கட்வாங்கன், லீலாவதி யிருவரு முயிருடன் றிரும்பிவரக் காண்கிலேன். என்செய்வேன் மந்திரி!

வித். அரசரேறே! தமக்கோர் துயர்; எந்தனுக்கோ இருவிதத்துயர். எவ்வாறெனில், தமது குமாரனும் குமரியு நீங்கிய துயரத்துடன், எனது குமரி ஜலஜாக்ஷியும், குமரனை வீரவர்மனும்பிரிந்த துயரமும் என்னை வருத்துகின்றது. என்செய்வது பிரபோ! காலஞ் செய்யும் கோலத்திற் கென் செய்யலாம்.

காவல். பிரபோ! நந்தவனக்காவலன் வந்தனஞ் செய்கிறேன்.

மந்தி. காவலா! மங்களம்பவது, என்ன விசேஷம்?

காவ. பிரபோ! நமதரசகுமாரும், குமரியும், தமது குமாரும் குமரியும், இன்னஞ்சில வரசகுமரிகளுமாக நமது உத்தியானவனத்தில் வந்திருக்கிறுர்கள். அதைத் தங்களுக்குத் தெரிவிக்கச்சொன்னார்கள்.

சோம. (பரபரப்புடன்) அமைச்ச! சீக்கிரஞ் சகலசைனியங்களையுந் தயார் செய்யுங்கள், நாம்போய் நமது குமரர்களைக் கண்டாவல் தீருவோம்.

மந்தி. பிரபோ! இதோ தயார்செய்து விட்டேன்.

சோம. சரி இரதத்திலேறுங்கள், நானுமேறிக் கொள்கிறேன்.

கட். சகே வீரவர்மா! நமது பிதா நம்மையழைக்க சைனியங்களுடன் வருகிறுர். நாமிங்கு உட்கார்ந்திருக்கலா

காது. நாம் எதிர்சென்று அவர்களை வணங்கவேண்டும். எழுந்திரு போவோம்.

வீர. சரி யப்படியே செல்வோம்.

கட். பிதா! நமஸ்கரிக்கின்றேன். மந்திரிவர்யா! வந்தனஞ் செய்கின்றேன்.

வீர. இராஜபூபாலா! அபிவதனஞ் செய்கின்றேன். பிதா! வணங்குகின்றேன்.

சோம. வத்ஸா! தீர்க்காயுளாயிருப்பாயாக, ஜாமாதா! சுக ஜீவியாய் வாழக்கடவாய்.

மந்தி. குழந்தாய்! மங்களம்பவது. ஜாமாதா! சுபம்பவது.

லீலா. பிதா! தெண்டனிடுகின்றேன். பிரபோ! அடிபணிகின்றேன்.

ஜல. பிரபோ! நினது பாதத்தை யென் சிரசால் ஸ்பரிசிக்கிறேன். பிதா! நின் தாளடி பணிகின்றேன்.

கம. பிரபோ! நமஸ்கரிக்கின்றேன்.

லலி. பிரபோ! நமஸ்கரிக்கின்றேன்.

சோம. மாதர்காள்! தீர்க்க சுமங்கலியாயிருங்கள். வத்ஸா! என் மனோவியாகூலந் தீர்த்தகண்ணே! வாருங்கள் நகரஞ் செல்வோம்.

(எல்லாரும் நகரத்தை யடைதல்)

சோம. மந்திரி! நமது புத்திரரும், புத்திரிகளும் க்ஷேமமாய் வந்துசேர்ந்த சந்தோஷத்தை பட்டணத்திலிருப்பவர்களெல்லாருங் கொண்டாட இன்று ராஜதர்பாரேற்படுத்தி, அதில் எலலாருமறிய நமது குழந்தைக்கு யுவராஜ பட்டாபிஷேகஞ் செய்ய உத்தேசித்திருக்கிறேன். தர்பாரை யலங்கரித்துப் புரவாசிகளுக்குத் தெரிவியுங்கள்.

மதி. அப்படியே செய்கிறேன் பிரபோ!

சேவ. பிரபோ! நமஸ்கரிக்கின்றேன்.

அர. சேவகா! என்னவிசேஷம்.

சேவ. ராஜசேகரா! யாரோ அயலரசர் நம்முடைய நாட்டை நோக்கி சமுத்திரம்போன்ற சைனியங்களுடன் படையெடுத்து வருவதாக நமது ஒற்றர் சொல்கிறார்கள்.

அர. மந்திரி! உடனே நமது தூதர்களை யனுப்பி பகையரசரா அல்லது சினேகிதராவென்று பார்க்கச் சொல்லுங்கள்?

மந். ஏ மஹிபாலா! வருபவர்கள் பகையரசரல்லர், நமக்குவேண்டிய சினேகிதர்களான விதர்ப்பம், மச்சம், சாளுவம் இந்த தேசத்து மன்னர்களென்று தூதனால் தெரிய வந்தது; அவரவர் தனித்தனியாக உலகசஞ்சாரஞ் செய்யப் புறப்பட்டவர்கள் நமது நகருக்குச் சமீபத்தில் சந்தித்தார்களாம். அவர்களை மரியாதையாக நாமிங்கழைக்க வேண்டும். அதற்குத் தகுந்த வேற்பாடுசெய்கிறேன். தாங்கள் தர்பாருக்குச் செல்லுங்கள்.

(சகலவரசர்களும் புரஜனங்களும் தர்பாரில் வந்து கூடியிருத்தல்.)

அர. ஏ குழந்தாய் கட்வாங்கா! நீயும் எனது ஜாமாதாவும் உலக சஞ்சாரத்தில் அனுபவித்த கஷ்ட சுகங்களைத் தெரிவியுங்கள். இத்தர்பாரிலுள்ள விதர்ப்ப, மச்ச, சாளுவ தேயத்தரசர்களும், மற்ற நம் புரவாசிகளும் கேட்கட்டும்.

கட். பிதா! அப்படியே சொல்லுகிறேன். கவனமாக எல்லாருங் கேட்கவேண்டும். போ இராஜர்காள்! யானும் மந்திரி குமரனை வீரவர்மனும் ஆதியில் புறக்களை விட்டு

விளையாடுகையில், ஏன்புரு மந்திரி குமரி ஜலஜாக்ஷி வசமிருப்பதுணர்ந்தவ்விடஞ் சென்றபோது, அவளெழிலை நோக்கியான் காமுற, அன்னவளென் சகோதரர் சம்மதிக்கில் நான் சம்மதிப்பேனெனப்புகல, யான் திரும்பி வந்தனன்.

வீர. பிரபுக்காள்! யானென்புருவைத் தேடிச்செல்ல, புரு இராஜகுமரி விளையாடிக் கொண்டிருந்த வுத்தியான வனத்திலிறங்க, அன்னவளதைப் பிடித்துக் கொண்டாள். அது தெரிந்து நான் சென்று புருவை வினவ, அன்னவளென்மீது காதல் கொள்ள, யான் மறுத்தும், நகர் நீங்கிபாவது இன்புற்றிருப்போமென அவள் மொழிந்த வார்த்தையை யானுறுதியாக வெண்ணி யரசகுமரனைத் தேடிச்சென்று கண்டு, இருவருங் கூடி சமூகம் நண்ணினோம். அப்பொழுது அரசகுமரன் ரூத்திரக் குதிரை யேறிச்செல்ல, அந்த வியாகூலத்துடனிருந்த வரசரறியாது இரவிலரசகுமரியுடன் வனஞ்சென்று, உதயத்தி லிருவருங் காந்தர்மாகக் கூடிபின் வழி தொடர்ந்து செல்கையில், நடுவில் சோரர்கள் எங்களைமறித்து சகலத்தையும் பறித்துக்கொள்ள, வேசாறி பின் இராஜகுமரியின் கண்டசரத்தை விற்பதற்குச் சாளுவதேசத்து நகருக்குட் செல்ல, அவண் வந்த விருவியாபாரிகள் பொருமைகொண்டெந்தனைத் திருடனென வரசன்பால்விட, அரசனெனது வாய்ப்பிறப்பினால் லீலாவதியினிருப்பையுணர்ந்து, எந்தனைக்காவற்படுத்தி மறுதினம் விடுதலைசெய்ய, யான் வனப்புறத்துவந்து லீலாவதியைக் காணாது துயருற்றுச் சன்னியாசிவேடங்கொண்டு முகம்விட்ட வாக்கில் சென்றனன்.

லீலா. தீரர்காள்! எனது நாதர் சென்ற கொஞ்ச நேரத்திற்கெல்லாஞ் சிலபேர் சிவிகை கொணர்ந்து எந்தனை [illegible]றைத்துப் போய் சாளுவமன்னன்பால் விடுக்க, அன்னவ ளென்னைக்கண்டு [illegible]

பகறி, அன்றே ஓர்தாதியை யென்வசமாக்கி அவளுதவியாலோராணுடைபெற்று மச்சதேசமடைந்து அதற்குச் சமீபத்திலுள்ள வுத்தியான வனத்திருக்க, அந்நகரத்தரசகுமரி யென்றனைக்கண்டு காதல் கொள்ள, அவ்வரச னென்றனை யழைத்துத்தன் மகளாய லலிதாங்கியை விவாகஞ் செய்விக்க,யானெனது மர்மமெல்லா மவளுடன் மொழிந்து, அவளை யென் வசப்படுத்தி யவணிருந்தனன்.

கட. யான் புரவியேறி யாகாய கமனஞ் செய்கையில், இறங்கு வழிகாணாது, பாதியிரவில் மதிமயக்கங்கொண்டு அக்குதிரைமீது கவிழ்ந்துபடுக்க, அப்போழ்து ஒரு சூத்திரந்தென்பட, அதைத் திருக அது விதர்பபநாட்டரசன் மகளாய கமலாக்ஷியி னந்தப் புரத்திறங்க, யான் பரியை யொளித்துவைத்து அவளந்தப்புரம் நண்ணி அவளை யெழுப்பி யென் க்ஷுத்பாதையையும், மதன பாதையையும் நிவர்த்தித்து, மறுதினமே, இரவி லப்புரவியேறி யிந்நகரடைந்து உத்தியானவனத்து அவளையிறக்கி, அரசனிடந் தெரிவித்தெதிர் சென்றழைத்து வரும் வேலையிலிருக்க, எனது பிதா அப்புரவி கொணர்ந்த தாருவர்மா வென்னும்கம்மியனை யழைத்து அவனிடம் நிகழ்ந்தனவெல்லாஞ் சொல்லிப் புரவியைக்கொடுத்தனுப்ப, அவன் சோலையிலிருந்த கமலாக்ஷியை யானழைத்ததாகத் தெரிவித்து அச்சூத்திரப் பரியேற்றி யாகாயத்திற் செல்வதை யுணர்ந்த யான் மிகநொந்து வேசாறி காஷாயம்பூண்டு கமலாக்ஷியைக் காணாதுயிர் வைத்திருப்பதில்லையென்னு நோன்புடன் கமலாக்ஷியிருந்த வுத்தியானவனஞ் சென்று துயருற, அவ்விடம் ஜலஜாக்ஷிவந்து தானுங்கூட வருவேனெனவும், அன்றேல், உயிர் துறப்பேனென மொழிந்து அவளுஞ்சன்னியாசி வேடங்கொள்ள அவளுடன் நான் வனத்துச்செல்ல, நடுவில் சன்னியாசிவேடங்கொண்ட

மந்திரி குமாரனைச் சந்தித்து லீலாவதியின் பிரிவுணர்ந்து மூவருமாகக் கண்வராசிரமமடைந்து அம்மகானால் லீலாவதி யிருப்பிடந் தெரிந்து, அவ்விடம்போய், ஆண்வேடம்பு னைந்த லீலாவதியையும், லலிதாங்கியையுங்கண்டு, அன்ன வர்களையுஞ் சன்னியாசி வேடந் தரிக்கச்செய்து, ஐவருமாக கண்வராசிரம மணுக, அப்பொழுது அவர் நிஷ்டையிலிருந் ததால் அவ்வாசிரமம் தங்கினேம்.

கம. புரவிலர்காள்! பாபி தாருவர்மா எந்தனைவகை மோசமாகச் சூத்திரப்பரியேற்றி மகதநாட்டிற்குச் சமீபத்தி லிறக்கி யென்னை பலாத்காரஞ் செய்ததால் ரோதனஞ்செய் தேன். அதை அங்கு வேட்டைக்கு வந்திருந்த மகதநாட்டி றைவன் கேட்டு அவண்வந்து தாருவர்மாவைச் சங்கரித்து, எந்தனை யெந்நாயகருடன் சேர்ப்பதாக வுறுதிகூறி, நகருக் கழைத்துச் சென்று, பிறகுபலாத்காரஞ்செய்ய வாரம்பிக்க, யானொரு சூழ்ச்சிசெய்து முப்பதுநாள் நோன்பு கழிந்தவு டன் விவாகஞ் செய்துகொள்வதாக மொழிந்து கடைசி தினமே பேய்பிடித்தவள்போலார்ப்பாடஞ்செய்து அங்கிருந் தவர்களைத் தொந்திரவு செய்துகொண்டிருந்தேன்.

கட. அப்பால் கண்வர் நிஷ்டைகலைந்து கமலாக்ஷியினி ருப்பைக் கூறி ககனகுளிகை கொடுத்தனுப்ப, யாங்களைவ ரும் மகத நாட்டிற்சென்று வரசன் வேண்டுதலின் வண்ணம் கமலாக்ஷியைக் கண்ணுற்று உண்மை தெரிவித்து சூத்தி ரப்பரியேறி ககனஞ்சென்று. அவ்வரசனுக்கு வீரவாதமு ரைத்து இவண்வந்து, எங்களுருமாறிப் பழைய வடிவந்த ரித்து பிதா முதலியோரால் நகரடைந்தோம். இதுதான் எங்கள் வரலாறு.

வஜ. பிரபுக்காள்! யானே மகத நாட்டிறைவன். கம லாக்ஷியைத் தாருவர்மா விடமிருந்து காப்பாற்றிய பெரு மையையடையாது, எனது பூர்வ கர்மவினைப்பயனாற் கெட்

டவெண்ணங் கொண்டு அதுவும் பலியாது போனதினாற் கட்வாங்க பூபதிக்குப் பயந்து இவண் வந்தனன். யான் செய்த தப்பிதத்திற்கு எந்தனை அன்னவர் காத்து எனதுகுமரி கலாவதியையும், மந்திரிகுமரி விலாஸவதியையும் மணக்க வேண்டுகிறேன்.

(வஜ்ஜரதெந்தன் அரசசபையில் சாஷ்டாங்கமாக நமஸ்கரித்தல்.)

கட். பிரபோ! தாமென் செய்வீர்? எங்கள் காலவேற்றுமையானது அப்படிக் கெல்லாஞ் செய்வித்தது. ஆகையாற்றமது குமரி கலாவதியை யானும், மந்திரிகுமரி விலாஸவதியை மந்திரிகுமரனும் விவாகஞ்செய்து கொள்ளுகிறோம். தாங்களெழுதிருங்கள் மகராஜ்!

விதர். மதி. கட்வாங்கா! எந்தனைக் கண்டெனது குமரியை விவாகஞ்செய்துகொண்டு, ஸ்திரீதனவரிசையுடனனுப்பக்கொடுத்துவையாவிடினும், இப்பொழுதாவது யான் தாரைவார்க்க வேற்றுக்கொள்ள வேண்டும். (புத்திரியைக் கட்டிக்கொண்டு ஆநந்தப்படல்.)

கட். பிரபோ! அப்படியே செய்யுங்கள். எனது குற்றத்தை மன்னிக்கவேண்டுகிறேன்.

மச்ச. கட்வாங்கா! ஆணுடைதரித்து நின் சகோதரியென்குமரியை மணந்ததால், அக்குமரியை நீயே மணம் புரியவேண்டும்.

கட். அப்படியே செய்கிறேன் பிரபோ!

சோம. அமாத்தியவர்யா! சகல ராஜர்களாலும் நிறையப்பெற்ற இத்தினமே சுபதினமாகையால், நமது குமாரர்களுக்கு குமரிகளையும், மற்றுமுள்ள வரசகுமரிகளையும் விவாகஞ் செய்விக்கவேண்டியதாகையால் நகரத்திற் பறைசாற்றுவித்து நகரையலங்கிருதஞ்செய்து மணத்தை நிறைவேற்ற வேண்டும்.

வீந். மகராஜ்! சகலமுந் தயாராகிவிட்டது. வேதியர்களெல்லாம் வந்துவிட்டார்கள். ஒரு மணவரையில் சுட்வாங்கனுடன் ஜலஜாக்ஷி, கமலாட்சி, லலிதாங்கி, கலாவதியும் மற்றொரு மணவரையில் எனது புதல்வன் வீரவர்மனுடன் லீலாவதி, விலாசவதியும் மங்களஸ்நானஞ் செய்து உட்கார்ந்திருக்கிறார்கள். அரசர்களும், புரவாசிகளும் வந்து கூடிவிட்டார்கள். முகூர்த்தம் நெருங்கிவிட்டது. தாங்கள் கல்யாணப் பந்தலுக்கு வந்தபிறகு திருமங்கல்ய தாரணமாகவேண்டும்.

வஜ். இதோ வந்துவிட்டேன். மங்களவாத்திய முழங்கட்டும். பிறகு சுபலக்கினத்தில் திருமங்கல்ய தாரணமாக, வேதியர்கள் வேதமோதினர்; புஷ்பங்களையும் பொறிகளையும் தீர்க்க சுமங்கலிகள் பொழிந்தார்கள். மங்களவாத்தியங்கள் முழங்கப்பட்டது. சபையோரெல்லாம் 'ஜபவிஜயீபவ' என்று வாழ்த்தினார்கள். எங்குஞ் சுபச்சின்னங்களாகவே யிருந்தன. மங்களம், மங்களம், மங்களம்.

(இத்துடன் நாடகம் முடிந்து திறைவிடப்பட்டது)

சூத்திர. அவையின் கண்ணமர்ந்த ஆரியசிரேஷ்டர்காள்! மற்றுமுள்ள கவிசிரேஷ்டர்காள்! யானின்று நிரூபித்த இந்த நவீன நாடகத்துள்ள மாசுகளையகற்றி யெந்தனை மேன்மைப் படுத்தக் கோருகின்றேன்.

பிரபுக்களே! யானடுத்த நாடகம் "சுலோசன" வென்னுமொரு நவீன நாடகம் சிருங்கார, வீர, சோக, பக்திரஸ புஞ்சமா யியற்றி யிருக்கின்றனன். அந்நாடகத்தையுங் கண்காணித் தெங்களை கவுரவப்படுத்தக் கோருகின்றனன். சுபம், சுபம், சுபம்.

இந்நாடகத்தை யெழுதிமுடிக்க வுதவிசெய்த 'துரைசாமி ஐயர்" என்னும் நாவலருக்கு மிக்க வந்தனமளிக்கின்றோம்.